KALKI
.7.2006 ரூ.8.00
80 பக்கங்கள்

# கல்கி

குடும்பத்துடன் களிக்க...

இந்த இதழுடன்...

## கனரா வங்கி




சிறப்பு வெளியீடு



## "ஆட்சியில் பங்கு கோஷம் ஓய்ந்து போனதா?"

- மனம் திறக்கிறார் இளங்கோவன்

பட்டியல், புதுப்பேட்டை, தலைநகரம் எழுதிக்கிட்டீங்களா? ஓ.கே. அடுத்ததா 'நாளை' - இதையும் எழுதிக்குங்க. தாதா, ரௌடியிஸம் வரிசையில் இன்னொரு படம்.

ஜஸ்டினும் நட்டும் நண்பர்கள். சூழ்நிலையால, சின்ன வயசுலேயே தாதா நாயர்கிட்ட சேர்ந்து நம் பிக்கை நட்சத்திர ரௌடிகளா (!) வளர்ச்சியடையறாங்க. ஜஸ்டினுக்கு சாருலதா கூட லவ் வருது. அதே நேரத்துல இன்னொரு தாதா தணிகைகூட ஏற்படுற பிரச்னையில, நாயர் சுயநலமா நடந்துக்க, ஜஸ்டின் ஜெயிலுக்குப் போறான். நட்டுக்குக் குண்டடி பட்டு ஒரு கால் பாதிக் கப்படுது. நாயர் கேங்ல இன்னொரு ரவுடி இவங்களுக்கு எதிரா தலை யெடுக்க, அதுக்கப்புறம் நண்பர்கள் நாயரை எதிர்க்காங்களா, இல்லை மறுபடியும் சேர்ந்துக்கிறாங்களா, ஜஸ்டின் காதல் என்னாகுதுன்னு சில கிளைக் கதைகளோட சொல்லியிருக்கிற படம்தான் நாளை.

ஜஸ்டின் (ரிச்சர்ட்) - நட்டு (நட ராஜன் சுப்ரமணியன்) நட்பு உருவாகுற சூழல் நெகிழ வைக்குது. இந்தப் பக்கம் சின்னப் பையன் ஜஸ்டின் அவங்க அப்பாவோட இறுதி ஊர்வலத்துல வர, அந்தப் பக்கம் நட்டு அவங்க அப்பாவோட இறுதி ஊர்வலத்துல வர்றான். ஆதரவற்ற சூழ்நிலையில உருவாகுற அந்த நட்பும், அது சார்ந்த காட்சிகளும் கதையில அழகா இருக்குது. படத்துல ரிச்சர்ட்டை விட, அறிமுக நடிகர் நட ராஜன் நடிப்புல, டயலாக் டெலிவரில நிறையவே ஸ்கோர் பண்ணிட்டுப் போயிடுறாரு. ரிச்சர்ட் - மதுமிதா காதல் காட்சிகள்ல கலகலப்பு இருக்கு, ஆனா அழுத்தம் இல்ல. நாயரா நாசர், அளவா நடிச்சிருக் காரு. இளவரசு கலகலன்னு மனசுல நிக்காரு. போலீஸா வர்ற 'போஸ்' வெங்கட் கேரக் டரை இன்னும் டெவலப் பண்ணியிருக்கலாம்.

'நாளை இந்தக் காலம்' தவிர மற்ற பாடல்கள் சுமார் ரகம். கார்த்திக்ராஜா பின்னணி இசையிலும் மிரட்டாம மிஸ் பண்ணிட்டாரு. சண்டைக்காட்சிகள்ல, குறிப்பா சேஸிங் காட்சிகளில் கேமரா மேன் ஜி.ரமேஷ், ஜெட் வேகத்துல பட்டையைக் கிளப்பியிருக்காரு.

தாதாக்களின் வாழ்க்கையில் நாளை என்பதே கேள்விக்குறிதான் அப்படிங்கிற கருத்தை, ரெண்டு நண்பர்களின் நட் போட சொல்ல வந்திருக்கிற டைரக்டர் உதயபானு மகேஷ்வரன், திரைக்கதையில் விறுவிறுப்பையும் அழுத்தத்தையும் கோட்டை விட்டுட்டாரு. அதனால க்ளைமாக்ஸ்ல ஒருத்தரையும் உயிரோட விட்டு வைக்காம பலி கொடுத்திருந் தாலும், அது அவ்வளவா மனசைப் பாதிக்கல.

நாளை - இன்றைய ஹிட் லிஸ்ட்டில் இல்லை!

**- லஜ்ஜாவதி**



# எச்சரிக்கை மணி!

அமரர் கல்கி எழுதிய 'காதல் குறை' கட்டுரை மிக அருமை. காதலுக்கு வயது வித்தியாசம் கிடையாது என்பதற்கு, அவர் சொன்ன உதாரணங்கள் ஏற்றுக் கொள்ளக்கூடியவை.

- இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்.

உள்ளூர், வெளியூர், அயல்தேசமென முக்கோணச் செய்திகளைப் பின்னி வழங்கிய 'புது'சைக் கைதட்டி வரவேற்கிறோம்.

- எஸ்.ஏ. கேசவன்,
கு. கழுகாசலபுரம்

திமுக கூட்டணியிலுள்ள காங்கிரஸ் கட்சிக்கு ஆட்சியில் பங்கு கிடைக்காத நிலைமையை விளக்கிய கார்ட்டூன் அருமை!

- இரா. சக்கரபாணி,
மதுரை

திடீர் பரிசுப் போட்டியின் முடிவையும் உடன் அறிவித்த நீர் நிச்சயம் சரியான கறுகறுப்புத் திலகம்தான்.

- ஸ்ரீ வித்யா காளிதாஸ், சிதம்பரம்.

'பூந்திக்கொட்டை காட்டும் வழி!' படிக்க படிக்க ரொம்பவும் தித்திப்பாக இருந்தது. - ஆர். லட்சுமி, மதுரை - 16

'பாசக்கதைகள்' மூன்றும் சிறப்பு. அதிலும் புழுக்கம் கதைக்கே முதலிடம்!

- இரா.வெங்கட்ராமன், குடந்தை

பூங்காற்று தனசேகரின் கவிதைகளில் ஒவ்வொரு வரியும் தென்றலாக வீசியது.

- ஜெயந்தி சிவக்குமார், ஏற்காடு.

திருதிகு திருமாவளவனின் பேட்டி ரொம்பவே ஹாட்!

- எல்.எம். மங்கை, திருவண்ணாமலை

வட்டமேஜை



'பரிதவிப்பு' கவிதையின் மூலம் மனம் கனக்க வைத்துவிட்டார் ரேவதி!

- ரேவதிப்ரியன், ஈரோடு

'மீண்டும் சந்திப்போம்' கூட்டுக் குடும்பத்தின் அருமை பெருமைகளை, அதன் வலிமையைத் தெளிவாக விளக்கியது!

- எஸ். உஷா சுதர்சனம்,
திருச்செங்கோடு

கரடுமுரடான பாதை, முள்கீரீடம் என பேச்சுக்குச் சொன்னாலும் பதவி

சபாநாயகர் ஆவுடையப்பனின் பேட்டி நம்பிக்கையூட்டுவதாய் உள்ளது.

- லெமூரியன், திருவண்ணாமலை

'போதைப் பொருள் பயங்கரம்' வெறும் தலையங்கம் மட்டுமல்ல! பெற்றோர்கள் விழித்துக்கொள்ள கல்கி அடித்திருந்த எச்சரிக்கை மணியும்கூட.

- ஆர். ராமசுப்ரமணி, திருவாரூர்.

ஒவ்வொரு வாரமும் விறுவிறுப்புடன் உள்ளது. 'சவாலே சமாளி' அரசியல் கட்டுரை. எதிர்கட்சி, ஆளுங்கட்சி அமைச்சர்களின் காரசாரமான பதில்கள் கட்டுரையை சுவாரஸ்யப்படுத்துகின்றன!

-கே. ஆறுமுகம், சிந்தாமணி

'ஆளுக்கொரு பை', நெஞ்சை சோகத்தால் நிரப்பிவிட்டது. எய்ட்ஸின் பாதிப்பு பற்றி ஒரு பக்கத்தில் இத்தனை அடர்த்தியாய் யாரும் சொல்ல முடியாது!

- சி. இராமகிருஷ்ணன், கரூர்

அறிவுஜீவித்தனமான அகங்காரத்தில் எழுதும் இலக்கிய வேந்தர்களை நையாண்டி செய்திருந்த 'நான் பிரேதம் பேசறேன்!' அடங்காச் சிரிப்பை வரவழைத்தது.

- என். சுமதி, மதுரை

தஞ்சைத் தரணியில் எண்ணெய்ப் பனை கட்டுரை நகைச்சுவையுடன் எழுதப்பட்ட ஒரு 'வெற்றிக்கதை'யாய் மின்னியது!

- எஸ். செந்தில்குமார், தஞ்சாவூர்

## ஃபீட் பேக்!

...பிலிருப்பவர்கள் விரும்புவது மலர் மாலைகளைத் தான் என்பதை, விமர்சனத்தைத் தாங்கிக் கொள்ள முடியாத கலைஞரின் போக்கு காட்டுகிறது.

- ஆர். பிரகாஷ், பொன்மலை

சும்மா கொடுத்த அரிசி - விசிட் பகுதியில் படித்தேன். எல்லா மாதமும் இப்படிக் கொடுக்க முடியுமா? ஏன் தவறான முன்னுதாரணத்தை ஏற்படுத்துகிறார்கள்!

- வே. முருகேசன், ஆதம்பாக்கம்




# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் வேண்டுகைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

உதவி ஆசிரியர் :
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்
ச. கார்த்திகேயன்

தொலைபேசி :
2225 1522, 2225 0823,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யுஎஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

"வைகோவுக்கும் திருமாவுக்கும் அட்வான்ஸ் அனுதாபங்கள்!"



# 'ஆட்சியில்'

## - மனம் திறக்கிறார் இளங்கோவன்

'உள்ளாட்சித் தேர்தலில் தனித்துப் போட்டியிட வேண்டும்' என்று மத்திய இணை அமைச்சர் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் சொன்னதாகச் செய்திகள் வருகின்றன. "இது என்ன புது கலாட்டா?" என்றபடி அமைச்சரைச் சந்தித்தோம். "என் வாயைக் கிளறுவதே உங்கள் வேலையாகப் போய்விட்டது" என்றவர், நமது கேள்விகளுக்குப் பொறுமையுடன் பதிலளித்தார்.

உள்ளாட்சித் தேர்தலில் காங்கிரஸ் தனித்துப் போட்டியிடும் என்று நீங்கள் சொன்னதாகச் செய்திகள் வந்தனவே?

"நான் சொன்னதைத் தவறாகப் புரிந்துகொண்டு செய்தி வெளியிட்டு விட்டார்கள். உள்ளாட்சித் தேர்தலைப் பொறுத்த மட்டில் அதன் முடிவுகளால், மத்தியிலும், மாநிலத்திலும் எந்த மாற்றமும் வந்து விடாது. இது தவிர உள்ளாட்சித் தேர்தலில், போட்டியிடும் உள்ளூர்ப் பிரமுகரின் செல்வாக்கு, நடத்தை ஆகியவற்றின் அடிப்படையிலேயே முடிவுகள் அமைவதற்கான வாய்ப்புகள் உண்டு. ஆகவேதான்

உள்ளாட்சித் தேர்தலில் ஒவ்வொரு கட்சியும் தனித்துப் போட்டியிட்டால் நன்றாக இருக்கும் என்று கருத்துத் தெரிவித்தேனே தவிர, மற்றபடி இந்தக் கருத்துக்கு வேறெந்த உள்ளர்த்தமும் கிடையாது.''

**வைகோ, திருமாவளவனுடன் கைகோத்துக் கொண்டு போஸ் கொடுக்குமளவுக்கு ஜெ.வின் அணுகுமுறை மாறியிருக்கிறதே!**

''அவர் இன்னமும் தொடர்ந்து நடிகையாகத்தான் இருக்கிறார் என்பதைத்தான் இது காட்டுகிறது. 2001 தேர்தலுக்கு முன்பாக, வைகோ, பா.ம.க, மூப்பனார் வீடு என்று பல இடங்களுக்கும் அலைந்து திரிந்து கூட்டணி அமைத்தார் ஜெ. ஆனால் வெற்றி பெற்ற பின்பு அந்தக் கட்சித் தலைவர்களை எப்படி விரட்டியடித்தார் என்பது வரலாறு. எனவே வைகோவுக்கும், திருமாவளவனுக்கும் எனது அட்வான்ஸ் அனுதாபங்கள்.''

**அ.தி.மு.க தோல்வியடைந்த அதிர்ச்சி தாங்காமல் நூறுக்கு மேற்பட்டவர்கள் இறந்து போயிருக்கிறார்களே!**

''தோல்வி அதிர்ச்சியால் முடிவுகள் வெளிவந்தவுடன், ஒன்றிரண்டு பேர் இறந்து போவது இயற்கை. ஆனால் தொடர்ந்து 40 நாட்களாக, 'அதிர்ச்சியால் இறந்து கொண்டிருக்கிறார்கள்' என்று செய்தி வந்து கொண்டிருக்கும்படி செய்வது ஊரை ஏமாற்றும் வேலை. ஊரை மட்டுமல்ல, ஜெ.தன்னைத் தானேயும் ஏமாற்றிக் கொள்கிறார். சம்பவம் நடந்து நாற்பது நாட்களுக்குப் பிறகும் அதிர்ச்சியால் மரணம் என்பது நம்பக் கூடியதாக இல்லையே!''

**சட்டசபையில் காங்கிரஸ் எப்படி நடந்துகொள்ள வேண்டும்?**

''ஆக்கபூர்வமான அரசியல் கட்சியாக நடந்து கொள்ள வேண்டும். நல்ல திட்டங்களைப் பாராட்டும் அதே வேளையில் மக்களுக்கு ஊறு விளைவிக்கும் திட்டங்கள் கொண்டு வரப்பட்டால் எதிர்க்கத் தயங்கக் கூடாது.''

**கலைஞர் ஆட்சி எப்படி?**

''ஐந்து வருடங்களில் செய்ய வேண்டிய சாதனையை கலைஞர் நாற்பது நாட்களில் செய்து விட்டார். இது மட்டுமல்ல, அந்நிய முதலீடுகள் அதிக அளவில் தமிழகத்துக்கு வருவது தொழில் வளர்ச்சிக்கு உத்வேகத்தை அளிக்கும். தேய்ந்து கொண்டிருந்த தமிழக பொருளாதாரம் கலைஞர் ஆட்சியில் மீண்டும் பளிச்சிடும் என்ற நம்பிக்கை வந்து விட்டது.''

**மத்திய அமைச்சர்கள் சென்னைக்கு வந்தால் சத்தியமூர்த்தி பவனுக்கு வருவதில்லை என்று காங்கிரஸ் தொண்டர்கள் மத்தியில் மனவருத்தம் உள்ளதே!**

''இது தவறான கருத்து. சத்தியமூர்த்தி பவனில் நடக்கும் எல்லா கூட்டங்களிலும் நான் கலந்து கொள்கிறேன்.''

**தமிழக காங்கிரஸ் தலைவர் கிருஷ்ணசாமியை மாற்ற முயற்சிகள் நடக்கின்றனவா?**

''அப்படி ஏதும் இல்லை. உள்ளாட்சித்

# ங்கு கோஷம் ஓய்ந்து போனதா?'





## "காங்கிரஸ் கூட்டத்தில் மோதல் சகஜமானது!"

தேர்தல்கள் வர இருக்கும் நிலையில் கட்சி வளர்ச்சியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு உழைத்து வருகிறார் அவர். அவருக்கு நாங்கள் முழு ஆதரவு கொடுப்போம்."

**மத்திய அரசு ஐந்தாண்டுகள் நீடிக்காது என்ற கருத்து பலமாக அடிபடத் துவங்கியுள்ளதே!**

"இடதுசாரிகள் தங்கள் கருத்துகளைச் சொல்லுகிறார்கள். பொதுச் செயல் திட்டம் இருக்கிறது. அந்த அடிப்படையில் பிரதமர் அரசை நடத்திச் செல்கிறார். அரசை ஆதரிக்கும் நிலைப்பாட்டில் இருந்து ஒரு போதும் இடதுசாரிகள் மாற மாட்டார்கள்."

**ஈழப் பிரச்னை கவலையளிக்கும் விதமாக உருவெடுத்திருக்கிறதே! இந்தியா தலையிட வேண்டுமா?**

"இது பற்றி தமிழ்நாட்டிலும் கலைஞர் தலைமையில் கூட்டணித் தலைவர்கள் கூடி முடிவு செய்திருக்கிறார்கள். மத்திய அமைச்சரவை இது பற்றி முடிவு எடுக்கும். ஈழத் தமிழர்கள் சுதந்திரமாகவும், தன்மானத்துடனும் வாழவேண்டும் என்பதில் யாருக்கும் இருவேறு கருத்துகள் இருக்க முடியாது. சமீபத்திய திருப்பங்களால், தமிழகத்தில் அகதிகள் வருகை அதிகமாகிப் போய்க் கொண்டிருப்பது கவலைதரும் அம்சம்."

**ஆட்சியில் பங்கு கோஷம் ஓய்ந்து போய்விட்டதா?**

"தேர்தலுக்கு முன்பு காங்கிரஸ்காரர்கள் மத்தியில் ஏற்பட்ட 'ஆட்சியில் பங்கு' என்ற கருத்தோட்டத்துக்கு நான் வடிகாலாக இருந்தேன். தேர்தலுக்குப் பின்பு ஏற்பட்ட நிலை எல்லோருக்கும் தெரிந்தே இருக்கிறது. இந்தச் சூழலில் அன்னை சோனியாவும் கலைஞரும் எந்த முடிவையும் எடுக்காத நிலையில், இது குறித்த பிரச்னைக்கே இடமில்லை!"

**உங்கள் மகனைத் தொடர்புபடுத்தி மோதல், வழக்கு என்கிறார்களே! என்ன விவகாரம்?**

"இளைஞர் காங்கிரஸ் கூட்டத்தில் நடந்த மோதல். இது காங்கிரஸின் சகஜம்தான். போலீஸ் விசாரிக்கிறது பத்திரிகைகள் பெரிதுபடுத்துகின்றன."

**- ப்ரியன்**

"ஆஸ்பத்திரியில இருந்தப்ப எழுத்தாளர் உங்களைப் பார்க்க வந்தாராமே...?"

"ஆமா... அதைவிட கொடுமை என்னன்னா அவர் எழுதின புத்தகத்தைப் படிக்கச் சொல்லிக் குடுத்துட்டுப் போனதுதான்...!"

– ஜே.தனலக்ஷ்மி








உங்க பருப்புல
இருக்கா
Q-Three அட்வாண்டேஜ்?

Shree
JEYYAM®
SAMBAR DHALL












முளை நீக்கப்படாததால்
அதிக சுவை, மணம் மற்றும்
ஊட்டச்சத்து கொண்டது.



விரைவாக
வேகும் திறன்
கொண்டது.



சாதாரண பருப்பு 3 கிலோ
வாங்குமிடத்தில்,
ஜெய்யம் குண்டு சாம்பார் பருப்பு
2 கிலோவே போதுமானது.

**Asian Dhall Industries Ltd.** Omalur By-Pass Road, Omalur, Salem - 636 455, Tamil Nadu.
Ph: 04290-222921 / 22, Telefax: 04290-222911. E-mail: asiandhall@vsnl.net, www.asiandhall.com



இது பறவைக் காய்ச்சலின் இன்னொரு வகை இல்லை. சிக்கன் சாப்பிடுவதாலும் ஏற்படுவது இல்லை. சரி, பின் ஏன் 'சிக்கன் குன்யா' என்று பெயர் வைத்தார்களாம்? 'சிக்கன் குன்யா' என்பது தான்சானியாவில் பேச்சு வழக்கிலிருக்கும் 'ஸ்வாகிலி' மொழி வார்த்தை. இதற்கு 'அப்படியே ஆளை முடக்கிப் போடுவது' என்று அர்த்தம். 'சிக்கன் குன்யா' வைரஸ் ஜுரம் வந்த ஒருவர், அன்றாடப் பணி எதுவும் செய்ய முடியாமல் முடங்கி விடுவார் என்பதைக் குறிக்கத்தான் இந்தப் பெயர் வைக்கப்பட்டது.

### சிக்கன் குன்யா சரிதம்!

டெங்குவின் தம்பியும் மலேரியாவின் அண்ணனுமான இந்த சிக்கன் குன்யாவும் கொசு மூலம் தான் பரவுகிறது. 'ஏடிஎஸ்-ஈடிபஸ்'- இதுதான் இந்த வைரஸ் காய்ச்சலைப் பரப்பும் கொசுவின் பெயர். ஆப்பிரிக்காதான் இந்த நோயின் மூலம். அங்கு சென்று வந்த சுற்றுலாப் பயணிகள் வழியாகத்தான் இந்த நோய் ஆசிய நாடுகளில் பரவியதாகச் சொல்லப்படுகிறது. இந்தியாவுக்கும் கூட இது புதிதல்ல. 1963 மற்றும் 1971-ம் ஆண்டுகளில் வடமாநிலங்களில் இந்நோய் இருந்து மறைந்திருக்கிறது. இப்போது தமிழகத்துக்கு வந்தது அண்டை மாநிலங்களான கர்நாடகம், ஆந்திராவுக்குச் சென்று வந்தவர்கள் மூலம்தான். திருச்சி, சென்னை, திருநெல்வேலி உள்பட தமிழகத்தின் பல மாவட்டங்களில் தற்போது இந்நோயின் தாக்குதல் காணப்படுகிறது.

சிக்கன் குன்யா நோய் பாதித்த ஒருவரைக் கடிக்கும் கொசு, ஆரோக்கியமான மனிதரைக் கடிக்கும்போது நோய் அடுத்தவருக்குப் பரவுகிறது. பெண் 'ஏடிஎஸ் - ஈடிபஸ்' கொசு மட்டும்தான் மனிதனைக் கடிக்கும். கடிப்பதற்கு நேரமெல்லாம் கூட உண்டு. காலை 6 மணி முதல் 9 மணி வரையிலும் மாலை 4 மணி முதல் 7 மணி வரைதான் கடிக்கும்.



# டெங்குவின் தம்பி... மலேரியாவின் அண்ணன்!

### அறிகுறிகளும் சிகிச்சையும்...

'சிக்கன் குன்யா' ஒருவருக்கு வந்தால் தலைவலி, அடித்துப்போட்டது போன்ற உடல்வலி, கடுமையான ஜுரம் (102 டிகிரிக்கு மேல்), கை கால் மூட்டுகளில் பெரும் அவஸ்தை போன்றவை ஏற்படும். உடனே தகுந்த



மருத்துவரை அணுகி சிகிச்சை பெறுவது சாலச் சிறந்தது. இந்த விஷக் காய்ச்சலால் உயிருக்கு ஆபத்து இல்லை எனினும் கவனிக்காமல் விட்டால் மிகுந்த பிரச்னையைத் தரக் கூடியது. ஒரு வார கால தகுந்த மருத்துவ சிகிச்சையில் ஜுரம் கட்டுக்குள் வந்தாலும் மூட்டு வலி மட்டும் கொஞ்ச நாளைக்குத் தொடர்ந்து இருக்கும். ஒரு சிலருக்கு மூட்டு வலி மட்டும் குணமாக ஆண்டுக் கணக்கில் ஆவதும் உண்டு.

## எப்படித் தவிர்க்கலாம்?

வலியைக் குறைக்க சுயமருத்துவம் செய்வது மிகவும் தவறானது. இது ஆபத்தில் கொண்டுபோய் விட்டு விடக்கூடும். குழந்தைகளைவிட பெரியவர்களைத்தான் இந்நோய் அதிகம் தாக்கும். இதுவராமல் தடுக்க தடுப்பூசி எதுவும் இல்லை. அதேபோல் இதற்கென்று தனிப்பட்ட மருந்துகளும் கிடையாது. பாரசிட்டமால் போன்ற மருந்துகளை உட்கொண்டு கட்டுக்குள் கொண்டு வரலாம்.

கொசுக்களை அண்டவிடாமல் செய்வதுதான் சிக்கன் குன்யாவைத் தடுப்பதற்கான சிறந்த வழி. குப்பை சேரவிடாமல், தண்ணீர் தேங்க விடாமல் சுற்றுப்புறங்களை சுகாதாரமாக வைத்துக் கொண்டாலே போதும்... கொசுக்கள் அண்டாது. அதேபோல் இந்த நோய் சீசன் முடியும் வரையிலாவது கொசு வலை, கொசு ஒழிப்பு மருந்துகள், க்ரீம்களைப் பயன்படுத்தலாம். இந்நோய் குறித்த விழிப்புணர்வை மக்களிடம் ஏற்படுத்தி, பயத்தைப் போக்கினாலே காய்ச்சலை விட வேகமாகப் பரவும் வதந்திகளைத் தடுக்கலாம்.

- மதுமிதா



ஆந்திராவில் நரசப்பட்டினம் பகுதியில் மலைக் கிராமம் ஒன்றில் ஒரு குழந்தை கொலை செய்யப்பட்டிருப்பதாக மாவட்ட காவல்துறை துணைக் கண்காணிப்பாளருக்குத் தகவல் வந்தது. மாவட்ட போலீஸ் அதிகாரி அந்த கிராமத்தைச்



• எஃப்.வி. அருள்

# மாறு வேடத்தில் சுற்றிய ஐ.ஜி.

சென்றடைந்தபோது, இருட்டி விட்டது. குழந்தையைக் கொலை செய்தவர் என்று ஓர் இளம்பெண்ணை போலீஸ் கைது செய்திருந்தார்கள். அவள் குழந்தையைத் தூக்கிக்கொண்டு தெருவில் நடந்து போனதை நேரில் பார்த்த சாட்சி இருப்பதாக உள்ளூர் போலீஸ் சொன்னது. ஆனால், அந்தப் பெண் தான் அந்தக் குழந்தையைப் பார்த்ததே கிடையாது என்று சத்தியம் செய்தாள். மாவட்ட போலீஸ் அதிகாரி, டார்ச் லைட் ஒன்றை எடுத்து வரச் செய்து அந்தப் பெண்ணின் முகத்தை வெளிச்சத்தில் உற்றுப் பார்த்தார். தாடையின் ஒரு பக்கம் கொஞ்சம் வீங்கி இருப்பதைக் கவனித்தார். போலீசாரிடம், 'அந்தப் பெண்ணை அடித்தீர்களா?' என்று கேட்டார். அவர்கள் இல்லை என்றார்கள். அதிகாரி, 'வாயில் என்ன வைத்துக் கொண்டிருக்கிறாய்? வெளியில் துப்பு' என்று சொன்னார். அவள் தயங்கினாள். ஒரு அதட்டல் போட்டார். வேறு வழியில்லாமல், இருட்டுப் பகுதி பக்கமாகத் திரும்பி, வாயிலிருந்ததை உமிழ்ந்தாள். டார்ச் அடித்துத் தேடியபோது அந்தப் பெண் துப்பியது, கொலை செய்யப்பட்ட குழந்தையின் காதணிகள் என கண்டுபிடிக்கப்பட்டது.

அந்த போலீஸ் அதிகாரி அண்மையில் மறைந்த எஃப்.வி. அருள். முழு பெயர் ஃபெடரிக் விக்டர் அருள். தமிழ் நாட்டின் காவல்துறை தலைவராக இருந்து 1976-ல் ஓய்வு பெற்றவர். "அவர் காவல்துறையின் அனைத்து மட்டத்திலும் மட்டுமின்றி பொதுமக்கள் மத்தியிலும் நற்பெயரும், புகழும் பெற்று விளங்கியவர். அவர் காவல் நிலைய இன்ஸ்பெக்ஷனுக்கு வருகிறார் என்றால் அவரைக் காண ஊர் மக்கள் திரண்டு ஸ்டேஷன் முன்னால் கூடி விடுவார்கள். அவர் ஓய்வு பெற்ற அன்று தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்தும் போலீஸார் தங்கள் குடும்பத்துடன் சென்னை ராஜரத்தினம் ஸ்டேடியத்துக்கு வந்திருந்தது குறிப்பிடத்தக்கது" என்கிறார் முன்னாள் டி.ஜி.பி. வைகுந்த்.

"ஓமந்தூரார் முதல் கருணாநிதி வரை ராஜாஜி உட்பட ஏழு முதலமைச்சர்களின் கீழ் பணிபுரிந்தவர் அருள். சி.பி.ஐ.யின் இயக்குநராக இருந்ததுடன், புகழ்பெற்ற அகில உலக காவல் துறை அமைப்பான இன்டர்போலின் துணைத் தலைவராகவும் இருந்திருக்கிறார். இன்டர்போல், பிரான்ஸ் நாட்டில் பாரிஸ் நகருக்கு அருகில் தனது புதிய தலைமையகக் கட்டடத்துக்கு இடம் பெயர்ந்தபோது, பல நாட்டினரும் தங்கள் நாட்டிலிருந்து ஒரு கலைப் பொருளை வழங்கினார்கள். அருள், கேரளாவின் கை தேர்ந்த சிற்பி ஒருவரைக் கொண்டு செய்யப்

பட்ட இதோபதேச சிற்பத்தை வழங்கி னார்.

சென்னை நகரில் தலைவிரித்து ஆடிய விஷயம் பருத்தி சூதாட்டம். அதை இரும்புக் கரம் கொண்டு ஒடுக்கியவர் அருள். அதற்காகத் தானே மாறுவேடத்தில் நகரின் பல பகுதிகளில் பல நாட்கள் சுற்றி னார். இவரது அதிரடி நடவடிக்கை, சூதாட்டத்தின் சூத்திரதாரிகளை நடுங்க வைத்தது. பொதுமக்களே, நேரடியாக டெலிபோன் மூலமாக அருளுக்குத் தகவல்கள் தந்தார்கள். முதலமைச்சர் காமராஜருக்கு அருளை ட்ரான்ஸ்பர் செய்ய பிரஷர் வந்தது. ஆனாலும் காமராஜ் அருளுக்கு முழு சுதந்திரம் அளித்தார். கடைசியில் பருத்தி சூதாட்டத்துக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது.

**"காவல்துறையில் அவர் ஒரு மாமனிதர்"**

அருள் கையாண்ட மிகவும் பரபரப்பூட்டிய வழக்குகளில் கோவை கள்ள நோட்டு வழக்கு, விஷ ஊசி கொலை வழக்கு, சிவபுரம் நடராஜர் சிலை கடத்தல் வழக்கு, திருவான்மியூர் ஸ்டேட் பாங்க் கொள்ளை ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

தமிழக காவல் துறையின் அதிரடிப் படையினரால் வீரப்பன் கொல்லப் பட்டதையடுத்து, சென்னை கிறிஸ்தவக் கல்லூரியில் படித்தவரான அதிரடிப் படை தலைவர் விஜயகுமாருக்கு, நான் தலைவராக இருக்கும் சென்னை கிறிஸ்தவக் கல்லூரி முன்னாள் மாணவர்கள் சங்கத்தின் சார்பில் ஒரு பாராட்டு விழா நடத்தினேன். அதற்கு எம்.சி.சி. மாணவரான அருளுக்கும் அழைப்பிதழ் அனுப்பினேன். முதுமை காரணமாக விழாவுக்கு வரமுடியாது போனாலும், அற்புதமான ஆங்கிலத்தில், விஜயகுமாரையும், அதிரடிப்படையினையும் வெகுவாகப் பாராட்டி ஒரு கடிதம் எழுதி அனுப்பி இருந்தார் அருள். காவல் துறையில் அவர் ஒரு அற்புதமான மாமனிதர்" என்கிறார் வைகுந்த்.

**- எஸ்.சந்திரமௌலி**



• உள்ளாட்சி உத்வேகம்!

# கேப்டன் ஓவர்கான்ஃபிடன்ஸுடன் உள்ளாரே...?

• எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

? 'இந்தியாவில் உள்ள அறுநூறு உயர்நீதிமன்ற நீதிபதிகளில் பத்து பேர் மட்டுமே 'தலித்'. இதில் நீதி எப்படிக் கிடைக்கும்?' என்று டாக்டர் ராமதாஸ் கேட்பது சரிதானா?

! 590 நீதிபதிகளின் அறிவாற்றலையும் நேர்மையையும் சந்தேகித்து, சமுதாயத்தில் விஷமேற்றும் விஷமத்தனமான சிந்தனை. நீதி என்பதே ஜாதி - சமய சழக்குகளைக் கடந்ததுதானே!

• ஏ. சுகுமார், காட்பாடி

? உள்ளாட்சித் தேர்தல் முடிவு எப்போதும் ஆளுங்கட்சிக்கே சாதகமாக இருக்கும் சூழலில், கேப்டன் ஓவர் கான்ஃபிடன்ஸுடன் உள்ளாரே?

! சட்டமன்ற தேர்தலில் நிற்பதற்கு இருந்த நம்பிக்கை இதில் இல்லாமல் போய்விடுமா?

• விஷம சிந்தனை!



• பிரபாமணாளன்,
மேலகிருஷ்ணன்புதூர்

? எது தேசப்பற்று? எது தெய்வபக்தி?

! பராசக்தியை பாரத மாதாவாகப் பார்ப்பது தேசப்பற்று; பாரத மாதாவை பராசக்தியாகத் தொழுவது தெய்வ பக்தி - பாரதி போல!

• ஆழ்ந்த வருத்தம்!



• ஜோ.பன்னீர்செல்வம்,
சென்னை -12

? தேர்ச்சி சதவிகிதம் குறைந்த அரசு பள்ளிகளின் தலைமை ஆசிரியர்களுக்கு விளக்கம் கேட்டு நோட்டீஸ் வழங்க கல்வித்துறை இயக்குனர் உத்தரவிட்டுள்ளாரே - இதனால் அரசுப் பள்ளிகள் மேம்படுமா?

! விளக்கம் கேட்பதில் தவறில்லை. ஆனால், அது தட்டிக் கேட்பதாக மட்டும் இல்லாமல், குறை - நிறைகளைக் கேட்டறிந்து, குறைகளைக் களைவதாகவும் நிறைகளுக்குத் தட்டிக் கொடுப்பதாகவும் அமைய வேண்டும். அப்படிச் செய்தால் நிச்சயம் முன்னேற்றம் இருக்கும்.

• எச்.ஆண்டனி தமிழரசன்,
மும்பை - 17

? துபாயில் நடைபெறும் சர்வதேச பட விழாவில் சந்திரமுகி உட்பட ஏழு தமிழ்ப் படங்கள் தேர்வு செய்யப் பட்டிருப்பது பற்றி...?

! துபாயில் இந்தியப் படங்களுக்குப் பெரும் வரவேற்பு இருப்பது தெரிந்த விஷயம்தான். ஆனால், துபாய் சர்வதேச படவிழாவில் ஏழு தமிழ்ப்படங்களா? அடேயப்பா! ஒன்றாவது பரிசு வாங்கினால் ஏழு தடவை துள்ளிக் குதிக்கலாம்!

• ரஞ்சனிப்ரியன்,
பள்ளிபாளையம்

? தமிழகத்தில் உள்ள நதிகள் தூய்மைத் திட்டத்துக்கு மத்திய அரசு 228 கோடி ரூபாய் ஒதுக்கியுள்ளது குறித்து?

! நதிகள் தூய்மைத் திட்டம் என்பது மனிதக் கழிவுகள், ரசாயனக் கழிவுகள், ஆலைக் கழிவுகள், முதலியன நதிகளைப் பாழ்படுத்தாமல் கவனித்துக் கொள்வதாகும். இவற்றுக்கு நிரந்தரப் பரிகாரம் கண்டால்தான் நதிகள் தூய்மை பெறும். பணத்தை எதற்கு, எப்படிச் செலவிடுகிறார்கள் என்பதைப்

பொருத்துத்தான் வெற்றி - தோல்வி நிர்ணயிக்கப்படும்.

● **க.நா.ராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்**

***? சென்னை அருகே ரூ.1250 கோடி செலவில் நாட்டிலேயே பெரிய தகவல் தொழில் நுட்ப வளாகத்தை அமைக்க இன்ஃபோசிஸ் நிறுவனம் முன்வந்துள்ளது பற்றி?***

! பொருளாதாரம் வளரும்; மேல்தட்டினருக்கு வேலை வாய்ப்பு பெருகும்; அந்நியச் செலாவணி வரவு அதிகரிக்கும். ஆனால், இதுபோன்ற தொழில்நுட்ப வளாகங்களைக் கட்டுவதற்கான பணிகளில் ஈடுபடும் கட்டடத் தொழிலாளர்களின் வாழ்க்கை மட்டும் இன்னும் மேம்படவே இல்லை. இதை ஓர் ஆய்வு சுட்டிக்காட்டியிருக்கிறது. உயிர் / உடலுறுப்புகளைப் பணையம் வைக்காமல் அடுக்கு மாடிக் கட்டடங்கள் எழுப்ப உதவும் ஸாஃப்ட்வேரை யார் எழுதப் போகிறார்கள்!?

● **பி.ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி**

***? உலகத் தலைவர்கள் பலர் வலியுறுத்தியும் பதினாலு வருடங்களாக வீட்டுச் சிறையில் இருக்கும் ஆங் சான் சூகியை விடுதலை செய்ய மியன்மார் ராணுவம் மறுக்கிறதே - இதற்கு வலுவான காரணம் இருக்கிறதா?***

! இருக்கே! மியன்மாரில் ஜனநாயகத்தைச் சற்றும் விரும்பாத வலுவான ராணுவ ஆட்சி இருக்கே!

● **கே.கே.வெங்கடேசன், சென்னை - 37**

***? இரவில் நன்றாகத் தூக்கம்வர ஒரு வழி கூறுங்களேன்..?***

! 1. சீரியலுக்குப் பதில் சீரிய நூலொன்றில் சில பக்கங்கள் படியுங்கள்.

2. உழைத்துக் களைத்த உவகையில் உண்டு தீர்க்காமல் சிற்றுண்டியாக முடித்துக் கொள்ளுங்கள்.

3. சிற்றுண்டிக்கு முன் சிறிது உடற்பயிற்சி; உறக்கத்துக்கு முன் சற்று அமைதியான ஓய்வு. - நல்ல தூக்கம் காரன்டீ! ❐

● **ஆர்.பேபி ரேகா, குடியாத்தம்**

***? நன்கு படித்த, வசதி படைத்தவர்களுக்கு மத்தியிலும் கூட பெண் சிசுக் கொலை அதிகரித்து வருவதாக அன்புமணி ராமதாஸ் வேதனை வெளியிட்டிருப்பது எதைக் காட்டுகிறது?***

! நமது கல்வியானது பண்பாட்டையும் கற்றுத்தரவில்லை; நெஞ்சுரத்தையும் ஊட்டவில்லை; அன்பையும் பெருக்கவில்லை என்பதை!

● **ஏ.எஸ்.யோகானந்தம், கலிங்கியம்**

***? கடல்நீரைக் குடிநீராக்கும் திட்டம் பற்றி முன்னாள் முதல்வர் ஜெயலலிதா 'பழத்தை உரித்துக் கொடுத்து விட்டேன், இனி அதைச் சாப்பிட வேண்டியதுதான் பாக்கி' என்று அறிக்கை விட்டிருப்பது பற்றி...?***

! 'ஜெயலலிதா உரித்துக் கொடுத்தது அழுகல்பழம்; அதனால் தான் அது நிராகரிப்புக்கு உள்ளானது. இனி நல்ல பழமாக உரித்துத் தருவோம்' என்பது இன்றைய மாநில அரசின் எதிர்வாதம்.


• தேசமே தெய்வம்!


• தூக்கிவிடும் துபாய்!


• பதினாலாண்டு தவம்!

**ரூ.100/- பரிசு பெறுபவர்:**
ஆர்.பேபி ரேகா,
22, காளியம்மன் கோயில் தெரு,
பிச்சணாபேட்டை,
குடியாத்தம் - 632 602

**★ ரூ.50/- பரிசு பெறுபவர்:**
எச்.ஆண்டனி தமிழரசன்,
அறை எண் 156,
ஷீர்டி பாபா சால்ல்,
இந்திரா நகர்,
தாராவி, மும்பை - 400 017

தராசு



# கல்கி



2006 ஜூலை 2
விய ஆனி 18
மலர் : 64
இதழ் : 48

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## ஈழத் துயரம்!

அனுராதபுரம் கண்ணிவெடி கொடூரத்துக்குத் தாங்கள் பொறுப்பல்ல என்கிறார்கள் விடுதலைப் புலிகள். சின்ன குழந்தைகூட இதை நம்பாது! புலிகள் தலைவர் பிரபாகரன், தமது வன்முறைப் போக்கை உறுத்தலின்றி ஒப்புக் கொண்டவர். பத்திரிகை யாளர் கூட்டம் கூட்டியே பிரகடனப்படுத்தியவர்.

இந்நிலையில், இலங்கை அரசுக்கு, புலிகள் மீது ராணுவத் தாக்குதல் நடத்துவதைத் தவிர வேறு வழி என்ன இருக்க முடியும்? ஒரு பாவமும் அறியாத பொது மக்கள் பலியாகிறபோது அரசு வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்க முடியாது.

மேலும் வேதனையான விஷயம், இலங்கை ராணுவமும் ஈழத் தமிழர்களுக்குக் கொடுமைகள் இழைப்பதாக வெளிவரும் செய்திகள்! எனினும், இப்பழிவாங்கும் உணர்வு, புலிகளின் முதல் தூண்டுதலாலும் மூடப் பிடிவாதத்தினாலும் விளைவதுதான் என்பதை மறுக்க முடியாது.

எத்தனையோ முறை பேச்சு வார்த்தைக்கு அழைக்கப்பட்ட போதிலும், புலிகள் தங்கள் வறட்டுப் பிடிவாத நிலையிலிருந்து இறங்கத் தயாராயில்லை. பேச்சு வார்த்தைகள் முறிந்து போயின. அல்லது தோல்வியுற்றன. பேச்சுவார்த்தை காலகட்டத்தை ஒரு சாதகமான இடைவெளியாகப் பயன்படுத்திக் கொண்டு புலிகள் தாங்கள் இழந்த இடத்தை மீட்டார்கள்; அல்லது புதிய தாக்குதல்களை நடத்த தங்களை மேலும் ஸ்திரப்படுத்திக் கொண்டார்கள்.

இலங்கையில் அமைதி திரும்ப பாடுபட்ட நார்வே அமைதிக் குழுவே வெறுத்துப் போய்விடும் அளவுக்கு, புலிகளின் இந்த நாடகம் தொடர்ந்து, சமீபத்திய அனுராதபுர கொடூர நிகழ்வில் ஓர் உச்சகட்டத்தைத் தொட்டிருக்கிறது.




ஒரு பக்கம் இலங்கைத் தமிழர்களின் துயர் பெருகிக் கொண்டிருக்கிறது. மற்றொரு பக்கம் தமிழக மீனவர்கள் பாதுகாப்பின்றித் தவிக்கிறார்கள். இன்னொரு புறத்தில், இலங்கை அகதிகள் வரவு இந்தியாவில் அதிகரித்துக் கொண்டே இருக்கிறது. இதனால் எதிர்காலத்தில் வேறு பல சிக்கல்கள் விளையும்.

ஐரோப்பிய யூனியன் நாடுகள், விடுதலைப் புலிகளைத் தடைசெய்யப்பட்ட இயக்கமாக அறிவித்ததைத் தொடர்ந்து, அவ்வியக்கத்துக்குப் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. ஐரோப்பா வாழ் இலங்கைத் தமிழர்களிடமிருந்து கிட்டிய, அல்லது பலவந்தமாக வசூலிக்கப்பட்ட பொருளாதார உதவி (வரி?!) பெறப்படுவது கடினமாகியிருக்கிறது. இயலாமை, புலிகளின் கோபத்தைத் தூண்டி மேலும் வன்முறையில் ஈடுபடச் செய்யும். அதே நேரத்தில், பொருளாதார நெருக்கடியினால் அவர்கள் நிலை பலவீனப்படவும் செய்யும்.

இத்தருணத்தை, இலங்கை அரசும் ஈழத் தமிழர் நலனில் அக்கறை கொண்ட இந்தியா போன்ற தோழமை நாடுகளும் முறையாகப் பயன்படுத்திக் கொண்டு அமைதித் தீர்வுக்கு ஆக்கபூர்வமாக முயற்சி செய்வது நல்லது.

ஆனால், தமிழகத்து அரசியல் கட்சிகள் சில, முதல்வர் கருணாநிதி தலைமையில் ஒன்றுகூடி, தீர்மானம் நிறைவேற்றியிருப்பதுபோல் மத்திய அரசு இலங்கைப் பிரச்னையில் உட்புகுந்து செயலாற்ற முடியாது. இலங்கை மக்களின் துயரைப் போக்குங்கள் என்று இலங்கை அரசுக்கு மற்றொரு தீர்மானம் மூலம் அறிவுறுத்துவதால் மட்டுமே பிரச்னை எவ்வாறு தீரும்? பிரச்னையின் முளையும் வேரும் விடுதலைப் புலிகள்தான் என்னும்போது, இந்திய அரசு செய்யக் கூடியது என்ன? ராஜீவ் காந்தியைப் படுகொலை செய்த, இந்தியாவில் தடைசெய்யப்பட்ட இயக்கத் தலைவர்களுடன் அமர்ந்து பேச்சுவார்த்தையா நடத்த முடியும்? அது இயலாத காரியம்.

ஆனால் தமிழகத்தில் ஈழத் தமிழர் நலனுக்காக குரல் கொடுத்துவரும் கட்சிகளும் அதன் தலைவர்கள் பலரும் புலிகள் இயக்கத்தின் அனுதாபிகள் என்று அறியப்பட்டவர்கள். இந்தத் தலைவர்கள் விடுதலைப் புலிகளுக்கு அறிவுறுத்தி, அவர்களை இலங்கை அரசுடன் முறையான பேச்சு வார்த்தைக்கு அழைப்பதுடன், தனி தமிழ் ஈழ பிடிவாதத்தைக் கைவிடும்படியும் வலியுறுத்த வேண்டும். கண்ணீரில் மிதக்கும் ஈழத் தமிழர்களின் துயர் தீர்க்க இவர்கள் தான் பாடுபட வேண்டும். மத்திய அரசும் இவர்களை எப்படிப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று யோசிக்க வேண்டும். பிரச்னையின் ஆணிவேரைக் கண்டுகொள்ளாமல் ஒதுக்கிவிட்டு, மேம்போக்காக தீர்மானங்கள் மட்டும் நிறைவேற்றுவதில் ஒரு பிரயோஜனமுமில்லை. ●



# விடாது துரத்தும் அஜீத்!

மீரா ஜாஸ்மினைத் தேடி விளம்பர வாய்ப்புகள் குவிகின்றன. 'சாமுத்ரிகா' மாதிரியான ரசனையான விளம்பரம் என்றால் மட்டும் ஓ.கே சொல்கிறார்.

'நான் கடவுள்' படத்திலிருந்து விலகிக் கொண்டாலும், நடிகர் பாலாஜியின் சுஜாதா ஆர்ட்ஸ் தயாரிக்கும் தனது அடுத்த படத்தில் பாவனாவை நாயகியாகப் போட்டே தீர்வதென முடிவெடுத்து, விடாது துரத்தி சாதித்து விட்டாராம் அஜீத்.

சிம்புவுடன் இணைத்து பேசப்படுவதில் நயன்தாரா செம அப்செட். மேலுக்குச் சிரித்தாலும் படப்பிடிப்புகளில் உம்மென்றே காணப்படுகிறார்.

இந்த வருடத்துக்குள் சோனியா-செல்வராகவன் திருமணம் நடந்துவிடும் என்பதுதான் கோலிவுட்டின் ஹாட் நியூஸ். ஆனால் மணமகனும், மணமகளும் வேறு வேறாம்!

அசினிடம் பேட்டிக்குச் சென்றால், முதலில் அவரின் அப்பா, நிருபரை பேட்டியெடுப்பார். திருப்தியான பதில் வந்தால்தான் அசின் வருவார்.

நம்பர் ஒன் நாயகியாக இல்லாவிட்டாலும், பிஸியான ஹீரோயினாக வலம் வருகிறார் பூஜா. அவரின் கலகல சுபாவமே அதற்குக் காரணமென்கிறார்கள் விஷயமறிந்தவர்கள்.

- நிரஞ்சனா

**முதல் படத்திலேயே சபாஷ் வாங்கியிருக்கிறார் 'பாரிஜாதம்' இசையமைப்பாளர் தரண். மலேரியா காய்ச்சல் காரணமாக அவர் அந்தப் படத்துக்குப் பின்னணி இசை அமைக்கவில்லை, படத்தின் பின்னணி இசையை சபேஷ்-முரளியை வைத்தே முடித்திருக்கிறார்கள் என்றாலும், பின்னணி இசையின் மகத்துவம் பற்றி நிறையப் பேசுகிறார்.**

# இளையராஜாதான் பெஸ்ட்!

"நான் அதிகம் பார்ப்பது ஹாலிவுட், சைனீஸ், ஸ்பானியப் படங்கள்தான். இந்தியாவைத் தவிர மற்ற நாட்டோட படங்களிலெல்லாம் பாடல்கள் இருக்காது. பின்னணி இசைதான் படம் முழுக்க பேசும். நாம சோகக் காட்சிகளுக்கு வீணையையும் புல்லாங்குழலையும் பயன்படுத்துவோம். சீனப் படங்கள்ல உபயோகப்படுத்துற இசைக்கருவிகள் புதுமையான சப்தங்களைக் கொடுக்கும். எனக்குத் தமிழ்ப் படங்கள்ல அதுபோன்ற கருவிகளைப் பயன்படுத்த ரொம்பவே ஆசை. ஹாலிவுட் படங்கள்ல பெருசா பின்னணி இசை இருக்காது. துப்பாக்கிச் சண்டை, டினோசர் ஒலி, சூறாவளிக் காத்துன்னு எல்லாம் ஸ்பெஷல் எபெக்ட்ஸ் சவுண்டு மட்டும்தான் கேட்கும். நான் பார்த்த ஒரு மேலை நாட்டுப் படத்துல படம் ஆரம்பிச்சு நாற்பத்தைந்து நிமிடங்களுக்கு பிறகே பின்னணி இசை சன்னமா ஆரம்பிக்கும். அதுவரைக்கும் கேமராவும் வசனங்களும்தான் படத்தை வழி நடத்திச் செல்லும். இதெல்லாம் புது அனுபவம்.

'நாயகன்' பட க்ளைமாக்ஸ்ல, 'நீங்க நல்லவரா கெட்டவரா'ன்னு குட்டிப் பையன் கேட்கிறப்போ கமல் முகத்துல சலனமே இருக்காது. ஆனா அங்கே ராஜா சார் பின்னணில பூந்து விளையாடியிருப்பாரு. 'மௌன ராகம்' படம் முழுக்க ஒரு பேக்ரவுண்ட் மியூசிக் பயணிக்கும். உன்னிப்பா கவனிச்சா புரியும். படத்துல வர்ற சோகம், காதல், மகிழ்ச்சினு எல்லா மூடுக்கும் ராஜா சார் அதே மியூசிக்கைத்தான் விதவிதமா பயன்படுத்தியிருப்பாரு. கொண்டாட வேண்டிய முயற்சி இது.

நான் தமிழ்நாட்டுல பிறந்ததுக்காக ரொம்பப் பெருமைப்படறேன். எம்.எஸ்.வி., இளையராஜா, ஏ.ஆர்.ரஹ்மான்னு சென்னையிலதான் இந்தியாவோட இசையே அடங்கியிருக்கு. ஊர் உலகப் படங்களெல்லாம் பார்த்த பிறகு என் அறிவுக்கு எட்டியது இதுதான் - நம்ம இளையராஜா சார் அளவுக்கு பின்னணி இசையில கொடிகட்ட யாராலும் முடியாது."

**- சநகன்**



இளையராஜாதான் பெஸ்ட்!












# வேதாளபுரி நூலகம்!

விக்ரமாதித்தனின் முதுகில் ஏறி உட்கார்ந்த கையோடு "முரல்வு என்றால் என்ன?" என்றது வேதாளம். 'தெரியாது' என்று தலையாட்டினான் விக்கிரமாதித்தன்.

"தும்பிகள் எழுப்பும் ஒலிதான் முரல்வு. துங்கம் என்றால் தூய்மை. மல்லல் என்றால் அழகு, வியம் என்றால் பெருமை, அகமம் என்றால் மேகம்."

"அட! இதெல்லாம் எங்கேயிருந்து புடிச்சே?"

"பேரொளின்னு ஒரு கவிதைத் தொகுப்பு. எல்லாமே ஆன்மிகக் கவிதைகள். நிறைய அழகிய தமிழ் வார்த்தைகளைத் தூவியிருக்காங்க. ஆறுதலான விஷயம் என்னன்னா முக்கியமான வார்த்தைகளுக்கான பொருளை கவிதைக்குக் கீழேயே கொடுத்திருக்காங்க. ஆன்மிகம், கவிதை இரண்டையும் விரும்புறவங்க இந்தப் புத்தகத்தையும் விரும்புவாங்க."

"சின்ன வயசுல ஸ்கூல்ல படிச்ச அருஞ்சொற்பொருள்தான் நினைவுக்கு வருது. ஒவ்வொரு செய்யுளுக்கும் கீழே பொருள் கொடுத்திருப்பாங்க. ஹூம்... இப்ப வர எல்லா கவிதைகளுக்கும் கையோட ஒரு கைடும் கொடுத்தா தேவலைன்னு தோணுது."

"எல்லா கவிதையும் அப்படிக் கிடையாது. உதாரணத்துக்கு தங்க.செந்தில் குமாரோட ஒரு கவிதை சொல்றேன். 'பாராட்டத்தான் வேண்டும்/ பனை ஓலையில்? கள்ளுண்ணாமை/' எழுதிய வள்ளுவனை. இந்த மாதிரி சுலபமா புரியற சுவையான பல கவிதைகளும் இருக்கு."

"அதென்ன வேதாள்! ஒரே கவிதை புக்கா படிச்சிட்டிருக்கே?"

"ஆங், 'முகமலர்ச்சியும் வெற்றிகளும்'னு ஒரு புக் படிச்சேன். ஆரிசன் வெட் மார்டன் எழுதினது. எப்பவும் சிரிச்சிக்கிட்டே இருக்கிறதுக்கு இன்னின்ன செய்யுங்கன்னு லிஸ்ட் போட்டுத் தந்திருக்காரு. வழக்கமான சுயமுன்னேற்ற புக் ஃபார்முலா. குட்டிக் கதைகள், நிறைய அட்வைஸ் சரி. இந்தக் கேள்விக்குச் சரியான பதில் சொல்றீங்களான்னு பார்ப்போம். 'அல்லில்'னா என்ன சொல்லுங்க. பார்ப்போம்."

"இரவு" என்று சரியான பதிலை விக்ரமாதித்தன் சொன்னவுடன் வேதாளம் மீண்டும் முருங்கை மரத்துக்குத் தாவிச் சென்றது.

**பேரொளி, கல்யாணி வெங்கடராமன், 21 ஈ, நியூடெக் ஐயப்பா என்க்ளேவ், சர்மாதவன் சாலை, மகாலிங்கபுரம், நுங்கம்பாக்கம், சென்னை 600034. பக்கம் 96, விலை ரூ.50/-**

**தங்க.செந்தில்குமார் கவிதைகள், அய்யா நிலையம், 2870, கல்யாணசுந்தரம் நகர், ஈ.பி. காலனி, நாஞ்சில்கோட்டை சாலை, தஞ்சாவூர் 6. பக்கம் 208, விலை ரூ.100/-**

**முகமலர்ச்சியும் வெற்றிகளும், ஆரிசன் வெட் மார்டன், தமிழில் லயன் எம். சீனிவாசன், கண்ணதாசன் பதிப்பகம், 23. கண்ணதாசன் சாலை, தியாகராயநகர், சென்னை - 17, பக்கம் 141, விலை. ரூ.40/-**

வாரத் தொடர்

4

# தெற்குத் தெரு

ஜெகதா, மருமகளிடம் வந்தாள். இருக்கிற நிலைமையை எடுத்துச் சொன்னாள். அந்தப் பொண்ணு மறு பேச்சில்லாமல் போட்டுக்கிட்டு வந்த நகையெல்லாம் கழட்டிக் கொடுத்துச்சு. கற்பகம்கூட "பொழைக்கத் தெரியாதவளா இருக்கியே. கேட்டதும் பொசுக்குனு கழட்டிக் கொடுத்திட்டியே திரும்பி வருமா அது. 'முதலை வாய்ல மாட்டினதாவது மீண்டுடும், சித்திக்காரி கைக்குப் போனது வரவே வராதே'ன்னா."

அப்படிச் சொன்னவதான் டெம்போ புத்தம் புதுசாய் வாசலில் வந்து நின்னதும், முதல் ஆளாய் ஓடிப்போய் 'ஜிங்'குனு அதுல ஏறி உட்கார்ந்து,

"ஏய் மாமன் வண்டிடா... மாமாகிட்ட கேளு... ஊரைச் சுத்திக்காமி மாமானு கேளு..." என்று வாயெல்லாம் பல்லாகக் குழந்தையைத் தூக்கி குணசேகர் மடியில் கிடத்தினாள்.

அவனும் ரெண்டு தெருவையும் சுத்தி வந்தான்.

அன்னைலருந்தே டெம்போ ஓய்வு ஒழிச்சல் இல்லாம சவாரி போய்க்கிட்டிருந்தது. நல்ல வருமானம்தான்.

அந்தச் சுருக்கிலேயே அடுத்தவனுக்கு ஒரு வழி பண்ணணும்னு தீர்மானிச்சு ரவிக்குப் பெண் தேடினாள், ஜெகதா.

ரொம்ப சிரமப்பட்டுத்தான் கல்யாணம் முடிக்க வேண்டியிருந்தது. பெரியவனுக்குச் செய்ததுபோல் விமரிசையாக கல்யாணம் பண்ணலையென்று அவனுக்கு மனத்தாங்கல்.

"பெரியவனுக்கு வந்தவ பத்து பவுனும், இருபதாயிரமும் கொண்டு வந்தா. உன் மாமனாரு கடைசி நேரத்துல 'என்னால எதுவும் போட முடியாது. அப்புறம் செய்யறேன்'னு கைய விரிச்சாரு. வேற யாராவதுன்னா தாலியே கட்டவுட்ருக்க மாட்டாங்க. பாவம் பார்த்து ஒரு பொண்ணோட வாழ்க்கையாச்சேனு தாலி கட்ட வச்சேன். இந்தக் கூத்துல நீ குறை கண்டு பிடிக்கறியேடா" என்றாள்.

"பொண்ணு வீட்டுக் கதையை விடு. குணா கல்யாணத்துக்கு முப்பதாயிரம் இவங்க செலவு பண்ணாங்களே...! உனக்கு ஓரவஞ்சனையா பத்தாயிரத்துக்குள்ள முடிச்சுப்புட்டாளே... அந்த நியாயத்தைக் கேளு''னு தம்பியைத் தூண்டிவிட்டாள் கற்பகம்.

இது ஜெகதா காதுல விழுந்து கொதிச்சுப் போயிட்டா.

'வினை வெளியில இல்ல வீட்டுக்குள்ளயே இருக்கே. தான் கெட்டது போதாதுனு மத்தவங்களையும் கெடுக்கறாளே'னு வேதனைல அவள ரெண்டு அடி அடித்துவிட்டாள் ஜெகதா.

இதனால, புருஷன், புள்ளைங்களோட வெறுப்புக்கு ஆளானாள்.

அந்த நேரம் பார்த்து டெம்போ ஆக்ஸிடெண்ட்டாகி, பெரியவன் ஆஸ்பத்திரில படுத்துட்டான்.

போலீஸ் கேஸாகிப் போச்சு. ஜெகதா, போலீஸ் ஸ்டேஷனுக்கும் வீட்டுக்குமாக அலைந்தாள். கடன்காரங்க அவ வீட்டுக்கு வர ஆரம்பித்தார்கள்.

அடுத்தடுத்து நடந்துவிட்ட எதிர்பாராத சம்பவங்களால ஜெகதா கொஞ்சம் நிலைகுலைந்துதான் போனாள்.

பையனைக் குணப்படுத்தி வீட்டுக்குக் கொண்டு

வரவும், கேஸுக்காகப் போராடி சரி பண்ணவும் ரொம்ப அவஸ்தையாகி விட்டது.

வீட்டிலிருந்து ஒரு ஆதரவும் கிடைக்காததோடு, விமர்சனங்களும் எழுந்தன.

"இன்னும் என்னெல்லாம் பண்ணலாம்னு இருக்கே நீ... ஆடு... ஆடு..." என்று எரிந்து விழுந்தான் பெருமாள்.

"எங்களை ஒழிச்சுக்கட்டிட்டுத்தான் மறுவேலை பாக்கப் போற நீ" என்றான் ரவி.

கடைசி பையன்கூட, முகம் திருப்பிக்கொண்டான்.

கடன்காரர்கள் வந்து நின்றால், ''யார்கிட்ட கொடுத்தீங்களோ அவங்க கிட்ட கேளுங்க''ன்னா வாழாம வந்தவ.

''அடி.... அவ கடன் வாங்கிக் கட்ன வூட்ல இருந்துக்கிட்டு அவளுக்கு எதிரா பேசறியா நீ, எல்லாரும் தலைமாட்டுச் சுமையா யிட்டீங்களே..." என்று கவலைப்பட்டாள் முத்தம்மா.

சோகத்தை எங்கு போய் சொல்லவும் முடியவில்லை.

''நல்லதும் கெட்டதும் நமக்குள்ளயே இருக்கட்டும். ஒருத்தருக்கொருத்தர் அனுசரிக்கலாம். வெளியாளுங்க நம்மை மட்டமா நினைக்க இடங்கொடுக்கக் கூடாது. கஷ்டமோ, நஷ்டமோ ஒண்ணா நின்னாத்தானே பலம்...'' என்று வீட்டிலிருந்த எல்லோருக்குமே சொன்னாள்.

வீட்டினர் கோபம் கிழவியின் மேல் பாய்ந்தது.

"எல்லாத்துக்கும் நீதான் காரணம். ஆதி நாள்லருந்தே பொண்ணை வளர்க்கற விதமா வளர்த்திருந்தா எல்லாம் சரியா இருந்திருக்கும். ஆம்பள மாதிரி வளர்த்தே. யாரையும் மதிக்காம அவ இஷ்டத்துக்கு நடக்கவிட்டு, அவ செய்யறதுக்கெல்லாம் தலையாட்டி, இன்னைக்கு இந்தக் கதியாச்சு. நான்தான் அப்பவே சொன்னனே, புது வீடும் வேணாம். கடனும் வேணாம். அவனவன் சாமர்த்தியத்துல பொழைச்சுக்கிடட்டும்னு. கேட்டீங்களா..." என்றான் பெருமாள்.

"நீங்கள்லாம் மீசை வச்ச ஆம்பளைங்க. ஆளுக்கொரு பக்கம் பாடுபட்டு கடனை அடைப்பீங்கனு நம்பி எறங்குனா. எல்லாரும் ஒத்துமையா ஒரு வீட்ல வாழணும்னு நினைச்சா. அது ஒரு தப்பா... அவ எம்மவ. நான் அந்த நாள்ல தாலியறுத்து கைக்குழந்தையோடு வந்து தனியா நின்னு வாழ்ந்து காட்னேன். அவளும் குடும்பத்தை உசரத்துக்குக் கொண்டு வரணும்னுதான் பாடுபட்டா. போட்ட கணக்கு கொஞ்சம் பிசகிப் போச்சு. வண்டி ஆக்ஸிடெண்ட் ஆவலேன்னா,



இந்நேரம் எப்படியெல்லாம் நடந்திருக்கும்..."

"கடவுளா பார்த்துத்தான் கொட்டத்தை அடக்குனாரு. இப்பயாவது எல்லாத்தையும் விட்டுட்டு, சொன்ன பேச்சைக் கேட்டுக்கிட்டு உட்காந்திருந்தா ஒரு வேளைச் சோறாவது கிடைக்கும். இல்லன்னா, ஆத்தா மவ ரெண்டு பேரையும் ஏகாதிகளா அனுப்பிருவேன்..." என்று பொல்லாத வார்த்தையெல்லாம் போட்டுப் பேசினான் ரெண்டாமவன்.



இதைக் கேட்டு பெரியவன், தம்பியை முறைத்தான்.

"என்னடா பேசற நீ. பெத்தவள இப்படித்தான் பேசறதா... அம்மாவை பிச்சைக்காரியா துரத்தறதுக்குத்தான் நீ புள்ளையா பொறந்தியா. இன்னொருவாட்டி இப்படிப் பேசினே அடிச்சு பல்லைக் கழட்டிருவேன்"னு சொன்னானோ இல்லையோ ரவி, குணசேகர் மீது பாய்ந்து அடித்தான்.

பெண்கள் அலறினார்கள். ஜெகதா ஓடி வந்தாள்.

"அடப்பாவி... ராட்சஷா... இப்பத்தான் செத்துப் பிழைச்சு ஆஸ்பத்திரியிலிருந்து திரும்பி வந்திருக்கிறான். அந்த அப்பாவியைப் போட்டு அடிக்கறியே... அவ்வளவு திமிரா உனக்கு"ன்னு... ஜெகதா, ரவியின் சட்டையைப் பிடித்து ரெண்டு விளாசு, விளாசினாள்.

அவள் சொன்னது போலவே, அவன் ராட்சஷனாகத்தான் ஆகியிருந்தான். பெற்ற தாயென்றும் பாராமல் ஜெகதா மீது பாய்ந்தான்.

அவள் அலற அலற தலைமுடியைக் கொத்தாகப் பற்றி இழுத்து வெளியில் தள்ளி, எட்டி உதைத்தான்.

"எம் மேல கை வைக்கறியா நீ... என்னை அடிக்கறியா நீ..."னு வெறி வந்தவன் மாதிரி ஆத்தாளைப் போட்டு அடிக்கிறான்.

அதிர்ச்சியில் அலறக்கூட தோன்றாமல், தன்மேல் தொம் தொம்மென்று விழும் அடிகளை உடல் அதிர அதிர ஏந்திக்கொண்டு, கண்களில் கண்ணீர் விட்டுக் கொண்டு பார்க்கிறாள் ஜெகதா.

**வி**ஷயம் தெரிந்து ஊரே திரண்டு வந்தது. ஜெகதாவுக்கு நேர்ந்ததைப் பார்த்து அதிர்ந்து போனது.

கந்தப்பன் மனம் பதறி "ஜெகதா... எழுந்து என்கூட வா...! போலீஸ்ல கம்ப்ளெய்ண்ட் பண்ணி அத்தனை பேரையும், உள்ள வைக்கணும்..."னு கூட்டிக்கிட்டுப் போறாரு....

போலீஸ் ஸ்டேஷனுக்குனு கிளம்பின ஜெகதா பாதி வழியில நின்னு,

"வேணாம் மாமா. புள்ளை மேல ரிப்போர்ட் குடுத்தா, அவன் வாழ்க்கை பாதிக்கும். எல்லாரையும் பாதிக்கும். அவங்க நல்லதுக்குன்னுதான் ஒவ்வொண்ணும் செய்தேன். இப்ப மட்டும் அவங்களுக்கு எதிரா ஒரு காரியத்தை ஏன் செய்யணும். அவங்களுக்கு உறவாயிருந்து சாதிக்காததை பகையா இருந்து என்ன சாதிக்கப் போறேன். அவங்களுக்கு எதிரா ரிப்போர்ட் பண்ணிட்டு, அப்புறம் அவங்களோடு இருக்க முடியுமா. என் முகம் பார்த்து கடன் கொடுத்தவங்களுக்கு நான் இருந்து பதில் சொல்ல வேணாமா..."ன்னு என்னென்னமோ சொல்லிக்கிட்டு திரும்புனா.

கந்தப்பன் கண்கலங்கிப் போய்ட்டாரு.

"நானாக உன்னைப் பணம் கேட்க மாட்டேன் தாயி. உனக்கும் நல்ல காலம் வரும். அப்ப நிதானமா குடு"ன்னாரு.

போனவ, பாதியிலேயே திரும்பி வரப் பார்த்ததும் கற்பகம்

"அதானே பார்த்தேன்... ரிப்போர்ட் குடுக்கற அளவுக்குத் தைரியமா என்ன..." என்று கேட்டுக் கொண்டாள்.

ரவிகூட பயந்திருந்தான்.

ஊரே சேர்ந்து அவனைக் காறித் துப்பியது.

ஒன்றும் நடக்காததுபோல் எழுந்து போய்விட்டான்.

குணசேகரனின் மாமனார் வந்தார். நடந்ததெல்லாம் பார்த்தும் கேட்டும் ஒரு தீர்மானத்தோடு வந்திருந்தார்.

மகளையும், மருமகனையும் அழைத்துக்கொண்டு கிளம்பினார்.

"குணா... என்னை விட்டுப் போறியே... நீ ஒருத்தன்தானே எனக்கு ஆதரவா இருந்தே"னு ஜெகதா கேட்க,

அவன் கலங்கிக்கிட்டே,

"என்னம்மா பண்ணச் சொல்ற. நான் இங்கிருந்து எதையும் பண்ண முடியாது. நீயும் என்கூட வந்துடு"னு கூப்பிட்டான்.

"நான் தனி ஆளில்லையே..." என்று தாயைப் பார்த்தாள்.

முத்தம்மா, பரிதவிப்போடு மகளையும் பேரனையும் மாறி மாறிப் பார்த்தாள்.

வார்த்தை வரவில்லை.

அவன்போன மறுநாள் முதல், கிழவி படுக்கையை விட்டு எழவில்லை.

படுத்த படுக்கை. படுத்த வாக்கிலேயே கழிவுகள்....

வீடு நாறிப்போச்சுன்னு சுணங்கினாள் இரண்டாவது மருமகள்.

அவள் சொன்ன மறுநிமிஷம், ரவி கட்டிலோடு தூக்கிக் கொண்டு போய் பாட்டியைத் தொழுவத்தில் வைத்துவிட்டான்.

அன்றிலிருந்து தாய்க்கும், மகளுக்கும் அதுதான் இடமென்று ஆகிவிட்டது.

'ஹக்'கென்று ஓசை கேட்டு... பழைய நினைவுகளிலிருந்து கலைந்து நிமிர்ந்தாள் ஜெகதா.

முத்தம்மாவிடமிருந்துதான் அந்த ஓசை.

ரொம்ப நேரமாகத் தாயைக் கவனிக்காமலிருந்துவிட்டோமே என்று, பரபரப்பாய் தண்ணீர் எடுத்து வாயில் புகட்ட,

அது உள் இறங்காமல், வெளியில் வழிந்தது.

முத்தம்மா செத்துப் போயிருந்தாள்.

ஜெகதாவுக்கு அழக்கூடத் தோன்றவில்லை.

"அம்மா... நீ தப்பிச்சிட்டேம்மா..." என்று முனகினாள்.

ஊரெல்லாம் சொல்லி, இறுதிச் சடங்கு நடந்தது.

தாய் போன பிறகு அனாதைபோல் ஆகிவிட்ட ஜெகதாவுக்கு சுயநினைவு தப்பிப் போனது. தனக்குள் பேசிக் கொள்வதும், தனிமையில் இருப்பதுமாக நாட்கள் கழிகின்றன. சாப்பாட்டு வேளைக்கு அவள் வீட்டிலிருந்தால் தட்டில் கொஞ்சம் சோறு போடுகிறார்கள். இல்லாவிட்டால் தேடி அழைத்துச் சாப்பிட வைக்க ஆளில்லை.

மாமனார் வீட்டோடு போய்விட்ட பெரிய பையன் எப்போதாவது கையில் காசு கிடைத்தால் அம்மாவுக்கு அனுப்பி வைக்கிறான்.

அப்போது மட்டும் குடும்பம் அவளை எங்கிருந்தாலும் தேடிப் பிடித்து அழைத்து வந்து மணியார்டர் பாரத்தில் கையெழுத்து வாங்குகிறது.

மத்த நேரம் 'நீ எங்கே இருக்கே'னு கேட்க ஆளில்லாமல் தோப்பு, ஆறு, ஏரி, வயக்காடு என்று சுற்றி வருகிறாள்.

அவளுக்கு ஊரே சொந்தம்.

வீடு புறக்கணித்தால் அவளுக்கென்ன!

பி.கு: வீட்டிலோ நிலத்திலோ இனி ஜெகதாவுக்கும், குணசேகருக்கும் உரிமையில்லையென்றும், மற்ற இரண்டு பிள்ளைகளே கடனையடைத்து சொத்துக்களை அனுபவித்துக் கொள்வது என்றும், பிரியப்பட்டால் கற்பகத்துக்குக் கொஞ்சம் கொடுப்பது என்று அவர்கள் தீர்மானித்துக் கொண்டது வேறு விஷயம். ○

"நம்ம படத்தோட விமர்சனத்தை அந்த நிருபர் நக்கலா முடிச்சிருக்கார்னு சொல்றியே, ஏன்?"

"படத்தின் க்ளைமாக்ஸ் காட்சியை, 'விரைவில் சின்னத்திரையில் காண்க'னு எழுதியிருக்காரே!"

- வெ. சீதாராமன்

## கிராண்ட் மாஸ்டர் பிரதீப்

கேரளாவில் சின்னத் திரையின் சூப்பர் ஸ்டார் ஜி.எஸ். பிரதீப். கைரளி மலையாள டீ.வி. சேனலில் இவரது 'அஸ்வமேதம்' நிகழ்ச்சி சூப்பர் டூப்பர் ஹிட். ஐந்து வருடங்களாக ஆயிரம் எபிசோடுகள் தாண்டி ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கிறது. அதன் வெற்றியைப் பார்த்துவிட்டுத்தான், விஜய் டீ.வியில் அவரை அழைத்திருக்கிறார்கள். விஜய் டீ.வியில் திங்கள் முதல் வியாழன் வரை தினமும் இரவு ஒன்பதரை முதல் பத்து மணி வரை ஒளிபரப்பாகும் 'கிராண்ட் மாஸ்டர்' நிகழ்ச்சியை நடத்தும் திருவனந்தபுரத்துக்காரரான பிரதீப்புடன் ஒரு டெலிபோன் பேட்டி:

"என் அப்பா, அம்மா இருவருமே பள்ளிக்கூட ஆசிரியர்கள் என்பதால் சின்ன வயது முதலே எனக்குப் புத்தகங்கள் படிப்பதில் மிகுந்த ஆர்வம் உண்டு. எப்போது பார்த்தாலும் ஏதாவது படித்துக்கொண்டே இருப்பேன். கவிதைகள் எழுதுவேன்; பேச்சுப் போட்டிகளில் கலந்துகொண்டு ஏராளமான பரிசுகள் பெற்றிருக்கிறேன். படிக்கிற நாட்களில், நண்பர்களுடன் ஆடிய விளையாட்டுதான் நான் இன்று இந்த அளவுக்குப் பேரும், புகழும் பெறுவதற்குக் காரணமாக இருந்திருக்கிறது.

மாலை வேளைகளில், கேன்டீனில் என் நண்பர்களிடம் யாரையாவது மனத்தில் நினைத்துக் கொள்ளச் சொல்வேன். அடுத்தடுத்து கேள்விகள் கேட்டு, அவர் மனத்தில் நினைத்திருக்கும் நபர் யார் என்று சரியாகக் கண்டுபிடித்துச் சொல்லிவிடுவேன்.

ஒரு நாள், ஒரு ஓட்டலில் இந்த விளையாட்டை நாங்கள் விளையாடிக் கொண்டிருந்தபோது, அடுத்த மேஜையில் இருந்த ஒருவருக்கு ஆர்வம் ஏற்பட்டு, அவரும் அதில் கலந்து கொண்டார். அவருக்கு ஒரே ஆச்சரியம். விடைபெறும் போது என்னைப் பாராட்டி விட்டு, எனது முகவரியை வாங்கிக் கொண்டார். நான் அதை அப்போதே மறந்து விட்டேன்.

சுமார் ஒருமாதம் கழித்து, கைரளி டீ.வியிலிருந்து உடனடியாக வந்து எங்கள் சேர்மனைச் சந்தியுங்கள் என்று அழைப்பு வந்தது. போய்ப் பார்த்தால், கைரளி நிறுவன சேர்மனான நடிகர் மம்மூட்டி மற்றும் இதர நிர்வாகக் குழு உறுப்பினர்கள் எனக்காகக் காத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் தங்கள் மனத்தில் ஒவ்வொருவரை நினைத்துக் கொள்ள, நான் அவர்கள் மனத்திலிருக்கும் நபர்களைச் சரியாகக் கண்டுபிடித்துச் சொல்ல எல்லோருக்கும் ஒரே சந்தோஷம். உடனடியாக என்னை ஒப்பந்தம் செய்தார்கள் என்னுடைய நிகழ்ச்சிக்குப் பெயர் 'அஸ்வமேதம்'. எனது முதல் நிகழ்ச்சியில் முதல் பங்கேற்பாளராக வந்தவர் யார் தெரியுமா? அன்றைய கேரள முதலமைச்சராக இருந்த ஈ.கே.நாயனார். அவர் மனத்திலிருந்த ருஷ்யப் புரட்சியாளரின் பெயரை நான் சரியாகக் கண்டுபிடித்துச் சொன்னதும், என்னைப் பாராட்டினார்.

அஸ்வமேதம் நிகழ்ச்சியை, நேரடியாக மேடையில் நடத்தும்படி கேரளாவின் பல்வேறு ஊர்களிலிருந்தும், அரபு நாடுகளிலிருந்தும் எனக்கு ஏகப்பட்ட அழைப்புகள் வருகின்றன. நான் இதுவரை சுமார் பன்னிரண்டாயிரம் மேடை நிகழ்ச்சிகள் நடத்தி இருக்கிறேன். தலைச்சேரியில் ஒரு முறை நாலாயிரம் பேர் அமரும் அரங்கில் நிகழ்ச்சியை நடத்தி விட்டு அத்தனை பேரையும் அனுப்பி

# "பேரைச் சொல்லவா...!"

விட்டு, வெளியில் காத்திருந்த இன்னொரு நாலாயிரம் பேரை அழைத்து அரங்கில் அமரச் செய்து மீண்டும் நிகழ்ச்சியினை நடத்தியது மறக்க முடியாத ஒன்று.

வடகேரளாவில், காசர்கோடு என்ற ஊரில் நடந்த நிகழ்ச்சியில் ஒரு பதிமூன்று வயது சிறுவன் பங்கேற்றான். முதல் சுற்றில், அவன் மனத்தில் இருந்த நபரை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. 'நீ வெற்றி பெற்று விட்டாய். வாழ்த்துகள்! வா இரண்டாம் சுற்றுக்குச் செல்லலாம்' என்ற போது அவன் கண்களில் கண்ணீர். வெற்றியின் காரணமாக ஆனந்தக் கண்ணீர் போலும் என்று நான் காத்துக் கொண்டிருந்தேன். அவன் அழுகை நிற்கவே இல்லை. திடீரென்று, "நீங்கள் எப்போதும் தோற்கவே கூடாது. அதை என்னால் தாங்கிக்கொள்ள முடியாது. நீங்கள் தோற்றுப் போவீர்கள் என நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை. நான் நிகழ்ச்சியில் தொடர்ந்து பங்கேற்க விரும்பவில்லை" என்று சொல்லிவிட்டு மேடையிலிருந்து இறங்கிச் சென்றுவிட்டான். அந்தச் சிறுவனை என்னால் மறக்கவே முடியாது.

எனது 'அஸ்வமேதம்' நிகழ்ச்சி, மக்களிடையே படிக்கும் பழக்கத்தை அதிகரித்துள்ளது என்பது புள்ளி விவரங்களுடன் நிரூபணமாகியுள்ளது."

**உங்கள் நிகழ்ச்சியில் பங்கேற்பவர் மனத்தில் இருப்பவரைக் கண்டுபிடிக்க நீங்கள் திணறியது உண்டா?**

"சுமார் ஐநூறு முறையாவது கண்டுபிடிக்க முடியவில்லை என்று ஒப்புக்கொண்டிருக்கிறேன். ஆனால் அவற்றை நான் தோல்வியாக நினைப்பது கிடையாது. அதுவரை எனக்குத் தெரியாத ஒரு புதிய நபரைப் பற்றி நான் தெரிந்துகொள்ள ஒரு வாய்ப்பாகவே நினைக்கிறேன்."



பிரதீப் எழுதிய புத்தகங்கள் விறுவிறுப்பாக கேரளாவில் விற்பனையாகின்றன. இவரது ஐந்து புத்தகங்களில் 'பிரெய்ன் மேஜிக்' என்ற நினைவாற்றல் பெருக்கும் வழிகளைச் சொல்லித்தரும் புத்தகமும், ஒரு கவிதைத் தொகுப்பும் அடக்கம்.

**- எஸ்.சந்திரமௌலி**

# இந்தியக் கால்பந்தின் சோகங்கள்!

“பிரேஸில் நாட்டில் பிறந்த குழந்தையைக் காணச் செல்லும் உறவினர்களும் நண்பர்களும் அழகிய, சிறிய அளவிலான கால்பந்தைப் பரிசளிப்பது வழக்கம். அங்குள்ள வாண்டுகளும் பொம்மைகளுக்குப் பதில் கால்பந்தை உருட்டி, தட்டி, எட்டி உதைத்து விளையாடித்தான் வளர்கின்றனர். இப்படிப்பட்ட வளர்ப்பினால்தான் பிரேஸில் வீரர்கள் கால்பந்தை ஒரு விளையாட்டாக மட்டுமே எண்ணாமல் ஒரு நடனமாகக் கருதி அதில் புதுமையும் சாதனையும் படைத்து மகிழ்கிறார்கள்” என்று பிரேஸிலைக் கொண்டாடுகிறார் பிரபல கோச்சான சௌந்தரராஜன். சமீபத்தில் சர்வதேசப் பயிற்சியாளருக்கான தகுதியை அடைந்த நான்கு இந்தியர்களில் ஒருவரான இவர், கால்பந்து விளையாட்டில் இந்தியா பின்தங்கியுள்ளதற்கான காரணங்களைப் பட்டியலிடுகிறார்.

“ ‘கால்பந்து’ என்பது தெரு விளையாட்டு. சேரியிலிருந்துதான் நமக்கு அசகாய சூரர்கள் கிடைப்பார்கள். குடிசைத் தெருவுக்குச் சென்று ஒரு கால்பந்தை உருட்டிவிட்டால் போதும், அதை ஆசையோடு உதைத்துத் தள்ள ஒவ்வொரு வீட்டிலிருந்தும் ஒரு வீரன் ஓடிவருவான். ஆனால் இந்தியாவின் இன்றைய நிலைமை? உயர்நிலைப் பள்ளிகளில் மாணவர்கள் விளையாட, தேடினாலும் ஒரு கால்பந்துகூட கிடைப்பதில்லை. முன்பு ஆடுகளமாக இருந்த காலி மைதானங்கள் தற்போது, அடுக்கு மாடிக் கட்டடங்களாக மாறிவிட்டதால், இந்தியாவில் ஒரு தலைமுறையே கால்பந்தை ஸ்பரிசிக்காத துரதிர்ஷ்டம் நடந்திருக்கிறது.

1950-ம் ஆண்டு நடந்த பிரேஸில் உலகக்கோப்பை போட்டியில் ஷூ அணியமுடியாத காரணத்தால் இந்தியா அதிலிருந்து விலகிய கதை மட்டுமே அனைவருக்கும் தெரியும். ஆனால், 1948 முதல் 1960 வரை தொடர்ந்து நடைபெற்ற நான்கு ஒலிம்பிக் போட்டிகளில் ஆடத் தகுதி பெற்றதையும் 1956 மெல்போர்ன் ஒலிம்பிக்



போட்டியில் நான்காவது இடத்தைப் பிடித்து உலக அரங்கில் வரலாறு படைத்ததையும் நாம் கவனத்தில் கொள்ளவேயில்லை. மைய அரசில் கால்பந்துக்கென்று தனிக்கொள்கைகள் கிடையாது. ஏன், தனி மைதானங்கள் கூட கிடையாது. சென்னையிலுள்ள பிரமாண்டமான நேரு ஸ்டேடியத்தில் கால்பந்து போட்டிகளே நடப்பதில்லை. 92-ம் ஆண்டு ஜெயலலிதா 'கோல்ட் கப்' நடத்தியபோது சில சர்வதேச அணிகள் சென்னை வந்தன. அதோடு சரி.

கொல்கத்தா, கோவா, கேரள மக்களுக்குக் கால்பந்து மீதிருந்த மோகம் தற்போது கிரிக்கெட்டுக்குத் தாவிவிட்டது. பஞ்சாப் பரவாயில்லை. அரசே தனியாக 'அகாதெமி' நடத்துகிறது. கோவாவிலுள்ள கிளப்புகள் ஓரளவு பசை பார்ட்டிகள்.

தீவிரவாதிகளால் நொடிக்கு நொடி நடுங்கிக் கிடக்கும் மணிப்பூர்கூட, எப்படியோ தட்டித் தட்டி மேலே வந்துவிட்டது. தமிழ்நாடுதான் இன்னமும் அடுத்த அடி வைக்கத் திணறுகிறது. ஆரம்பித்து அறுபத்தொரு வருடங்கள் ஆகியும் தமிழகத்தால் பாரம்பரியமிக்க தேசியப் போட்டியான 'சந்தோஷ் டிராபியை' ஒருமுறைகூட வெல்ல முடியவில்லை.

வெளிநாடுகளில் நிலைமை தலைகீழ். தனியார் கிளப்புகள் ஊர் ஊராக, கிராமம் கிராமமாகச் சென்று திறமையாளர்களை வலை வீசிப் பிடிக்கின்றன. வலையில் மாட்டிய சிறுவனை உடனடியாக கிளப்பில் சேர்த்துக் கொண்டு, படிப்பு, கல்வி, இருப்பிடம் என வேண்டிய வசதிகளைக் குறையின்றிச் செய்து தருகின்றன.

பிரேஸில் அணி வீரர்கள் பந்தைத் தூரத்திலிருந்து உதைப்பதா? அல்லது பாஸ் செய்வதா? என்பதை இமைக்கும் நேரத்தில் முடிவெடுத்துவிடுவார்கள். முசோலினி, ஹிட்லர் என வம்சாவளியாகவே ஜெர்மானியர்கள் தனித்துச் செயல்படுவதில் கில்லாடிகள். இப்படி நம் அணிக்கும் ஒரு தனித்துவம் உண்டாகியிருக்க வேண்டும். 1960க்குப் பிறகு ஏற்பட்ட தொய்வுக்கு உடனடியாகச் சிகிச்சை அளித்திருக்க வேண்டும். ஆனால் டோர்னமெண்டுகளே நடத்தாததால், வீரர்களுக்குப் போதிய பயிற்சி இல்லாமல் போய்விட்டது.


• சௌந்தர்ராஜன்

உருகுவே நம்மைக் காட்டிலும் பரம ஏழை. ஆனால் அந்நாடு இருமுறை உலகக்கோப்பை சாம்பியன். அரசு, கால்பந்தை பத்தோடு பதினொன்றாக நினைப்பதால்தான் உலகமும் நம்மை அவ்வாறே ஒதுக்கியிருக்கிறது. அடுத்து 2014-ம் ஆண்டு உலகக்கோப்பை போட்டியை இந்தியாவில் நடத்த முயற்சிகள் நடக்கின்றன. 'இனியொரு விதி செய்வோம்' என்று களமிறங்கினால் மட்டுமே எல்லாக் கனவுகளும் சாத்தியமாகும்" என்கிறார் கோச் சௌந்தர்ராஜன்.

- ச.ந.கண்ணன்





## வளம் தரும் வாஸ்து – 11

இந்த வாரம் வீட்டுக்கு மிக அத்தியாவசிய அறைகளான படுக்கை அறை, தனஅறை, தானிய அறை உள்ளிட்ட அறைகள் பற்றித் தெரிந்து கொள்வோமா...?



# பணப்பெட்டியை எங்கே வைப்பது?

### படுக்கை அறை

தென்மேற்கு, வடமேற்கு, தெற்கு, மேற்கு, வடக்கு போன்ற திசைகள் அனைத்துமே படுக்கை அறை அமைப்பதற்கு ஏற்ற திசைகள்தான். ஆனால் தென்கிழக்கு அல்லது வடகிழக்கிலோ அல்லது வீட்டின் மையப்பகுதியிலோ படுக்கை அறையை அமைப்பது அசௌகர்யத்தைத் தரும். வீட்டில் இருக்கும் பெரியவர்கள் தென்மேற்குத் திசையில் அமைக்கப்பட்ட படுக்கை அறையைப் பயன்படுத்துவது நல்லது. அதேபோல வீட்டில் இருக்கும் பிரம்மச்சாரிகள் மற்றும் கன்னிப்பெண்கள் வடமேற்கில் இருக்கும் படுக்கை அறையைப் பயன்படுத்துவது நல்லது. வெளிர் நீலம் அல்லது வெளிர் பச்சை நிறத்தில் வண்ணம் பூசுவது சிறப்பைத் தரும். உபயோகமில்லாத எந்தப் பொருளையும் படுக்கை அறையில் வைத்திருக்கக் கூடாது. இந்த அறையில் படுப்பவர்கள் வடக்கே தலை வைத்து படுக்கவே கூடாது.

### படிக்கும் அறை

மேற்கு அல்லது மேற்கு சார்ந்த தென்மேற்குப் பகுதியில் படிக்கும் அறை அமைத்துக் கொள்வது சிறப்பைத் தரும். குறிப்பாக, தென்மேற்கு அல்லது வடமேற்கில் படிக்கும் அறை அமைத்தல் கூடவே கூடாது. இளமஞ்சள் அல்லது வெள்ளை வண்ணம் பூசுவது அதிர்ஷ்டத்தைத் தரும். அந்த அறையில் கிழக்கு அல்லது வடக்கு பார்த்து படிப்பது நல்லது. அறையில் ஹயக்ரீவர், சரஸ்வதி, பிள்ளையார் படங்களை மாட்டி வைக்கலாம்.

## கேளுங்கள்...

**எங்கள் வீட்டுப் பின்புறத்தில் சாக்கடை இருப்பதால் பின்கதவைத் திறப்பதே இல்லை. இது தோஷத்தைத் தருமா?**

**- கதிரவன், திருநெல்வேலி**

கதவைத் திறக்காமல் பூட்டியே வைத்திருப்பது தவறு. ஒரு நல்ல நாள் பார்த்து திறந்து வையுங்கள். அதன் பிறகு தினமும் பகல் நேரத்தில் சிறிது நேரம் திறந்து வைப்பது நல்லது.

**எங்கள் வீட்டு வாசலில் இரண்டு விளக்கு மாடங்கள் உள்ளன. ஆனால் அவற்றைப் பயன்படுத்துவதில்லை. தூசு படிந்து கிடக்கிறது. இது தவறு என்கிறார்களே?**

**- விஜயகீதா, ராமேஸ்வரம்**

# காஞ்சி கிருஷ்ணா

## தியான அறை

சில வீடுகளில் பூஜையறை போல தியான அறை ஒன்றைத் தனியாகக் கட்டியிருப்பார்கள். தென்கிழக்குத் திசை தவிர எந்தத் திசையில் வேண்டுமானாலும் இந்த அறையை அமைத்துக் கொள்ளலாம். கறுப்பு அல்லது சிவப்பு வண்ணத்தை இந்த அறையில் பூசவே கூடாது. அது தோஷத்தையே தரும். இந்த அறை எப்பொழுதும் சுத்தமாகவும் வாசனையுடனும் இருப்பது நல்லது. ஏதாவது ஒரு இஷ்ட தெய்வத்தின் படத்தை இந்த அறையில் மாட்டி வைக்கலாம்.

## தன அறை

வீட்டில் மிக முக்கியமான அறை இதுதான். அதாவது பணம் வைக்கும் அறைக்கு இன்னொரு பெயர் தன அறை. சிலர் கருவூல அறை என்றும் அழைப்பார்கள். வடக்கு சார்ந்த திசையில் தன அறை அமைவது அதிர்ஷ்டத்தைத் தரும். அதில் தெற்கு அல்லது மேற்கு சுவரில், வடக்கு அல்லது கிழக்கு பார்த்து பணப் பெட்டியை வைக்க வேண்டும். இள மஞ்சள் நிறத்தில் வண்ணம் பூசுவது சிறப்பைத் தரும். முக்கியமாக பணப் பெட்டி அல்லது பீரோவில் தேவையில்லாத பொருட்கள் அல்லது பழைய துணிமணிகளை வைக்கவே கூடாது.

## தானிய அறை

ஸ்டோர் ரூம் என்று அழைக்கப்படும் இந்த அறை வடமேற்குத் திசையில் அமைவது மிகவும் நல்லது. வடகிழக்கு அல்லது தென்மேற்குத் திசையில் அமைவது தோஷத்தைத் தரும். இந்த அறையில் விஷப்பொருள் எதையும் வைக்காதவாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

## தட்டுமுட்டு சாமான்கள் அறை

தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு திசைகளில் அமைந்த அறைக்குப் பக்கத்தில் இந்த அறை அமைவது மிகவும் நல்லது. ஆனால் இந்த அறை ரொம்பவும் பெரியதாக இருக்கக் கூடாது. குறிப்பாக இந்த அறையை காலியாகவே வைத்திருக்கக் கூடாது.

வரும் வாரம் மிக முக்கியமான குளியலறை மற்றும் கழிவறை பற்றிப் பார்ப்போம்.

(பேசலாம்)

படம் : ஸ்ரீஹரி

## ..சொல்கிறேன்!

இரண்டு மாடங்களில் விளக்கு ஏற்றி கண்டிப்பாகப் பயன்படுத்த வேண்டும். கார்த்திகை மாதத்தில் மாலையிலும், மார்கழி மாதத்தில் விடியற்காலையிலும் விளக்கு ஏற்றுவது நல்லது.



**போ**ன ஜென்மத்துல என்னெல்லாம் பாவம் செஞ்சேன்னு தெரியல. இப்போ இப்படி ஒரு பிறவி எடுத்து 'எடுப்பார் கைப்புள்ள'யா வாழ்ந்துக்கிட்டிருக்கேன்.

அதோ தூரத்துல செட்டியார் மாதிரி உட்கார்ந்துருக்காரே, ஆமாங்க 21 இஞ்ச் டீ.வி.யைத்தான் சொல்றேன். அவரு கூட வாழத்தான் என்னை இந்த வீட்டுக்கு ரிமோட்டா (சிர்செனத்தியோட, அதாம்பா பேட்டரில்லாம் போட்டு) அனுப்பி வைச்சாங்க. ம்... வீட்டுக்கு வாக்கப்பட்டு கிட்டத்தட்ட மூணு வருஷமாயிடுச்சு.

உஷ்... சத்தம் போடாதீங்க! நான் இந்த சோபாவுக்கு அடியில ஒளிஞ்சிருக்கேன்னு யார்கிட்டயும் காட்டிக் கொடுத்துடாதீங்க ப்ளீஸ்! இப்பத்தான் கொஞ்ச நேரம் நிம்மதியா எந்தத் தொந்தரவும் இல்லாம இருக்கேன்.

ஆஹா... இந்த வீட்டோட கடைசி வாலில்லாக் குரங்கு என்னைத் தேட ஆரம்பிச்சுட்டான்யா! அவன் கையில மட்டும் மாட்டுனாப்போதும். நரக வேதனைதான். கையில எடுப்பான். சந்தோஷத்துல டபக்குன்னு மேல தூக்கிப் போடுவான். நானும் உத்திரத்துல தலையை இடிச்சிட்டு வந்து கீழ விழுவேன். அப்புறம் போட்டு ஒவ்வொரு பட்டனா அமுக்குவான். 'போகோ'க்கும் 'கார்ட்டூன் நெட்வொர்க்'குக்கும் என்னை மாத்தி மாத்திப் பந்தாடுவான். திடீர்னு ஸ்டார் ஸ்போர்ட்ஸ் வைச்சு ரெஸ்லிங் பார்ப்பான். அப்ப அவன் ஆளு 'ராக்' வந்துட்டாப் போதும். ஸ்க்ரீன்ல ராக் அடிக்கிற அடியெல்லாம் எனக்கும் விழும். அய்யோ வந்துட்டானா, அடப்பாவி மாட்டிக்கிட்டேனே! லொக் லொக்! என்னால முடியல! கொஞ்சம் கழிச்சுப் பேசுறேன்.

*(பத்து நிமிடங்கள் கழித்து)*

**அ**ய்யோ... அம்மா... என்னா உதைங்கிறீங்க. நல்ல வேளை இந்த வீட்டு இளம் மகாராணி வந்து என்னைக் காப்பாத்துனா. ஏதோ ஒரு காலேஜ்ல என்னமோ படிக்கிறா.



லக லக லக லக லக லக லக லக லக லக லக லக லக

# கைப்புள்ள!

சரியான ஜொள்ளுப்பார்ட்டி. எப்பப் பாத்தாலும் எந்த சேனல்ல சூர்யா வர்றான்னு தேடிக்கிட்டே இருப்பா. வந்துட்டா போதும், சூர்யாவுக்கே முத்தம் கொடுக்குறாப்ல எனக்கு முத்த மழை பொழிஞ்சிடுவா! அது ஒண்ணு தான் எனக்குன்னு கிடைக்குற அல்ப சந்தோஷம். ஹிஹி!

ஆஹா... வந்துட்டான்யா, அண்ணன் காரன். கொஞ்சம்கூட மேனர்ஸ்னா என்னன்னே தெரியாதவன். எப்பப் பார்த்தாலும் எதையாவது தின்னுக் கிட்டே இருப்பான். அவன் திங்குற சீஸ் பர்கர்ல இருந்து சாஸ், சாம்பார் சாதம் வரைக்கும் என் உடம்பு மேல தடவாம இருக்கவே மாட்டான். பொதுவா இவன் டீ.வி. பாக்குற டைம்ல காத்து, கறுப்பு, பேய், பிசாசு, ஆவி, பூதம் இதெல்லாம் தான் கூட உட்கார்ந்து பாக்கும். அவன் என்ன பார்ப்பான்னு நான் வேற சொல்லணுமாக்கும். டீ.வி. தானா அணையறதுக்கு அலாரம் செட் பண்ணுவான். அப்புறம், காலைல அஞ்சு மணிக்குத் தானா 'ஆன்' ஆகுற துக்கு வேக் அப் டைம் செட் பண்ணு வான். எல்லாத்தையும் நான் தலை யெழுத்தேன்னு செஞ்சுக்கிட்டிருப் பேன். அவன் குறட்டை விட்டுத் தூங்கிட்டிருப்பான். 'யேய் அவன்தான் தூங்கிட்டிருக்கானே, என்னை ஏன் எழுப்பி விட்ட'ன்னு டீ.வி. என்னை கொலை வெறியோட பார்க்கும்.

இந்த வீட்டோட குடும்பத் தலைவர் மேல எனக்கு ஓரளவு மரியாதை உண்டு. காரணம், அவர்தான் ஒரு சேனலுக்கும் இன்னொரு சேனலுக்கும் இடையில போதிய இடைவெளி கொடுத்து மாத்து வார். ஆனா அதுலயும் ஒரு கொடுமை இருக்கு. சில சமயம் சேனலை மாத்தவே மாட்டார். டீ.வில எவனாவது ஒருத்தன் அவனால எவ்வளவு முடியுமோ, அவ் வளவு மொக்கை போடுவான். தாங்க முடியாம நானே சுயமா சேனலை மாத்திடலாமானு யோசிப்பேன். இருந்தாலும் தொழில் தர்மத்துக்குக் கட்டுப்பட்டு என்னை அடக்கிக்குவேன்.

இதோ வந்துட்டாங்களே, இந்த வீட்டுக் குடும்பத் தலைவி. என்ன, நின்னாங்கன்னா அவங்க கால்விரலைக் கூட அவங்களால பார்க்க முடியாது. அவ்ளோ குண்டு. பாவம் நான் காணா மப் போனா, என்னைத் தேடுறதுக்குள்ள இவங்க படுற பாடு இருக்கே, பார்க்கப் பரிதாபமா இருக்கும். மேல்மூச்சு, கீழ்மூச்சு எல்லாம் வாங்கத் தேடுவாங்க. தேடித்தேடி வெறுத்துப் போய் 'தாலி கட்டிய தனம்' சீரியலைப் பார்க்க முடியாம நிறைய நாள் அழுதுருக் காங்க. பார்த்தாலும் அழத்தான் செய் வாங்க. இப்ப என்ன பண்ணுறாங்க? என்னைத்தான் தேடுறாங்களா? ஹலோ ஆன்ட்டி! நான் இங்க இருக்கேன். இதோ சோபா மேலதான் உட்கார்ந் திருக்கேன். பார்த்துட்டீங்களா... வாங்க வாங்க! அய்யோ... ஆன்ட்டி, நான் கீழ இருக்கேன். என் மேல உட்கார்ந்....

- முகில்

# PCO STD ISD

# அமெரிக்கா தாங்குமா?

## PCO

'வல்லவன்' படம் முடிஞ்சு சீக்கிரத்துல வருமா? வராதா? அப்படிங்கிறதைவிட, ரசிகர்கள் மனசுல ஓடுற கேள்வி 'நயன்தாரா - சிம்பு' லவ்ஸ் மேட்டர் என்ன ஆகும் என்கிறதுதான். எல்லாம், 'வல்லவன்' படத்தைப் பத்திப் பேச்சைக் கிளப்பி விடுறதுக்காகப் பரப்பப்பட்ட நியூசுன்னு ஒரு சாரார் சொல்லிக்கிட்டிருக்காங்க. 'இருக்குது. ஆனா அது அதுதானான்னு தெரியல'ன்னு சிம்பு ஒரு மார்க்கமா பேட்டி கொடுக்க, நயனும் அதுக்கு ஒத்து ஊதுனாங்க. இப்போ, 'காதலர்களா? நாங்களா? இல்லப்பா, வெறும் பிரெண்ட்ஸ்தாம்பா'ன்னு நயன் புது (!) அறிக்கை விட்டிருக்காங்க. பெட்ரோல் விலை ஏறிக் கெடக்கு. இது தேவையான நியூசான்னு கொதிக்கிறவங்க அடுத்த நியூசைப் படிக்காதீங்க.

## STD

ஐஸ்வர்யாராய்க்கும், அவரோட பாய்பிரண்ட் அபிஷேக்குக்கும் இடைப்பட்ட உறவு என்னாச்சு? கல்யாணம் நடக்குமா? நடக்காதா? 'பிக் பி மனசுல யாரு'ன்னு எல்லாரும் கிராண்ட் மாஸ்டர் கேள்வி கேட்டுக்கிட்டு இருக்கோம். ஆனா ஐஸ் மனசுல இப்போ இருக்குறது வித்யா பாலன். புதுத் தோழி. மணிரத்னத்தோட 'குரு' படப்பிடிப்புல (சென்னையில நடக்குது) ஐஸூம் வித்யாவும் அப்பப்பப்பப்டி ஒரு பிரெண்ட்ஷிப்போட அலையுறாங்களாம். செட்ல அபிஷேக்கை, ஐஸ் அவ்வளவா கண்டுக்கறதில்லையாம். அதோட, ஷாயித் அலியோட அடுத்த படத்துல கமிட் ஆகியிருக்கிற அபிஷேக், ஐஸை தனக்கு ஜோடியாக்க முயற்சி பண்ணுனாரு. ஆனா ஷாயித் அலி, வித்யா பாலனை ஓகே பண்ணிட்டாராம். பாவம் அபிஷேக், ஐஸோட தோழியை வேண்டாம்னு சொல்ல முடியுமா என்ன!

## ISD

போனவாரம் அமெரிக்காவுல ஒளிபரப்பான பிரிட்னி ஸ்பியர்ஸோட அழுகை பேட்டியை நீங்க பார்த்திருக்க முடியாது. நம்ம ஊரு பாட்டிங்க யாராவது பார்த்திருந்தாங்கன்னா, 'எப்படி இருந்த புள்ளைய, இப்படி ஆக்கிப்புட்டானே, பாவி, நீ நல்லா இருப்பியா'ன்னு பிரிட்னியோட புருஷன் கெவினுக்குக் கண்டிப்பா சாபம் விட்டுருப்பாங்க. (குண்டான) பிரிட்னி இப்ப ரெண்டாவது குழந்தை உண்டாயிருக்காங்க! 'எனக்கும் கெவினுக்கும் எந்தப் பிரச்னையும் இல்ல. எங்க லவ் அப்படியேதான் இருக்கு'ன்னு சொல்லிக்கிட்டே இருந்தவங்க, ஒரு கட்டத்துக்கு மேல அதைப் பத்தி திரும்பத் திரும்ப கேட்டவுடனே 'இதுக்கு மேல நான் அழுதுருவேன்'னு துக்கம் தாங்காம அழ ஆரம்பிச்சுட்டாங்களாம். ஏன்னா, கெவின் செமத்தியா போதைப் பொருள்களுக்கு அடிமையாகிட்டாராம். ஓ மை காட், பிரிட்னி அழுதா அமெரிக்கா தாங்குமா?

- முகில்



# "நான் நல்லவனா... கெட்டவனா?"

'பன்னீர் புஷ்பங்கள்' படத்தின் மூலம் அறிமுகமாகி தமிழ்த் திரையுலகில் கதாநாயகனாக கலக்கியவர் சுரேஷ். தமிழ், தெலுங்கு, மலையாளம் என 260 படங்களில் நடித்திருக்கிறார். தற்போது 'கிழக்குக் கடற்கரைச்சாலை' படத்தில் வில்லனாக நடித்து வரும் சுரேஷை மடக்கி, 'திரையுலகை விட்டு விலகி இத்தனை ஆண்டுகள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?' என்றோம்.

"தமிழ்த் திரையுலகை விட்டு விலகியிருந்தேனே தவிர, திரையுலகை விட்டு விலகவில்லை. இடையில் தெலுங்கில் நான்கு படங்கள் பண்ணியிருக்கிறேன். 'லக்ஷ்மி நிவாஸ்' புரொடக்ஷனில் தெலுங்கு சீரியலும் தயாரித்தேன். 'காதல்', 'அழகி', 'ஆட்டோகிராஃப்' போன்ற அழகிய தமிழ் சினிமாக்களைப் பார்க்கிறபோது திரும்பவும் தமிழில் நடிக்கணும்னு ஆசை வந்தது. அந்தச் சமயத்தில் எஸ்.எஸ்.ஸ்டான்லி கதை சொல்ல, அது எனக்குப் பிடித்துப் போய்விட 'கிழக்குக் கடற்கரைச் சாலை' படம் மூலமா என் ஆசை நிறைவேறிடுச்சுன்னு சொல்லலாம்.

இந்தப் படத்தில் நான் நல்லவனா, கெட்டவனான்னு தீர்மானிக்க முடியாத வித்தியாசமான ரோல். படத்தைப் பாருங்க உங்களுக்கே புரியும்" என்றவர் தொடர்ந்து ஆர்வமாகப் பேசினார்...

"என்னுடைய பலவீனம் நான் 'பன்னீர் புஷ்பங்கள்'ல நடிச்சதுதான். சுரேஷ்னா பெண்களைக் காதலிக்கும், காதலிக்க வைக்கும் ஒரு சாஃப்ட்டான சின்னப் பையன்னு முத்திரை குத்திட்டாங்க. அதை மாத்தணும்னு ரொம்ப நாளா ஆசைப்பட்டேன். அதனாலதான் 'குங்குமம்' சீரியல்ல ஒரு வில்லனா நடிச்சேன். இப்போ சுரேஷ் மெச்சூரிட்டியான நடிகனாயிட்டான்னு சொல்ற அளவுக்கு அந்த சீரியல் எனக்குப் பலமா அமைஞ்சது."

இன்னைக்குத் தமிழ் சினிமா ரொம்பவே மாறியிருக்கு. நான், கார்த்திக் எல்லாம் நடிக்க வரும்போது எங்களுக்கு ஃபுல் சப்போர்ட் இருந்தது. ஹீரோன்னா இப்படித்தான் இருக்கணும்னு ஒரு கட்டுப்பாடு இருந்தது. ஆனா, இப்போ அதெல்லாம் மாறி, ஹீரோவோட கேரக்டர் எப்படி வேணும்னாலும் இருக்கலாம்னு கதைகள் வர ஆரம்பிச்சுடுச்சு. ஹீரோவைப் பார்த்து படம் ஓடாமல், நல்ல திரைக்கதைக்கு முக்கியத்துவம் கொடுக்க ஆரம்பிச்சுட்டாங்க ரசிகர்கள். இந்த ஆரோக்கிய மாற்றம் என்னைக்கும் தொடரணும்."

சந்திப்பு : **மனோன்மனோ**

படம் : **பொள்ளாச்சி சுந்தரம்**

கதகளிக்கு ஜன்மபூமி தமிழ் தேசந்தான் என்று எனக்குத் தீர்மானம் ஏற்பட்டிருக்கிறது. பூர்வத்தில் மலையாளம் தமிழ்நாட்டின் ஒரு பகுதியான சேரநாடாகத்தான் இருந்தது. தமிழ் நாட்டின் கதகளி பிற்காலத்தில் அங்கே மாத்திரம் தங்கிவிட்டிருக்கிறது. 'கதகளி' என்பது களி, திருவாதிரைக்களி என்றே பேர் வைத்துவிட்டாற் போலிருக்கிறது! ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லாத தனிப் பாடல்களுக்கு டான்ஸ் என்றில்லாமல்,

# கதகளியின் மூலம்!

'கதை-களி' என்ற இரண்டு வார்த்தைகளின் கூட்டு. கதை என்றால் கதைதான். 'களி' என்பது டான்ஸாகிய கூத்துக்கே தமிழில் வழங்கிய இன்னொரு பெயர். கூத்தனான நடராஜாவின் Favourite நைவேத்யத்துக்கு இதனால்தான்



ஒரே பெரிய கதையை நாட்யத்வாரா விளக்கி ஆடுகிற dance drama என்பதே 'கதகளி' என்பதன் அர்த்தம்.

கதகளிக்காரனின் டர்பன், தோடு, மூஞ்சியில் அவன் அப்பிக்கொள்கிற கலர்ப் பூச்சு, இவற்றோடு அவன் மாதிரியே கத்தியைப் பிடித்துக்கொண்டு ஆடுகிற டான்ஸ் தமிழ்நாட்டில் ஆதியிலேயே இருந்திருக்கிறது. உக்ரகாளியோடு ஈச்வரன் நாட்டியப் போட்டி நடத்தி, ஊர்த்வ தாண்டவம் செய்து அவளை அபஜயப்படுத்தி, அவளுடைய உக்ரத்தை சாந்தமாக்கினதைப் பண்டைய தமிழ்நூலில் சாந்திக்கூத்து என்று சொல்லியிருக்கிறது. அதுதான் கதகளிக்கு மூலம்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்

"இந்த ஹீரோ நடிக்க வந்ததே ஒரு ஆக்ஸிடெண்ட்டாம்!"

"அது சரியா ஆகியிருந்தா, இப்ப நம்ம உயிர் போகாதில்லே!"

- வெ.சீதாராமன்





"நான் எம்.எல்.ஏ ஆவேன்னு எதிர்பார்க்கல."

"நீங்கதான் என்னைத் தேர்ந்தெடுக்கலேன்னா திரும்பவும் நடிக்கப் போயிடுவேன்னு மிரட்டினீங்களே...!"

- பிரசன்னா

# ஆக்ஸிடெண்ட் ஹீரோவும் மிரட்டல் ஹீரோயினும்

"வாடகைக்குக் குடியிருந்த வீட்டை ஏன்யா இடிச்சுத் தள்ளிட்டே?"

"ஹவுஸ் ஓனர்தாங்க சொன்னாரு... இன்னும் ஒரு மாசத்துக்குள்ள வீட்டைக் காலி பண்ணணும்னு."

- குட்டி பிரசன்னா





"எனக்கு ஆபரேஷன் பண்ணப் போற கருவிகளை எல்லாம் எதுக்கு என்கிட்ட காட்டுறீங்க டாக்டர்?"

"ஆபரேஷனுக்கு அப்புறம் யார் கிட்ட காட்டுறது?"

- அம்பை தேவா

# 12

கடலில் அலைகள் ஓய்வதில்லை. ஒவ்வொரு அலையும் மேல் நோக்கி எழுகிறது. ஆனால் அடுத்த நிமிடமே, கீழே விழுந்து விடுகின்றது. ஒரு அலையாவது ஒரு நிமிட நேரத்துக்குத் தொடர்ந்து நிமிர்ந்து நிற்கிறதா? இல்லையே! அது போலத்தான் பொருட்களின் பின்னே, சுகம் கிடைக்கும் என்ற ஆசையுடன் செல்லும் மனிதனும் துக்கத்தையே அனுபவிக்க நேரிடுகிறது. மனம் சுகத்தைத் தேடி வெளியில் அலைவதால், உண்மையான சுகத்தை அனுபவிப்பதில்லை. அதற்கு மாறாகத் துக்கமே ஏற்படுகிறது.

குடும்ப வாழ்விலும், அன்பும் நிம்மதியும் இல்லை. இதயம் திறந்து அன்பு செலுத்தவும் சேவை செய்யவும் கூடிய பண்பு போய்விட்டது.

உலக சுகத்தை அளவற்று விரும்பும் காரணத்தால், சொந்த மகளைக்கூட புரிந்துகொள்ளும் கண்கள் இன்று இல்லை. சகோதரன், சகோதரி என்ற உறவுகூட நசிந்துவிட்டது. எத்தனையோ பெண்கள் கொலை செய்யப்படுகிறார்கள். இன்று உலகில் நடைபெறும் அனைத்து அதர்மங்களுக்கும், வெளியில் சுகம் இருக்கிறது என்கிற மயக்கம்தான் காரணமாகும்.



சுகமே வேண்டாம் என்று அம்மா சொல்லவில்லை. சுக நாட்டம் அளவுக்கு அதிகமாக இருக்கக்கூடாது. எந்தச் சமயத்திலும் தர்மத்தைக் கைவிடக் கூடாது. தனது சுகத்தை விரும்பி, கட்டுப்பாடின்றி வாழ்ந்தால் நாசமே.

முறையற்ற சிந்தனைகள் மனத்தில் வருவது இயல்புதான். ஆனால், அதனைக் கட்டுப்படுத்த வேண்டும். பசி இயல்பானது. பசி எடுக்கும் போது உணவு சாப்பிட வேண்டியது அத்தியாவசியம்தான். அதே சமயம், உணவுப் பொருட்களைக் காணும் போதெல்லாம் எடுத்துச் சாப்

பிட்டால் நோய் வந்து, படுக்கையில் கிடக்க வேண்டியதுதான். இதுபோல, அளவுக்கு மிஞ்சிய சுகம் தேடும் விருப்பம், பின்னே துக்கத்தையே கொடுக்கும். நாம் சுகத்தை அனுபவிக்கிறபோது உணரும் சுகம்கூட, உண்மையில் நம் உள்ளே இருந்து கிடைப்பது தான். இதனை நாம் புரிந்துகொள்வதில்லை.

நாய் எலும்பைக் கடித்துத் தின்னும்போது, ரத்தத்தையும் சுவைக்கும். ஆனால் தான் சுவைக்கும் ரத்தம், தான் கடித்துக்கொண்டிருக்கும் எலும்பு தன் வாயிலுள்ள ஈறினைக் குத்திக் கிழித்ததால் வருகிறது என்று அறியாது. இறுதியில் ஈறு வலி தாங்காமல் நாய் துடிக்கும். இதுபோலவே, நாம் விஷய சுகத்துக்காக அலைந்து திரிந்து, துன்பத்தில் ஆழ்ந்து, நிராசையடைந்து, வலியில் துடித்து வாழ்க்கையில் சோர்ந்து போகிறோம். மீண்டும் சுகத்துக்காக எழுந்து ஓடுகிறோம். மறுபடியும் சோர்ந்து விழுகிறோம்.

குழந்தைகளே! நாம் நம் மனதைப் படிக்க வேண்டும். உண்மையான ஆனந்தம் அங்குதான் இருக்கிறது. அதனைக் கண்டறிந்து அனுபவிக்க வேண்டும். மனதின் சஞ்சலத் தன்மையை நிறுத்தினால்தான் அது சாத்தியம். ஆழ்கடலுக்குள்ளே அலைகளில்லை. அதுபோல், மனத்தின் ஆழத்துக்குச் சென்றால், அது தானே சலனமற்ற நிலையினைப் பெற்றுவிடும். அதன்பின் அங்கே ஆனந்தம் மட்டுமே எஞ்சியிருக்கும்.

விதை மண்ணுக்கு அடியில் சென்றால்தான் அது முளைத்து, செடியாகி, மரமாக வளரும். கட்டடம் கட்டுகிறபோது அஸ்திவாரத்தை எந்த அளவுக்கு ஆழமாகப் போடுகிறோமோ, அதற்கேற்ப பல மாடிகளைக் கட்டலாம். கட்டடமும் பலமாக இருக்கும். நம்முடைய உயர்வுக்கு நம்முடைய பணிவும், பரந்த மனப்பான்மையுமே அஸ்திவாரம். யார் ஒருவர் இதயத்துக்கு முக்கியத்துவம் கொடுக்கிறாரோ, அவரிடம் பணிவும், ஒத்துழைக்கும் மனோபாவமும் வளர்கிறது.

பரந்த இதயமே ஆன்மிகத்தின் லட்சியமாகும். பரந்த இதயம் உள்ளவர்களால் மட்டுமே இறைவனை அறிய முடியும். சர்க்கரையை எவ்வளவு தின்றாலும், அதனுடைய இனிப்பை வார்த்தைகளால் விவரிக்க முடியாது. ஆன்மிகமும், அவ்வாறே வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட ஒரு தத்துவம். அது ஒரு அனுபவம். அதனை இதயத்தால் மட்டுமே உணர்ந்துகொள்ள முடியும்.

புத்தியும், இதயமும் உண்மையில் வெவ்வேறில்லை. விவேக புத்தி இருந்தால் பரந்த மனம் தானே வரும். பரந்த மனத்திலிருந்து களங்கமற்ற தன்மையும்,

# இதயம் திறப்போம்!

மாதா அமிர்தானந்தமயி

விட்டுக் கொடுக்கும் சுபாவமும் ஏற்படும். அந்தப் பரந்த மனப்பான்மையின் மறுபெயரே இதயம். 'இதயம்' என்கிற வார்த்தையைக் கேட்கிறபோதே குளுமையை உணர முடியும். ஆனாலும் இன்று பெரும்பாலானவர்களுக்கு வெறும் அறிவு மட்டுமே இருக்கிறது. விவேக புத்தி இல்லை.

ஒருவர் அலுவலகத்தில் பெரிய அதிகாரியாக இருக்கலாம். அலுவலகத்தில் அவருக்கு நிறைய அதிகாரங்கள் இருக்கலாம். அதற்காக அவர் தன்னுடைய வீட்டில் மனைவியிடமும், குழந்தைகளிடமும் அன்போடு ஒரு வார்த்தை பேசாமல் அலுவலக வேலையைத் தொடர்ந்தாலோ, அதிகாரம் செலுத்தினாலோ, வீட்டில் உள்ளவர்களுக்கு அது பிடிக்குமா? வீட்டில் அமைதி நிலவுமா?

அதேசமயம், அந்த அதிகாரி வீட்டுக்கு வந்தவுடன் மனைவியிடம் அன்பாகச் சில வார்த்தைகள் பேசிவிட்டு, குழந்தைகளிடம் சிறிது நேரம் செலவழித்துவிட்டு, அதன் பின் தன்னுடைய அலுவலக வேலையைப் பார்க்கப் போனால், வீட்டில் எல்லோரும் சந்தோஷமாக இருப்பார்கள். குடும்பத்தில் அமைதி நிலவும்; சந்தோஷம் தழைக்கும். அதற்கும் மேலாக குற்றம் குறைகளைப் பொறுத்துக் கொண்டும், சகித்துக் கொண்டும் வாழ்கிற மனப் பக்குவம் ஏற்படும்.

கணவனுக்கு மனைவி மீதும், மனைவிக்குக் கணவன் மீதும், இருவருக்கும் குழந்தைகளிடத்தும் அன்பு இருப்பதால்தான், அவர்களது குறைகளையும் தாண்டி அவர்கள் மீது அன்பு செலுத்துகிறார்கள். அங்கே இதயத்துக்குத்தானே முக்கியத்துவம் அளிக்கிறோம்?

வியாபாரத்தில் புத்தியை உபயோகிக்கலாம்; அலுவலகத்தில் புத்தியை உபயோகிக்கலாம். ஆனால் குடும்பத்துக்கு அவசியமானது இதயம்தான்! அது இல்லையென்றால் நிம்மதி தொலைந்து போய்விடும்.

*(அன்பு பெருகும்)*

ஒருநாள் இடமண்ணேல் இல்லத்துக்கு ஒரு நாய் வந்து சேர்ந்தது. அது எப்போதும் சுதாமணியையே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கும். யாராவது அவருக்குத் துன்பம் விளைவிக்க முயற்சி செய்தால் அவர்களைப் பார்த்து உரக்கக் குரைக்கும். சில சமயங்களில் சுதாமணி இந்த நாயையே தலையணையாக்கி, அதன் மீது தலை வைத்து, வானத்தை நோக்கிப் பார்த்தபடி படுத்திருப்பார். பல சமயங்களில் அந்த நாயும் சுதாமணியின் மடியில் வந்து படுத்துக்கொள்ளும்.

ஒருநாள், அந்த நாயை நகராட்சியிலிருந்து நாய் பிடிப்பவர்கள் பிடித்துச் சென்றுவிட்டனர். இந்தத் தகவலைக் கேள்விப்பட்ட சுதாமணி, அங்கே சென்றார். அவரைக் கண்டவுடன் அந்த நாய் குரலெடுத்து அழுவதுபோல ஓலமிட்டது. அதன் கண்களில் கண்ணீர் பெருகியது. இந்தக் காட்சியை கண்ட நகராட்சியினர், அந்த நாயை விட்டுவிட்டார்கள்.

"இப்போது தப்பிவிட்டாலும், இன்னும் சில நாட்களில் இந்த நாய் வெறி பிடித்து இறந்துவிடப் போகிறது" என்று கூறினார் சுதாமணி. அவர் சொன்னபடியே சில தினங்களில் அந்த நாய் வெறிபிடித்து இறந்துபோனது.

\- மௌலி





# கரைபுரளும் உற்சாகம்!

யாராவது ஐ.ஐ.டி. படித்துவிட்டு யோகா மாஸ்டராகப் போவார்களா?

தினேஷ் காஷிகர் போயிருக்கிறாரே. தஞ்சாவூர்க்காரரான தினேஷ் மும்பை ஐ.ஐ.டியில் கெமிக்கல் இஞ்சினியரிங்கில் மாஸ்டர் பட்டம் பெற்றவர். நாடகங்களில் ஆர்வம் கொண்டு நடிக்கவும் இயக்கவும் செய்திருக்கிறார். எல்லாம் சரி, எப்படி யோகா மாஸ்டரானார்?

"என் வாழ்க்கையில் ஏதோ குறைபாடு இருந்ததுபோல் எனக்குப் பட்டது. ஒரு பார்ஸி நண்பர் மூலம், ஸ்ரீஸ்ரீ ரவிசங்கரின் ஆர்ட் ஆஃப் லிவிங் பயிற்சியில் கலந்து கொண்டேன். பயிற்சியின்போது என்னில் உற்சாகம் கரைபுரள்வதை உணர்ந்தேன். 'சுதர்சன க்ரியா' பண்ணும்போது, கண்ணுக்குள் குருஜியின் வடிவம் தெரிந்தது. எப்போதும் புத்துணர்ச்சியுடன் இருந்தேன்.

என்னுடைய பிறந்த தினமான ஜூன் 4-ம் தேதி குருஜியைச் சந்தித்து வணங்கிவிட்டுப் போகலாம் என வந்தேன். 'தியானம் செய்' என்றார். உடனேயே 'தொடர்ந்து செய்; நடுவில் எழாதே'எனக் கட்டளையிட்டார்.

அன்று ஒரு மணி நேரத்துக்குமேல் தியானம் செய்திருப்பேன். நூற்றுக் கணக்கில் எறும்புகள் கால்களில் பிடுங்கின. குருஜி வந்து எழச் சொன்ன பிறகே எழுந்தேன். குருஜியின் கட்டளையை மீற விரும்பாததால் இடையில் எழவில்லை."

தினேஷ் காஷிகரின் வாழ்க்கைப் பாதை திசை திரும்பியது இங்கேதான். மெல்ல மெல்ல தியானம், யோகா இவற்றில் ஆர்வமானார். படித்துவிட்டு தியானம் யோகா என்று பையன் அலைகிறானே என்று பெற்றோர் முதலில் தடுத்தாலும், ஆர்ட் ஆஃப் லிவிங்கில் பையன் உற்சாகமாக இருப்பதைக் கண்டு அங்கீகரிக்க ஆரம்பித்து விட்டார்கள். விஷயம் அத்தோடு போகாமல் அவர்களும் ஆர்வமாக ஆர்ட் ஆஃப் லிவிங்குக்கு வர ஆரம்பித்தார்கள். தினேஷின் தந்தையான துருவராவ், ஸ்ரீஸ்ரீ ரவிசங்கரின் நூல்களை கன்னடத்தில் மொழி பெயர்த்திருக்கிறார்.

"அமெரிக்க பல்கலைக் கழகங்களிலிருந்து அழைப்புகள் வந்தன. மன ஓட்டங்களைக் கட்டுப்படுத்தும் புதிய தியானப் பயிற்சிகளைக் கண்டறிவதில் ஆர்வமாயிருந்ததால் அழைப்புகளைப் பொருட்படுத்தவில்லை. மேலும், முதுகுவலியில் அவதிப்படும் ஆயிரக் கணக்கானவர்களின் அவஸ்தைகளைப் பார்த்து புதிய யோகாசன முறைகளை அறிமுகப்படுத்தியிருக்கிறேன். இவற்றைப் பயிற்சி செய்வதின் மூலம் ஸ்பைனல் கார்டைப் பலப்படுத்திக் கொள்ளலாம்" என்கிறார் தினேஷ்.

வாழ்க்கையை எதிர் கொள்ளத் துணிவில்லாமல், மனச்சோர்வால் தற்கொலை பண்ணிக் கொள்பவர்கள் எண்ணிக்கை இன்று அதிகரித்து வருகிறது. அவர்களுக்கு தைரியமூட்டவும், பிரச்னைகளை எதிர்கொள்ளும் திறனை வளர்க்கவும் யோகா - தியானம் தொடர்பான டீவி தொடர்களையும் இயக்கி வருகிறார்.

- சாருகேசி

பூஜாவின் தாய்மண் பெங்களூர். இங்கு இவரால் நிம்மதியாக நடமாட முடியும். மார்க்கெட்டில் பேரம் பேசி தக்காளி, காலிஃப்ளவர் எல்லாம் வாங்க முடியும். ஆனால் அந்நியப் பிரதேசமான தமிழ்நாட்டில் இதெல்லாம் சாத்தியமில்லை. தமிழ்நாடறிந்த பூஜாவுக்கு சென்ற இடமெல்லாம் ரசிகர்களின் அன்பு. பொறி, ஆட்டோ, தகப்பன்சாமி என வரிசையாகத் தமிழ்ப் படங்கள் கைவசம். சினிமா ஷூட்டிங்கை மூட்டை கட்டிவிட்டு நம்மிடம் நிறைய பேசினார்.

**பார்க்க விரும்புகிற நபர்?**

"லல்லு பிரசாத் யாதவ். 'நீங்க வல்லவரு நல்லவரு, எங்க ஊருக்கு ஒரு பறக்கும் ரயில் திட்டம் போட்டுத்தாங்க முதலா சந்திச்சு பேசிப் பழகியிருக்காங்க. அப்பா காலேஜ் விழாவுல அம்மாவுக்காக 'ஹாலு ஜேனு ஒந்த காமேலே'ங்கிற பாப்புலர் கன்னடப் பாட்டைப் பாடி அசத்தியிருக்காங்க. அதோட அர்த்தம் - 'பாலும் தேனும் சேர்ந்தா எப்படியிருக்கும்?' டாடி கலக்கிட்டாரு இல்லை!"

**சிநேகிதிகள்?**

"நான் எல்.கே.ஜியிலிருந்து எம்.பி.ஏ வரைக்கும் பெண்கள் வாசனை மட்டுமுள்ள கேம்பஸுலதான் படிச்சேன். ஹாஸ்டல்வாசி. என்னைத்தவிர எல்லோரும் வால் முளைச்ச பொண்ணுங்க. கேட்மேலே எகிறிக் குதிச்சு சினிமா போவாங்க."

**காதல் தூது?**

"அதுக்கு நம்ம ஃப்ரெண்ட்ஸ் யாராவது லவ் பண்ணணுமே! என் ஃப்ரெண்ட்ஸ் என்னை மாதிரி சமர்த்து. ச்சோ ஸ்வீட்! எங்க கேங் சேர்ந்தா மன்மோகன்சிங், அபிஷேக் பச்சன், டாட்டா பிர்லான்னு நாட்டு நடப்பைப் பத்தித்தான் பேசுவோம். அதானே பொழைப்புக்கு உதவும்!"

# லாலுவிடம் ஒரு கோரிக்கை!

சாரே'ன்னு கேட்பேன். தாய்லாந்து, மலேசியாவுல எல்லாம் பறக்கும் ரயில்ல ஜிலுஜிலுன்னு போயிருக்கேன். நம்ம மக்களும் அதை அனுபவிக்க வேண்டாமா?"

**ஒரு காதல் கதை?**

"ம்... எங்க அப்பா, அம்மா காதலிச்ச கதையே சூப்பரா இருக்கும். இலங்கைவாசியான அம்மா ஸ்காலர்ஷிப் கிடைச்சு அலஹாபாத் காலேஜ்ல பி.எஸ்.சி. ஹோம் சயின்ஸ் சேர்ந்தாங்க. பெங்களூர்வாசியான அப்பாவுக்கும் அதே ஸ்காலர்ஷிப், அதே காலேஜ். ஆனா எம்.எஸ்.சி ஹோம் சயின்ஸ். ரெண்டு பேருக்கும் ஒரே வகுப்பு, ஒரே பெஞ்ச்! அம்மாவுக்குக் காலையிலும் அப்பாவுக்கு மதியமும் க்ளாஸ். பிராக்டிகல் க்ளாஸ்ல எதிரெதிலயே சீட். அங்கேதான்

**விரும்பும் மாற்றம்?**

"மென்மனசுக்காரி நான். கடக ராசிக்காரங்க எல்லாம் இப்படித்தான் இருப்பாங்களாம். யாராவது தப்பா பேசிட்டா சட்டுனு மனசு உடைஞ்சிடுவேன். இந்த உலகத்துல பாதிப்பேர் குணத்துல முரடர்களாத்தான் இருக்காங்க. 'அவங்களை இருந்தச் சொல். நான் இருந்தறேன்'னு நாயகன் டயலாக் அடிக்காம, நம்மை மாத்திக்கிறதுதான் உத்தமம்."

**மன்னிப்பு கேட்க விரும்புவது...**

"கடவுளிடம். என்னதான் நல்ல பொண்ணா வாழ நினைச்சாலும் எப்படியோ சின்னச் சின்னத் தவறுகள் பண்ணிடறேன். நான் இறந்ததும் சொர்க்கத்துக்குப் போக

## - பூஜா



விரும்பறேன். கடவுள்கிட்டே சரண் அடையணும்."

**சென்டிமெண்ட் உண்டா?**

"சேச்சே... நான் புது வீடு வாங்கினா நல்ல வெளிச்சம், காற்றோட்டம் எல்லாம் இருக்கான்னு மட்டும்தான் பார்த்து வாங்குவேன். தவிர வாஸ்து, ஜோசியம், கைராசி, முகராசி, செவ்வாய்க்கிழமை எதுவும் பார்க்கமாட்டேன். கடவுள் படைச்ச எல்லா நாளும் எல்லா நேரமும் எல்லா திசைகளும் நல்லதுதானே!

**தமிழ் மொழி?**

" 'தமிழுக்கு அமுதென்று பேர்' என்ற பாரதிதாசனோட வரிகள் பிடிக்கும். தமிழ் ஓர் இசைமொழி. நான் தமிழ்ப் பொண்ணா பிறக்கலேன்னாலும் தமிழ் நடிகையா இருக்கிறதுல பெருமிதப்படறேன்."

**பெண்கள் - ஆண்களிடம் பிடிக்காதது?**

"பெண்கள் பலவீனமானவங்க. ஆண்களை நம்பியே வாழணும். இதை பெண்கள் மாத்திக்கணும். ஆண்கள் குப்குப்னு புகை விடறது மஹாசும்..."

**எதிர்காலம்?**

"வடு மாங்கா, தயிர் சாதம் போதும் எனக்கு. வசதியா வாழறோம்ங்கிறதைவிட நிம்மதியா வாழறோம்ங்கிறது தான் முக்கியம்."

**- சநகன்**

படம் : **ஆண்டனி ஸ்ரீதர்**

பத்திரிகைத் தொழிலிலும் பொது வாழ்க்கையிலும் ஈடுபட்டவர்களுக்கு அநாமதேய மொட்டைக் கடிதம் வருவது சர்வ சாதாரணம். எனக்கும், சில சமயம் பயங்கரமான அநாமதேயக் கடிதங்கள் வந்திருக்கின்றன. இதற்கு மாறாக, 1942-ம் வருஷக் கடைசியில், கையெழுத்துப் போட்ட பயங்கர கடிதம் ஒன்று எனக்கு வந்தது! படிக்கும்போதே மயிர்கூச்செறியும்படியான அந்தக் கடிதம் வருமாறு:–

**ஓ கல்கியாரே!**

**நாளை அமாவாசையன்று நாம் உமது வீட்டுக்கு விஜயம் செய்து உம்மை ரணபத்ரகாளிக்குப் பலி கொடுக்கப் போகிறோம். நீர் ஊரை விட்டு ஓட எண்ணினாலும் விட மாட்டோம். எங்கே போனாலும் தொடர்ந்து வந்து பலி கொடுப்போம். தப்பி ஓடுவதற்கு வீண் முயற்சி செய்ய வேண்டாம்.**

**இங்ஙனம்,**

**மகா கபாலபைரவர்**

அமாவாசையன்று நண்பர்கள் எல்லோரும் என்னைச் சூழ்ந்துகொண்டார்கள். அப்பால் இப்பால் நகராமல் இராத்திரி பன்னிரண்டு மணி (பழைய மணி) வரையில் இருந்து பார்த்தார்கள். மேலும் இருப்பதில் நியாயம் ஒன்றும் இல்லாமல் மனமின்றி விடை பெற்றுக்கொண்டு கிளம்பினார்கள். போகும் போது அவர்களுடைய முகத்தில் காணப்பட்ட ஏமாற்றத்துக்கு அளவில்லை.

ஆம்; அன்று நடு ஜாமத்துக்குப் பிறகு, காத்திருந்த நண்பர்கள் எல்லாம் போய்விட்ட பிறகு, மகா கபால பைரவர் வரத்தான் செய்தார்! ஆனால், கடிதத்திலே கண்டபடி நடப்பதற்கு நான் இடங்கொடுக்கவில்லை. அதற்கு நேர்மாறாகக் காரியத்தை நடத்திவிட்டேன்!

அதாவது, மகா கபால பைரவர் என்னைப் பலி கொடுக்கவில்லை.

அவரை நான் பத்திரகாளிக்குப் பலி கொடுத்துவிட்டேன்!

அந்தக் காரியத்தில் என்னுடைய கையை நான் கறைப்படுத்திக் கொள்ளவில்லை!

அவருடைய சீடன் சித்திரக் குள்ளனைக் கொண்டு அவரை வாளினால் தீர்த்துவிடப் பண்ணினேன்!

அதாவது, 'பார்த்திபன் கனவு' என்ற கதையில், மகா கபால பைரவரைச் சித்திரக்குள்ளன் வெட்டிக் கொல்லும் அத்தியாயத்தை எழுதி முடித்தேன்.

# கபால



ஆனால், அன்றைய இரவின் பயங்கரங்கள் அத்துடன் முடிந்துவிடவில்லை.

மேற்படி அத்தியாயத்தை எழுதி முடித்த பிறகு படுத்துத் தூங்கப் பிரயத்தனப்பட்டேன். வெகுநேரம் வரை தூக்கம் வரவில்லை. கடைசியில் கொஞ்சம் ஏதோ கண்ணயி




மைகள் கனத்து மூடுவது போலிருந்தன. பாதி விழிப்பும் பாதித் தூக்கமுமாயிருந்த அந்த நிலையில், மகா கபால பைரவரின் கோரமான ஆவி உருவம் வந்து என் முன்னால் நின்றது.

பைரவர் தமது ஒற்றைக் கையினால் என்னை எழுந்து வரும்படியாகச் சமிக்ஞை செய்தார்.

என்னால் மீற முடியாத ஏதோ ஒரு சக்தியினால் கவரப்பட்டவனாய்ப் படுக்கையிலிருந்து எழுந்தேன்.

ஆவி உருவம் முன்னால் செல்ல, நான் பின்னால் சென்றேன். விரைவாக, இன்னும் விரைவாக, மேலும் விரைவாக, மனோவேகத்தையும்விட விரைவாக, வானவெளியில் வடதிசை நோக்கி நாங்கள் யாத்திரை செய்தோம். இவ்விதம் நாங்கள் யாத்திரை செய்த நேரம் ஒரு கணமாகவும் தோன்றியது. அதுவே ஒரு யுகமாகவும் தோன்றியது; முடிவில் ஆகாயத்திலிருந்து கீழே பூமியில் இறங்கினோம்.

நாங்கள் இறங்கிய இடம் மலைப்பிரதேசம். எதிரே அடுக்கடுக்காக மலைத் தொடர்கள் தெரிந்தன.

அவ்விடத்தில் இறங்கியவுடனே கபால பைரவர் தன்னுடைய ஒற்றைக் கையினால் தரையிலே சுட்டிக் காட்டினார். அவர் காட்டிய இடத்தை உற்றுப் பார்த்தேன்.

ஆஹா! என்ன கோரம்! என்ன பயங்கரம்! ஒரு தனித்த கை, தோளினருகில் துண்டிக்கப்பட்ட ஒரு கை, அங்கே கிடந்தது!

பைரவரின் முகத்தில் புன்னகை இன்னும் விசாலமாக மலர்ந்தது. அவர் குனிந்தார். என்ன செய்யப் போகிறார் என்று நான் சொல்ல முடியாத வியப்புடனும் அருவருப்புடனும் பார்த்துக் கொண்டிருந்தேன். பைரவர் குனிந்த உடனே, கீழே கிடந்த கை நிமிர்ந்து எழுந்து அவர் தோளிலே ஒட்டிக் கொண்டது.

ஒற்றைக் கையுடனே தரையில் குனிந்த கபால பைரவர் இரண்டு நீண்ட கரங்களுடன் எழுந்து நின்றார்!

அடி வயிற்றிலிருந்து வருவது போன்ற அவருடைய ஆழ்ந்த குரலில் "வந்தனம்; என்னைப் பலி கொடுத்ததற்காக ரொம்ப வந்தனம்" என்றார்.

நான் திகைத்து நின்றேன்.

"போய் வருகிறேன்; மறுபடியும் வந்தனம்!" என்றார்.

"எங்கே போகிறீர்கள்! இது என்ன இடம்?" என்று கேட்டேன்.

"இதுதான் அஜந்தா மலை; மலைக்குள்ளே இருக்கும் குகை மண்டபங்களுக்குப் போகிறேன். என்னைக் கொன்றதற்காக மறுபடியும் வந்தனம்" என்றார்.

# பைரவர் சரித்திரம்!

அஜந்தா என்றதும், எனக்குச் சொல்ல முடியாத ஆவல் உண்டாயிற்று. "நானும் உள்ளே வரலாமா?" என்றேன்.

"என்னுடைய பூர்வ சரித்திரத்தையும் எழுதுகிறாயா?" என்றார் பைரவர்.

"கட்டாயம் எழுதுகிறேன்" என்றேன்.

பின்தொடரும்படி கையினால் சமிக்ஞை செய்துவிட்டு, கபால பைரவர் மலைக்கணவாய்க்குள்ளே புகுந்தார்.

அரைத் தூக்கத்திலிருந்து ஆழ்ந்த நித்திரைக்குள் நானும் புகுந்தேன்.

**- வானதி பதிப்பகத்தின் 'கல்கி களஞ்சிய'த்திலிருந்து...**

# கணக்கு வாத்தியார்!

பேருந்து நிலையத்தில் கணக்கு வாத்தியாரைச் சந்திப்போம் என்று சேகர் எதிர்பார்க்கவில்லை.

பத்தாவது, பதினொன்றாவது, பன்னிரண்டாவது வகுப்பில் படித்த மாணவர்கள், சரவணன் சாரைத் தெய்வமாக வணங்குவார்கள்.

காரைக்குடி அருகிலுள்ள கண்டனூர்தான் சேகரது சொந்த ஊர்! கிராமம்தான்.

அந்த ஊரின் பள்ளியில் படித்த மாணவர்கள் யாரும், கணக்கில் ஃபெயிலானதாகச் சரித்திரமே இல்லை. வாழைப்பழத்தின் நடுவில் கசப்பு மருந்தை வைத்துக் கொடுப்பது போல, எத்தனை கடினமான கணக்காயிருந்தாலும், எளிதாகப் புரிய வைத்துவிடுவார்.

ப்ளஸ் டூவில் அந்த மாவட்டத்தில் கணக்குப் பாடத்தில், அதிகம் பேர் இருநூறுக்கு இருநூறு மதிப்பெண் பெற்ற பள்ளி என்ற பெருமை அவர்கள் பள்ளிக்கூடத்துக்கு உண்டு. அத்தனை பெருமைக்கும் காரணம் சரவணன் சார்தான். இவன் படித்தபோதே சரவணன் சாருக்கு வயது ஐம்பதுக்கு மேலிருக்கும்.

"வணக்கம் சார்" என்றான் சேகர், அவரருகில் போய்.

கண்ணைச் சுருக்கி, கைகளால் கண்களுக்குக் குடை பிடித்தபடி அவனை உற்றுப் பார்த்தார்.

"சார், நான் சேகர். எண்பத்தெட்டுல உங்கள்ட்ட ப்ளஸ்டூ படிச்சேன். கண்டனூர் பக்கத்துல பாலையூரிலிருந்து வருவேன். அப்பா பெயர் ரங்கசாமி."

பணிவாகத் தன்னை அறிமுகப் படுத்திக்கொண்டான் சேகர்.



சரவணன் சார் முகம் மலர்ந்தார்.

"அட ரங்கன் பையன் சேகரா நீ. சந்தோஷம், என்ன பண்றே?"

"இங்கே திருச்சியிலே தனியார் தொழிற்சாலையிலே சூபர்வைஸராய் இருக்கேன் சார். எல்லாம் உங்க ஆசிர்வாதம். உங்களையும், நீங்க கத்துக் கொடுத்த கணக்குப் பாடத்தையும் வாழ்நாளில் மறக்கவே மாட்டேன் சார். கணக்குப் பாடம் புரிஞ்சுடுச்சுன்னா, மற்ற எல்லாப் பாடமும் புரிஞ்சுடும்னு நீங்க அடிக்கடி அப்ப சொல்வீங்க சார். கல்லூரியில் படிக்கறப்பதான் உங்க வார்த்தையோட உண்மை புரிஞ்சது சார்"

நெகிழ்வாய் உருகி நின்றான் சேகர். சரவணன் சாரும் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

சேகருக்குச் சுரேலென்று உறைத்தது.

"வாங்க சார், நம்ம வீடு பக்கத்திலேதான் இருக்கு. சாப்பிட்டுட்டு ஊருக்குப் போகலாம்" என்று அழைத்தான்.

சரவணன் சார் கை உயர்த்தி அவன் தோளைத் தொட்டார்.

"இன்னொரு முறை வரேன் சேகர். ஒரு சின்ன உதவி செய்ய முடியுமா?"

வேகமாய்த் தலையசைத்தான்.

"மெடிக்கல் செக்அப்புக்காக திருச்சி வந்தேன் வயசாயிடுச்சில்ல, உள்ளே உள்ள உறுப்புகள் ஓய்வு கேட்குது. ஒரு நூறு ரூபாய் குறையுது, மருந்து வாங்க

இதோ டாக்டர் சீட்டு இருக்கு. நீ வாங்கித் தர முடியுமா?''

வாங்கித் தந்தான் சேகர். வற்புறுத்தி அவன் விலாசத்தை வாங்கிக்கொண்டு, மறு நாளே நூறு ரூபாயை மணியார்டரும் செய்துவிட்டார்.

மணியார்டர் பணத்தைக் கையில் வைத்துக் கொண்டபடி, சரவணன் சாரை அன்று கண்ட விஷயத்தை மனைவியிடம் கூறினான்.

"இதோட நூறு தரம் சொல்லிட்டீங்க" என்று பரிகாசம் செய்தாள் சேகரின் மனைவி.

## கிருஷ்ணா

கதர் சட்டை வேட்டியில், தளர்ந்த உடலுடன், வழுக்கை விழுந்த தலையுடன், கிட்டத்தட்ட ஆறடி உயரத்தில் அன்று பேருந்து நிலையத்தில் கண்ட சரவணன் சாரின் உருவம் அவன் மனக் கண்ணிலிருந்து மறைய மறுத்தது.

சார் இப்போது கண்டனூரிலிருந்து அருகிலுள்ள





"டைரக்டர் ரொம்பவும் சென்டிமெண்ட்!"

"அதுக்காக க்ளாப் அடிக்கற கட்டைலகூட தாயத்து கட்டிருக் கறது டூமச்!"

- அம்பை தேவா

காரைக்குடிக்குக் குடி பெயர்ந்து விட்டது, மணியார்டர் விலாசத்திலிருந்து தெரிந்தது.

அவன் யோசனையின் நடுவே பளிச்சென உதயமானது புது எண்ணம்.

**சா**ருக்கு ஒரு பாராட்டு விழா நடத்தி பணமுடிப்பு கொடுத்தால் என்ன? அவனுடன் படித்த பள்ளி மாணவர்கள் சிலர் திருச்சியிலேயே இருந்தார்கள்.

தொடர்பு கொண்டான் சேகர். கிட்டத்தட்ட பதினைந்து பேர் கிடைத்தார்கள். ஆளுக்கு ஆயிரம் ரூபாய் போடுவதென முடிவு செய்தனர். சிலர் கூடவே பணம் போட, கிட்டத்தட்ட இருபத்தையாயிரம் ரூபாய் வசூலானது.

நேரே காரைக்குடிக்கு சேகரும், இன்னும் மூன்று பேரும் பயணமானார்கள்.

முதலில் சரவணன் சார் சம்மதிக்கவில்லை. இவர்கள் தொடர்ந்து வற்புறுத்தவே, முடிவில் சம்மதித்தார்.

கண்டனூர் சென்று, பள்ளியின் தலைமையாசிரியரைச் சந்தித்து பாராட்டு விழா நடத்த அனுமதி கேட்டனர்.

"தாராளமாய் விழா நடத்துங்க. நம்ம பள்ளிக்கூடத்துக்கே இது பெருமை" என்று பாராட்டினார்.

விழாவுக்கான செலவைத் தாமே ஏற்றுக்கொள்வதாக சேகர் சொல்லிவிட்டான்.

உள்ளூர் முக்கியப் பிரமுகர்களும், பள்ளி மாணவர்களும், விஷயம் கேள்விப்பட்ட பழைய மாணவர்களுமாய் நல்ல கூட்டம். அதோடு விழா அவர்கள் எதிர்பார்த்ததைவிட அமர்க்களமாக நடந்தது.

விழாவின் முடிவில் பணமுடிப்பை, உள்ளூர் அரசியல் பிரமுகர் மூலம் கொடுக்க, அதைப் பெற்றுக்கொண்ட சரவணன் சார், அதை அப்படியே பள்ளியின் தலைமையாசிரியரிடம் கொடுத்து விட்டார்.

சேகரும், மற்றவர்களும் ஸ்தம்பித்துப் போனார்கள். சரவணன் சார் வாடகை வீட்டில்தான் இருக்கிறார். சொற்பமாய் வரும் பென்ஷன் தொகை மட்டுமே வருமானம். இதில் வைத்தியச் செலவுகள் வேறு. இருபத்தையாயிரம் ரூபாய் அவருக்கு நிச்சயம் பெரிய தொகைதான். ஏன் பள்ளிக்கூடத்துக்கே கொடுத்துவிட்டார்?

"மனுஷனோட பலம் எது தெரியுமா? பணம் இல்லை. மனசிலே வர்ற திருப்தியும் நிறைவும்தான். நான் கடைசிவரை மனநிறைவோட இருக்க ஆசைப்படறேன். அதனால இந்தத் தொகையை வங்கியில் போட்டு, அதன் மூலம் வரும் வட்டியிலிருந்து இப்பள்ளியின் சிறந்த மாணவர்களுக்கு உதவித் தொகையாக வழங்குமாறு கேட்டுக் கொள்கிறேன். 'முன்னாள் மாணவர் உதவித் தொகை'யாக இதனைப் பெயரிட்டு அழைக்கலாம். இப்பள்ளியில் படித்து, இப்போது நல்ல நிலையிலிருக்கும் மாணவர்கள் முன்வந்து தரும் அன்பளிப்புத் தொகையையும் இதில் சேர்த்து, இது ஒரு பெரிய ஃபவுண்டேஷனாக வளர வாழ்த்துகிறேன்" என்று பேசிவிட்டு அமர்ந்தார் சரவணன் சார்.

## ஒரு பக்கம்

'நீங்கள் என்ன செய்வீர்களோ, ஏது செய்வீர்களோ எனக்குத் தெரியாது. எப்படியாவது இந்தக் குழந்தையைக் கடத்திக்கொண்டு வரவேண்டும்.'

'ஃப்பூ அவ்வளவுதானே! இதோ உடனே வருகிறேன்' ரப்பர் பந்துபோல துள்ளிக் குதித்து ஓடுகிறார் ஜாக்கிசான். உடன் அவரது இரு தோழர்கள்- எரிக் சாங், சம்மோ ஹங்.

டமால். டுமீல். டிஷ்யூம் டிஷ்யூம்.



# சிரி ராஜா சிரி

மொட்டைத் தலை ஆசாமிகள் எல்லோரும் சிதறி ஓடுகிறார்கள். ஒரு சில விநாடிகள்தான். குழந்தை இப்போது ஜாக்கியின் கையில். வாயில் விரலைப் போட்டுத் தூங்கிக் கொண்டிருந்த அந்தக் குழந்தையை சமர்த்தாக வீட்டுக்குக் கொண்டு வருகிறார் ஜாக்கிசான். எல்லாம் முடிந்தது.

என்னது முடிந்ததா? தொடக்கமே இனிதான். 'கியாங் மியாங்' என்று ஹாங்காங் மொழியில் கத்துகிறது குழந்தை. கண்ணே மணியே என்று தாஜா செய்து பார்க்கிறார். கரடி கதை சொல்கிறார். குட்டிக்கரணம் போடுகிறார். கெஞ்சுகிறார். கொஞ்சுகிறார். ம்ஹூம்.

கியாங் மியாங்கிடம் மாட்டிக் கொண்ட ஜாக்கிசான் படும்பாடுதான் 'பிளான் பி.' இந்த நிமிடம் ஹாங்காங்கில் இத்திரைப்படத்தை சுட்டுக் கொண்டிருக்கிறார்கள். 'ஹாங்காங் படங்கள் அருகி வரும் இந்தச் சமயத்தில் 130 மில்லியன் ஹாங்காங் டாலரைக் கொண்டு இதைத் தயாரித்து வருகிறோம்' என்று கண்களால் சிரித்துக் கொண்டே சொல்கிறார் ஜாக்கிசான்.

படம் என்றில்லை. நிஜத்திலேயே ஜாக்கிசானுக்குக் குழந்தைகள் என்றால் தொடை நடுங்குமாம். 'இத்தனை படங்களில் நடித்த பிறகும், இத்தனை சாகஸங்களை நிகழ்த்திய பிறகும் குழந்தைகளை வைத்துப் படம் எடுக்கும் கலையை மட்டும் நான் இன்னும் கற்றுக் கொள்ளவேயில்லை' என்று உதட்டைப் பிதுக்கியபடி அங்கலாய்த்துக் கொள்கிறார் ஜாக்கிசான்.

பொதுவாக இவர் படங்களில் இவர் வைத்ததுதான் சட்டம். எடிட்டிங், டைரக்ஷன், கேமரா கோணங்கள், மேக்-அப், காபி, டீ எல்லாமே இவர் சொல்லியபடிதான் நடக்கும். ஆனால் செட் முழுவதும் நிறைந்திருக்கும் கியாங் மியாங்குகளை மட்டும் ஒன்றும் செய்ய இயலவில்லை. ஒரே நேரத்தில் சிரிக்கிறார்கள் அல்லது ஒரே நேரத்தில் சிணுங்குகிறார்கள். இமைப்பொழுதும் சோராமல் தாவித் தாவி குதித்து சமாதானப்படுத்திக் கொண்டிருக்கிறார் ஜாக்கிசான்.

'சிரி ராஜா... சிரி ராஜா' என்று கெஞ்சுவேன். ரம்யமாகத் தூங்கிக் கொண்டிருக்கும். 'தூங்கு ராஜா தூங்கு' என்று பல்டி அடிப்பேன். கொட்ட கொட்ட விழித்துக் கொண்டு என் கன்னத்தைப் பிடித்துக் கொஞ்சிக் கொண்டிருக்கும்.''

- மருதன்



காட்டுகிறது. தேர்தலில் தோழமையுடன் பணியாற்றிய கூட்டணிக் கட்சிகளும் இதற்கு ஒரு காரணம்.

கடந்த ஐந்தாண்டு கால அ.தி.மு.க ஆட்சி, ஜனநாயக மரபுகளைக் குழி தோண்டிப் புதைத்துவிட்டு நடைபெற்ற சர்வாதிகார ஆட்சி. தேர்தலுக்கு ஒரு வருடத்துக்கு முன்பு வரைக்குமாக அனைத்துத் தரப்பினரையும் பழி வாங்கியது ஜெயலலிதா ஆட்சி. அரசு அலுவலர்கள், பத்திரிகையாளர்கள், அரசியல்வாதிகள் என்று தனக்குப் பிடிக்காத நபர்கள் மீது அரசின் அடக்குமுறைகள் ஏவி விடப்பட்ட ஆட்சி.

மதுரை மாநகரவாசி என்கிற நிலையில், மதுரை மாநகர வளர்ச்சியில் என் பங்கும் இருக்கிறது.

# "பணமழையை வென்ற பாசமழை!"

## மு.க. அழகிரி பெருமிதம்

தென் தமிழக மாவட்டங்களில் தி.மு.கவை தம் அன்புப் பிடிக்குள் வைத்திருப்பவர் மு.க. அழகிரி. தேர்தல் வெற்றி குறித்தும், கடந்த அ.தி.மு.க ஆட்சி குறித்தும் இங்கு மனம் திறந்து பேசுகிறார்...

"தென் மாவட்டங்களில் தி.மு.க முன்பைவிட சற்று கூடுதலான தொகுதிகளில் வெற்றி பெற்றிருக்கிறது இது தென் மாவட்டங்களில் தி.மு. கழகம் வளர்ச்சி அடைந்திருப்பதையே

ஜனநாயக முறையில் தேர்வு செய்யப்பட்ட உறுப்பினர்கள் மற்றும் அரசு அதிகாரிகள் ஆகியோரின் வழிகாட்டுதலுடன் மதுரை மாநகர மக்களின் அடிப்படைத் தேவைகள் அனைத்தும் மேலும் பூர்த்தியடையப் பாடுபடுவேன். மதுரையில் டைடல் பார்க் நிறுவிட முயற்சி செய்வேன்.

வரவிருக்கும் உள்ளாட்சித் தேர்தலிலும் கலைஞர் தலைமையில் இதே கூட்டணி தொடரும். அதிலும் எங்கள் கூட்டணியே அமோக வெற்றி பெறும்.

தமிழக மக்கள் இருட்டிலிருந்து வெளிச்சத்துக்கு வந்திருக்கிறார்கள் என் பதையே சட்டசபை வெற்றி காட்டுகிறது. இந்தத் தேர்தலில் ஜெயலலிதாவின் பண மழையை வென்று காட்டியது கலைஞரின் பாசமழை."

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# தஞ்சை பரத்வாஜ்

**25.6.2006 முதல் 1.7.2006 வரை**

**மேஷம்:** புதிய வீடு/மனை வாங்க நல்ல காலம். ஆடம்பரப் பொருட்கள் வாங்க நேரிடும். பணக்கஷ்டம் இராது. குடும்ப வளம் மேலோங்கும். வீட்டில் சுப நிகழ்ச்சி நடக்கும். வெளியூர்ப் பிரயாணம் செல்ல நேரிடும். குழந்தைகளால் மன சந்தோஷம் கிட்டும். உடல் ஆரோக் கியம் பாதிக்காது. எண்ணிய எண்ணங்கள் ஈடேறும். கணவன்- மனைவி உறவு நன்றாக இருக்கும். மக்கள் செல்வம் ஏற்படும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். வியாபாரம் முன்னேற்றமான சூழ்நிலையில் செல்லும். நண்பர்/ உறவினர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். ஆஞ்சநேயரை சனிக்கிழமை தோறும் வணங்குதல் நற்பலனை அளிக்கும்.

**ரிஷபம்:** பணவசதி பெருகும். கடன் கிடைக்கும். குழந்தைகள் பற்றின மனக்கவலை போகும். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஆகும். நெருங்கிய கூட்டாளிகள், கூட்டுத் தொழில் செய்பவர்கள் விலகிப் போவார்கள். குழந்தைகள் இடம் மாறிச் செல்லும். சிலருக்கு தொழில் துறையில் மாற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் நெருக்கடிகள் இருந் தாலும் விட்டுக்கொடுத்துப் போவதால் பிரச் னைகளில் இருந்து விடுபடலாம். உடல்நிலை பாதிக்காது. வெளிநாட்டு அழைப்பு கிட்டும். புதிய வேலை கிடைக்கும். புத்திரர் பற்றின கவலை விலகும். கணவன் - மனைவி அனு சரித்து நடந்துகொள்வது நல்லது. குரு/ராகு/ கேது வழிபாடு செய்து வர நற்பலன் கிட் டும்.



• படம்: ஸ்ரீஹரி

**மிதுனம்:** மேன்மையான வாரம். சுப நிகழ்ச்சி நடக்கும். வீடு/வாகனம் வாங்க நல்ல சந்தர்ப்பம், சூழ்நிலை உருவாகும். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். உடல்நிலை நன்றாக இருக்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். தொழில் துறை யில் நல்ல வருமானம் கிடைக் கும். உத்தியோகத்தில் நற் பெயர் கிட்டும். உல்லாசப் பிரயாணம் செல்ல நேரிடும். குழந்தைகள் வழியில் மகிழ்ச்சி நிலவும். புதிய தொழில் துவங்க நல்ல தருணம். செலவுகள் கட்டுக் குள் அடங்கி இருக்கும். ராகு/கேது வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**கடகம்:** முயற்சிகள் கைகூடும். புண்ணிய ஸ்தலங்

# நடக்குமென்பார்; நடக்கும்!

கள் செல்வீர்கள். சாதுக்கள் தரிசனம் கிட்டும். கல்வியில் முன்னேற்றம் கிட்டும். திருமணத் தடை விலகும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். சிலருக்கு வீடு மாற்றம்/ தொழில் மாற்றம் செய்ய நேரிடும். தீராத தலைவலி விலகும். நண்பர்/ உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். வியாபாரத்தில் முன்னேற்றம் ஏற்படும். மேல்படிப்பு கருதி வெளிநாட்டு முயற்சி கைகூடும். குரு/ சனி வழிபாடு செய்வது நற்பலனை அளிக்கும்.

**சிம்மம்:** வாக்குவாதம் தவிர்க்கவும். கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடுவது கூடாது. உடல்நிலையில் கவனம் செலுத்தவும். குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்து அனுசரணை செய்து போவது நற்பலனை அளிக்கும். வண்டி வாகனத்தில் போகும்போது கவனமுடன் செயல்படவும். அநாவசியமான செலவுகள் ஏற்படும். எதிலும் கவனமுடன் இருக்கவும். திருமணத் தடைகள் ஏற்படும். உத்தியோகத்தில் நெருக்கடிகள் இருக்கும். ஒத்துப் போவது நன்மை தரும். வியாபாரத்தில் மந்தமான சூழ்நிலை காணப்படும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு செய்து வர கஷ்டங்கள் விலகும்.

**கன்னி:** குழப்பமான சூழ்நிலை விலகும். மனத்தில் புத்துணர்ச்சி கிட்டும். திருமணம் கைகூடும். வீடு/நிலம் வாங்க நல்ல நேரம். கணவன் - மனைவிக்குள் அனுசரித்துப் போவது நன்மை தரும். பணக் கஷ்டம் வராது. கணவரின் உடல்நிலை சற்று பாதிக்கும். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். உத்தியோக உயர்வு ஏற்படும். சிலருக்கு வெளிநாடு செல்ல அழைப்பு கிட்டும். பொருளாதார மேன்மை ஏற்படும். நல்ல மகப்பேறு பாக்கியம் கிட்டும். புதிய தொழில் முயற்சிகள் கைகூடும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். ராகு/கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**துலாம்:** வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். மன உளைச்சல் தீரும். குடும்ப வளம் மேலோங்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். சுபச்செலவு ஏற்படும். நண்பர்/ உறவினர்களால் ஆதாயம் கிட்டும். குழந்தைகள் வழியில் திருமணம் கைகூடும். உத்தியோகத்தில் பதவி உயர்வு, இடமாற்றம் ஏற்படும். வெளியூர்ப் பிரயாணம் செல்ல நேரிடும். வீடு/ நிலம் வாங்க நல்ல தருணம். உடல் நலம் பாதிக்காது. தீராத சிக்கல் தீரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். ஏற்றுமதி இறக்குமதி தொழில் புரிபவர்கள் நற்பலனை அடைவார்கள். குரு/சனி வழிபாடு செய்து வருதல் நலம் தரும்.

## பரத்வாஜ்...

**என் பையனுக்கு எப்போது திருமணம் நடக்கும்?**

**- கே.ஏ. சீனிவாசன், சென்னை - 61**

தங்கள் பையனுக்கு 14.11.06-ல் கேது தசை முடிவடைகிறது. இது முடிந்தவுடன் தொடங்கும் சுக்ரதசையில் திருமணம் கைகூடும். சர்ப்பதோஷம் உள்ள பெண்ணாகச் சேர்க்கவும்.

**எனது மகளின் திருமணம், வேலை பற்றிச் சொல்லவும்...?**

**- பெயர் வெளியிட விரும்பாத கல்கத்தா வாசகி**

உங்கள் பையனுக்கு வெளியூரில் பிறந்த பெண் அமையும். உறவு கிடையாது. தோஷம் எதுவும்

**விருச்சிகம்:** பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஆகும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். கூட்டுத் தொழில் செய்பவர்கள் உஷார். நெருங்கிய கூட்டாளிகள் பிரிய நேரிடும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் நற்பெயர் கிடைக்கும். பணக்கஷ்டம் வராது. செலவுகள் சுபமானதாக இருக்கும்.

திருமணக் காரியம் கைகூடும். உறவினர்கள் மூலம் செலவு ஏற்படும். தொலைதூரப் பிரயாணம் செய்ய நேரிடும். உடல்நிலை பாதிக்காது. கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். புதிய தொழில் முயற்சியை சற்று தள்ளிப் போடவும். மனக்கிலேசம் விலகும். ராகு/கேது/குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

இல்லை. வெளிநாட்டு வேலை நற்பலனைத் தரும்.

**எங்களுக்கு குழந்தை பாக்கியம் எப்போது அமையும்? பரிகாரம் தேவையா?**

**- எஸ். விஜயலெக்ஷ்மி, மயிலாடி**

தங்கள் இருவரின் ஜாதகப்படி 2006-ல் குழந்தைப் பாக்கியம் கிட்டும். பரிகாரம் தேவையில்லை.

**என் பேரனுக்கு எப்போது திருமணம் நடக்கும்? பரிகாரம் தேவையா?**

**- சீனிவாசன், நங்கநல்லூர்**

ஜாதகருக்கு 33 வயதில் திருமணம் நடக்கும். பரிகாரம் தேவையில்லை.

## ...பதில்கள்

**தனுசு:** திருமணக் காரியம் கைகூடும். நண்பர் / உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். உடல்நிலை பாதிக்காது. சிலருக்கு உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். இடமாற்றம் ஏற்படும். வீடு/வாகனம் வாங்க நல்ல தருணம். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வெளிநாட்டு அழைப்பு கிட்டும். யாருக்கும் ஜாமீன் போட வேண்டாம். வாகனத்தில் செல்லும்போது உஷார். சத்ரு தொல்லை விலகும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் கிட்டும். ஆடம்பரப் பொருட்கள் வந்து சேரும். தாயார் உடல்நிலை பாதிக்கும். சனி/ராகு/கேது வழிபாடு செய்து வரவும்.

**மகரம்:** எண்ணங்கள் யாவும் ஈடேறும். மன சந்தோஷம் கிட்டும். வீடு/நிலம் வாங்க நல்ல தருணம். உடல்நிலை பாதிக்காது. கணவன் - மனைவி உறவு நற்பலனைத் தரும். தெய்வபலம் ஏற்படும். புண்ணிய ஸ்தல யாத்திரை செய்ய நேரிடும். சாதுக்கள் தரிசனம் கிட்டும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். நண்பர்/ உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். எதிர்ப்பு, தொல்லை விலகும். நோய்நொடிகள் விலகும். உத்தியோகத்தில் உயர்வு, இடமாற்றம் ஏற்படும். வழக்கு வெற்றிப் பாதையில் செல்லும். சனி/குரு வழிபாடு செய்து வரவும்.

**கும்பம்:** பணக்கஷ்டம் விலகும். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். மறைமுக தொல்லை விலகும். திருமணக் காரியம் கைகூடும். கணவன் -மனைவிக்குள் விட்டுக் கொடுத்து நடந்து கொள்வது நல்லது. குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். வெளிநாட்டு அழைப்பு கிட்டும். நண்பர்/ உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். உடல்நிலையில் கவனம் தேவை. வண்டி வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போடக்கூடாது. உத்தியோகத்தில் முன்னேற்றம் ஏற்படும். பத்திரிகைகளில் பெயர் வரும். ராகு/கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**மீனம்:** எண்ணங்கள் யாவும் ஈடேறும். பணக் கஷ்டம் வராது. புதிய முயற்சி கைகூடும். கணவன்- மனைவி அனுசரித்து நடந்து கொள்வது நல்லது. திருமணத் தடை விலகும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். மனத்தில் புத்துணர்ச்சி ஏற்படும். பண வருவாய் வரத் துவங்கும். குழந்தைகள் மூலம் சந்தோஷம் கிட்டும். எதிர்ப்பு, தொல்லை இருக்காது. ஆரோக்கியம் பாதிக்காது. நண்பர்/உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். எதிர்பாராத தனம் கிடைக்கும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வரவும். ○



ரியமான தோழி தோல்விக்குப் பிறகு சிலகாலம் தெலுங்குக்குச் சென்று விட்டு, மீண்டும் தமிழுக்குத் திரும்பியிருக்கிறார் இயக்குநர் விக்ரமன். இவரது அடுத்த படம் பரத் - ஜெனிலியா நடிக்கும் 'சென்னைக் காதல்'. தமது படத்தைப் பற்றி மட்டுமின்றி பலதரப்பு விஷயங்கள் பற்றியும் பேசினார்.

**அதென்ன 'சென்னைக் காதல்'?**

''என் நோக்கம் ஒரு வித்தியாசமான காதலைச் சொல்வது மட்டுமே. படத்துக்கு 'சென்னை' என்றுதான் தலைப்பு முடிவாகியிருந்தது. ஆனால் சேம்பரில் ஏற்கெனவே அந்தப் பெயர் பதிவாகியிருந்ததால் 'சென்னைக் காதல்' என்று மாற்றிவிட்டேன். படம் வெளிவந்தபிறகு இது ஒரு விக்ரமன் படம் என யாருமே நம்பமாட்டார்கள். அந்தளவுக்கு என்னைப் புதுப்பித்திருக்கிறேன். ஹீரோ பரத்தின் கதாபாத்திரம் இதுவரைக்கும் தமிழ் சினிமா கண்டிராதது. ஆபாசம், வன்முறை எதுவும் இல்லாத ஒரு இளமையான படம்.''

**உங்களுடைய பலமே குடும்பப் பாங்கான படங்களை எடுப்பது தானே?**

''யாருக்குமே ஒரேமாதிரி படங்கள் செய்வது அலுப்பைத்தான் தரும். நான் எப்போதோ இந்தப் பாதையை விட்டு விலகியிருப்பேன். ஆனால், தயாரிப்பாளர்கள் மாறவிடவில்லை. 'ஜெமினி'க்குப் பிறகு ஏவி.எம் நிறுவனம் என்னை வைத்து ஒரு படம் பண்ண நினைத்தது. 'ஜெமினி மாதிரி ஒரு ஆக்ஷன் படம் பண்ணலாமே' என்று ஏவி.எம்.சரவணனிடம் கேட்டேன். அதற்கு அவர், 'சரவண பவன் ஹோட்டலுக்குச் சென்று மாமிசம் எதிர்பார்ப்பது நியாயமில்லையே' என்று சொல்லிவிட்டார். அதற்கு ஏற்றாற்போல பிரியமான தோழியின் கதை தெலுங்கு ஹீரோ வெங்கடேஷுக்கும் பிடித்துப் போக அந்தக் கதையை இரு மொழிகளில் எடுத்தோம். மீண்டும் நான் குடும்பப் படங்களை எடுப்பேன். ட்ரெண்டுக்குத் தகுந்தாற் போல என்னை மாற்றிக் கொள்ளப் போகிறேன்.''

**அளவுக்குமீறிய சென்டிமெண்டால் தானே 'ப்ரியமான தோழி' தோற்றது?**

''படத்தின் கடைசி மூன்று ரீல்கள் சினிமாத்தனமாக இருந்ததே அதன் தோல்விக்குக் காரணம். அதோடு ஒரே கதையை இரு மொழிகளில் இரு ஹீரோக்களைக் கொண்டு வேகவேகமாக எடுத்ததில் என்னால் கதையில் கவனம் செலுத்த முடியவில்லை. படம் தெலுங்கில் சூப்பர் ஹிட். 70 திரையரங்குகளில் நூறு நாட்களைத் தொட்டது. தமிழில் கூட பெரிய நஷ்டம் இல்லை.''

**விஜய்க்கு பெரிய திருப்புமுனை ஏற்படுத்திக் கொடுத்தது பற்றி?**

''எப்போதும் என் ஹீரோ தேர்வில் வித்தியாசம் காட்டுவேன். ஜாலியான படங்களாகச் செய்து கொண்டிருந்த விஜய்யை 'பூவே உனக்காக'வில் மென்மையான ரோலில் நடிக்கவைத்தேன். விஜய்யின் திறமைகள் அப்போதே எனக்குத் தெரிந்துவிட்டது. வசனங்களையெல்லாம் ஒருமுறை கேட்டு, கடகடவென ஒப்பிப்பார். எனக்குத் தெரிந்த தயாரிப்பாளர்களிடமெல்லாம் 'விஜய்தான் நாளைய நட்சத்திரம். அவரை உடனே ஒப்பந்தம் செய்யுங்கள்' என்று கூறினேன். ஆனால் எந்தத் தயாரிப்பாளரும் அப்போது விஜய்யை நம்பவில்லை.''

**தமிழ்ப்படங்களுக்கு உலக அரங்கில் மரியாதை கிடைப்பதில்லையே?**

''தமிழில் மட்டுமல்ல உலக அளவில் கடந்த மூன்று வருடங்களாக நல்ல படங்கள் வருவதில்லை. ஈரான், இத்தாலியில் மட்டுமே யதார்த்தமான, அனைவரும் ரசிக்கக் கூடிய படங்களைத் தவறாமல் எடுக்கிறார்கள். நல்ல தமிழ்ப் படங்கள் எடுத்தாலும் அவை வெளிநாட்டுத் தமிழர்களிடம் சேருவதில்லை. 'காதல்' படத்தின் மகத்துவம் கடல்தாண்டிச் செல்லவில்லை. 'திருடா திருடி' ஹிட் ஆகும்வரை மலேசிய மக்களுக்கு தனுஷ் பற்றித் தெரியாது. 'தவமாய் தவமிருந்து'


'சென்னைக் காதல்' பட பூஜையில் இயக்குநர் விக்ரமன் - பரத்

# "விருதை எதிர்பார்ப்பதில் நியாயமில்லை!"

இங்கு மட்டும்தான் ஹிட்.

ஆங்கிலப் படங்களிலிருந்து காப்பியடிப்பதால்தான் நம்மை எவரும் மதிப்பதில்லை. மானம் போகிறது. அவர்களுடைய படங்களைக் காப்பியடித்து அவர்களிடமே விருதுக்காக அனுப்பினால் தூக்கி எறியாமல் என்ன செய்வார்கள்? இதனால் இந்தியப் படங்கள் என்றால் திருட்டுப் படங்கள் என்று ஹாலிவுட்டில் பட்டம் கட்டிவிடுகிறார்கள். ஒழுங்காக ரைட்ஸ் வாங்கிக்கொண்டு ரீமேக் செய்வதுதான் உசிதம். மானமும் காப்பாற்றப்படும். மாறாக, காப்பியடித்துவிட்டு விருதையும் எதிர்பார்ப்பது நியாயமில்லை."

**ரஜினி, கமலுடன் இன்னமும் படம் பண்ணவில்லையே?**

"இதுவரை அந்த பாக்கியம் எனக்கு வாய்க்கவில்லை. 'புதுவசந்தம்' படத்தின் போதே 'நாம் இருவரும் சேர்ந்து ஒரு படம் பண்ணுவோம்' என்று ரஜினி கூறினார். அது எதிர்காலத்தில் கட்டாயம் சாத்தியமாகும்."

**- ச.ந.கண்ணன்**

## - விக்ரமன்



# தமிழ்நாட்டின் ராஜா!

கடந்த சட்டமன்ற தேர்தலில் தி.மு.க. பெருந்தலைகள் பல குறைந்த, மிகக் குறைந்த வோட்டு வித்தியாசத்தில் தலை தப்பிய போது, தமிழ்நாட்டிலேயே அதிக பட்சமாக 48,752 வோட்டுகள் வித்தியாசத்தில் வெற்றிபெற்றவர் தாம்பரம் எஸ்.ஆர்.ராஜா. இதன் மூலம் தாம்பரத்தையும் தாண்டி தமிழ்நாட்டு ராஜாவாகிவிட்டார் இவர்.

"தாம்பரம் சட்டமன்ற தொகுதி என்பது, தாம்பரம் நகரத்தையும் தாண்டி, கிழக்குக் கடற்கரைச் சாலையை ஒட்டியிருக்கும் பல மீனவக் குப்பங்களையும், கிராமப் பகுதிகளையும் கொண்டது. சுனாமியால் பாதிக்கப்பட்ட மீனவர்களுக்கு மத்திய அரசு கொடுத்த நிவாரணத் தொகையைத் தாராளமாகவே அள்ளிவிட்டிருந்தது மாநில அரசு. அதிலும் ஜெயலலிதாவே அவரது பணத்தைக் கொடுத்தது போல் தோற்றத்தை எதிரணி உருவாக்கியிருந்தது. இதுபோன்ற சலசலப்பையும் மீறி, தமிழ்நாட்டிலேயே அதிக வோட்டு வித்தியாசத்தில் நான் வெற்றி பெறக் காரணம் தலைவர், தளபதியின் வழிகாட்டல், கட்சிக்காரர்களின் ஓயாத உழைப்பு" என்று அடக்கத்துடன் சொல்கிறார் எஸ்.ஆர்.ராஜா. இவரை எதிர்த்துப் போட்டியிட்டவர் ம.தி.மு.க. வைச் சேர்ந்த பாலவாக்கம் சோமு.

மேற்கு தாம்பரத்தில், ரெட்டி தெருவில் இருக்கும் ராஜாவின் வீட்டுக்கு ஏழுமணி முதலே மக்கள் மனுக்களுடன் குவியத் தொடங்குகிறார்கள். 1996 முதல் தொடர்ந்து பத்தாண்டுகள் நகர சபைத் தலைவராகவும் பதவி வகித்தவர் ராஜா. சட்டமன்ற தேர்தலில் போட்டியிடுவதற்காக சேர்மன் பதவியை ராஜினாமா செய்தார்.

"1996-ல் நான் நகரசபைத் தலைவராகப் பொறுப்பேற்றபோது நகராட்சி திவாலாகும் நிலையில்தான் இருந்தது. டெலிபோன், மின் கட்டணம் கட்ட இயலாத நிலை. ஊழியர்களுக்குச் சம்பளம் கொடுக்க முடியாத அளவுக்கு நிதி நெருக்கடி. ஊழியர்களைத் தட்டிக் கொடுத்து வேலை வாங்கி, வருவாயை பெருக்கி, அதே சமயம் சிக்கனத்தையும் புகுத்தினேன். ஒரு கோடியாய் இருந்த வருவாய் நான்கு கோடியாக உயர்ந்தது. சமீபத்தில் நான் ராஜினாமா செய்யும்போது 17 கோடி ரூபாய் வைப்புத் தொகை இருக்குமளவுக்கு நிதிநிலை சரி செய்யப்பட்டது. வருவாய் கூடியதால் வளர்ச்சிப் பணிகளும் எந்த இடையூறும் இல்லாமல் செய்யப்பட்டன" என்று பெருமையுடன் சொல்கிறார் ராஜா. நகரசபை நிர்வாகத்தை 1996-ம் ஆண்டே கணினிமயம் ஆக்கி, மற்ற நகராட்சிகளுக்கும் வழி காட்டியிருக்கிறார் இவர்.

கட்சியில் சிறிய அளவிலிருந்து இளைஞர் அணி, தாய்க் கழகம் என்று உயர்ந்து இப்போது அசைக்க முடியாத நகரச் செயலாளராக இருக்கிறார். இவருக்கு கட்சி ஸீட் கொடுத்தபோது ஸிட்டிங் எம்.எல்.ஏ. மீனம்பாக்கம் வைத்தி தரப்பு அதிருப்தியடைந்து, சில நாட்கள் தேர்தல் பணியிலிருந்து ஒதுங்கியிருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. பின்னர் அனைத்துத் தரப்பையும் ராஜா வளைத்துப் போட்டார்.

"தாம்பரம் தொகுதியைப் பொறுத்தமட்டில் எந்தவித பிரச்னையும் இல்லாமல் பார்த்துக் கொள்வேன்" என்கிறார் ராஜா.

சந்திப்பு : **ஸ்ரீநி**

படம் : ஸமா

**25**

# குறையொன்றுமில்லை

தன்னிடத்திலிருப்பதை இழந்து கூக்குரலிட்டுக் கத்தக் கூடியவர்களை ஓடி வந்து ரக்ஷிக்கக்கூடிய குணம் படைத்தவன் எம்பெருமான். அதுமட்டுமல்ல, ஐச்வர்யத்தைக் கொடுக்கும்படியான உயர்ந்த குணமும் அவனிடத்தில் இருக்கிறது. உயர்ந்த ஸ்தானத்தை நமக்குக் கொடுக்கும்படியான சக்தி அவனிடமிருக்கிறது. பாபத்தை அழிக்கும்படியான சக்தி அவனிடத்தில் இருக்கிறது. இப்படி விசேஷமான குணங்கள் அவனிடத்தில் இருப்பதனாலே அவன் திருவடியைப் பற்றுங்கள் என்கிறது நரசிம்ஹ மந்திரம்.

இந்தக் குணங்களுக்கெல்லாம் சாட்சி இருக்கிறதா என்றால், பிரஹலாதன், விபீஷணன், கரிராஜன் (கஜேந்திரன்) பாஞ்சாலி, கவுசல்யா, த்ருவன் என்று ஒவ்வொரு குணத்தையும் அனுபவித்த ஒவ்வொருத்தர் சாட்சி சொல்கிறார்கள்.

வாத்ஸல்யத்துக்கு பிரஹலாதன் சாட்சி. வாத்ஸல்யம் என்றால் என்ன...?

கன்றுக்குட்டியிடம் பசு காட்டக் கூடிய அன்பிற்கு வாத்ஸல்யம் என்று பெயர். அந்தப் பசு சாப்பிடக் கூடிய வைக்கோலிலே கோ மலம், கோமியம் எல்லாம் கலந்து துர்கந்தம் அடித்தால் முகர்ந்து பார்த்துவிட்டு அதைச் சாப்பிடாது பசு. ஆனால் அதுவே கன்றுக்குட்டி உடம்பிலே ஓரே துர்கந்தமாக இருக்கும்... ஆனால் அதை நாக்காலேயே நக்கிக் கொடுத்து பால் கொடுக்கும் பசு. இந்தக் குணத்துக்குத்தான் வாத்ஸல்யம் என்று பெயர். தான் சாப்பிடாமல் இருந்து வருகிறது - ஆனால் தன் கன்றுக்குட்டியை நாக்காலேயே நக்கிச் சுத்தம் பண்ணுகிறதே, அந்த உயர்ந்த தயை - அதற்குத்தான் வாத்ஸல்யம் என்று பெயர்.

அதை யாரிடத்திலே காட்டினான் பரமாத்மா...? பிரஹலாதனிடத்திலே காட்டினான்.

நரசிம்ஹ மந்திரம் 32 அக்ஷரங்கள் உடையது. அதே போல் பகவான் நரசிம்ஹனுக்கு பல மந்திரங்கள் உண்டு. ஒரே அக்ஷரம், மூன்று அக்ஷரம், ஆறு அக்ஷரம், 32 அக்ஷரம், 36 அக்ஷரம், 132, 1132, 10132, ஒரு லட்சத்து நூற்று முப்பத்திரண்டு, ஒரு கோடி நூற்று முப்பத்திரண்டு, கோடி கோடி 132 என்று இப்படி நரசிம்ஹ மந்திரம் பல அக்ஷரங்களுடன் கூடியதாக பல மந்திரங்கள் இருக்கின்றன. நரசிம்ஹ மந்திரத்தைக் காட்டிலும் சிறிய மந்திரம் இல்லை; பெரிய மந்திரமும் இல்லை. அதற்கு ஈடு இணையும் இல்லை.

பெரிய மஹான்களெல்லாம் இந்த நரசிம்ஹ மந்திரத்தை ஜபித்து பயனடைந்துள்ளார்கள். பரத்வஜாதி மஹரிஷிகள் ஜபித்துள்ளார்கள்.

மட்டபல்லியிலே, ராஜ்யலக்ஷ்மி சமேதனாக விளங்கக் கூடிய நரசிம்ஹனை துதித்திருக்கிறார்கள். பரத்வாஜ சம்ஹிதையிலே முனிவர் விசேஷமாக நரசிம்ஹனை ஸ்தோத்திரம் பண்ணுகிறார். இரவு பகல் வித்தியாசமில்லாமல் பரத்வாஜர் அந்த மட்டபல்லி க்ஷேத்திரத்திலேயே எழுந்தருளியிருந்து, அந்த நரசிம்ஹனை குகைக்குள்ளேயே அமர்ந்தபடி உபாஸனை பண்ணினார். குகையிலே ஸேவிக்கும்படியான எம்பெருமானை தமது ஹ்ருதய குகைக்குள்ளேயும் அவர் பார்த்தார்.

நம் ஹ்ருதய குகைக்குள்ளே பகவான் எப்படி வாஸம் பண்ணுகிறான் என்று யாருக்காவது சந்தேகமிருந்தால் மட்டபல்லி க்ஷேத்திரத்தில் குகைக்குள்ளே எப்படி இருக்கிறானோ, அந்த மாதிரி நம் ஹ்ருதய குகையிலேயும் இருக்கிறான்

என்று நாம் தெரிந்துகொள்ள முடியும்.

மட்டபல்லியானது கிருஷ்ணா நதி தீரத்திலே இருக்கிறது என்று தெரியும். அதற்கு முன்பு அதே கிருஷ்ணா நதி தீரத்திலே, விஜயவாடாவிலே வேதாத்ரி என்ற க்ஷேத்திரத்தைத் தாண்டித்தான் மட்டபல்லிக்குப் போக வேண்டும்.

ஹைதராபாத் போகிற சாலையிலிருந்து பத்து கிலோமீட்டர் தூரத்தில் இருக்கிறது வேதாத்ரி. வேதாத்ரியிலே உள்ள எம்பெருமானுக்கு யோகானந்தர் என்று பெயர். கிருஷ்ணாநதி தீரத்திலே பெரிய சாளக்கிராம மூர்த்தியாக அவன் காட்சியளிக்கிறான். உள்ளுக்குள்ளே அழகாக அமர்ந்திருக்கிறான். அவனது இடையிலே ஒரு கத்தி வைத்திருக்கிறான். நாம் இந்த யோகானந்த நரசிம்ஹனை ஸேவிக்கப் போனோமானால் அந்த கத்தியை எடுத்து நம் கையிலே கொடுப்பார்கள். அதை வாங்கிப் பார்க்கலாம். பகவானே பெரிய வைத்தியன் என்கிறது வேதம். முதல் வைத்தியன் அவன். மருந்தாகவும் இருக்கிறான்; மருத்துவனாகவும் அவனே இருக்கிறான். இங்கே கத்தி வைத்துக் கொண்டிருக்கிற எம்பெருமான் பெரிய 'சர்ஜன்', 'ஆபரேஷன்' பண்ணுவதிலே திறமை மிக்கவன்.

வேதாத்ரிக்குப் பக்கத்து ஊரிலே ஒருவருக்கு வயிற்றிலே பெரிய கட்டி வந்துவிட்டது. ஆபரேஷன் பண்ணினால் அவர் பிராணனுக்கே ஆபத்து என்று சொல்லிவிட்டார்கள். எல்லா ஆஸ்பத்திரிகளுக்கும் பல இடங்களில் போய்ப் பார்த்துவிட்டு வந்துவிட்டார். வேதாத்ரி நரசிம்ஹனை ஸேவித்து, அங்கே ஒரு மண்டலம் விரதம் இருந்தால் கட்டி தானே போய்விடும் என்றார்கள்.

அங்கே பக்கத்திலேயே இருந்த நரசிம்ஹனை மறந்துவிட்டு எங்கெல்லாமோ சுற்றினாரே..! 48 நாள் அங்கே தங்கி பிரதக்ஷிணம் பண்ணினார். நாற்பத்தெட்டாம் நாள் ராத்திரி, அவர் வயிற்றைத் தடவுகிற மாதிரி இருந்ததாம்; மறுநாள் பார்த்தால், அந்தக் கட்டியையே காணோம். சொஸ்தமாகி அழகாகத் திரும்பி வந்துவிட்டார்.

ஆரோக்கியத்தைக் கொடுக்கும்படியான எம்பெருமான் அங்கே வேதாத்ரியிலே எழுந்தருளியிருக்கிறான். இப்போதும் எத்தனையோ பேர் அங்கே வேண்டிக் கொண்டு பிரதக்ஷிணம் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.



"நான் போட்டியிட்ட தொகுதியில முப்பதாயிரம் வோட்டு வித்தியாசத்துல ஜெயிச்சிருக்கேன்... இது எதைய்யா காட்டுது..?"

"உங்க தொகுதியில தேர்தல் நேர்மையா நடக்கலைனு காட்டுது தலைவரே..."

– கே.ஆனந்தன்

**வே**தாத்ரியைக் கடந்து நாம் வந்தோமானால், விஜயவாடாவிலிருந்து நூறு கிலோமீட்டர் தூரத்திலே கோதாடா என்கிற ஊர் இருக்கிறது. அங்கேயிருந்து உள்ளுக்குள்ளே நாற்பது கிலோமீட்டர் போக வேண்டும். இதுவும் கிருஷ்ணா நதி தீரம். ரொம்ப நெருக்கமாக கிருஷ்ணையோடு சேர்ந்திருக்கிறான் நரசிம்ஹன். நதியிலே ஸ்நானம் பண்ணிவிட்டு உடனே கோவிலுக்குள் வந்துவிடலாம். அந்த கிருஷ்ணா நதி தீரத்திலே, நமக்கு பக்தியைக் கொடுக்கக் கூடியவனாக விளங்குகிறான். சிறந்த பக்தியைக் கொடுத்து, ஞானத்தைக் கொடுத்து, வேண்டியதையெல்லாம் தரக்கூடிய வள்ளலாக விளங்குகிறான். ஆரோக்கியம் மாத்திரமில்லை, ஐச்வர்யம், புத்தி, ஆயுள் என்று சர்வதோமுகமான எல்லாவற்றையும் கொடுக்கக் கூடியவனாக விளங்குகிறான்.

இந்த கோதாடாவையும் தாண்டி இன்னும் உள்ளே போனோமானால், கிருஷ்ணா நதி தீரத்திலே உயர்ந்த வாடபல்லி என்ற ஊர் அமைந்திருக்கிறது. இங்கேயெல்லாம் விசேஷமாக மஹாயக்ஞங்கள் நடந்திருக்கின்றன. வேதாத்ரியிலே நூறாவது யக்ஞம் நடந்தது.

ஆரண மலைவாழ் ஆளரியே - உனை
காரணமாக நான் இனி அறிந்தேன்

என்ற பாடலானது, அங்கே வேதாத்ரியிலே இருந்தபோதுதான் அடியேன் வாக்கில் வந்தது.

ஆரணமலை என்று வேதாத்ரிக்கு ஒரு பெயர்.

நூற்றிநாலாவது யக்ஞம் மட்டபல்லியிலே நடந்தது. வாடபல்லியிலே நூற்றியாறாவது யக்ஞம் நடந்தது.

வாடபல்லி க்ஷேத்திரத்துக்கு தீபாலயம் என்று பெயர். மட்டபல்லி தாண்டி அமைந்திருக்கிறது அது. மூஸி நதியும் கிருஷ்ணா நதியும் சங்கமிக்கும்படியான க்ஷேத்திரம். அப்படிப்பட்ட க்ஷேத்திரத்திலே அகஸ்தியருக்கு ஸேவை கொடுத்தான் எம்பெருமான்.

வாடபல்லியிலே, பூமாதாவோடு சேர்ந்த மூர்த்தியாக அவன் காட்சியளிக்கிறான்.

அங்கே கிருஷ்ணா நதிக்கரையிலே ஈசுவரன் ஆலயம் இருக்கிறது. அந்த ஈசுவர மூர்த்தி சிரஸிலிருந்து கங்கையானது கலகலவென்று பெருகி வருகிறது - இன்றைக்கும் பார்க்கலாம் - கங்கையானது கொட்டிக் கொண்டேயிருக்கிறது.

ஈசுவராலயத்தைத் தாண்டி உள்ளே கோட்டைக்குள்ளே நரசிம்ஹன் ஆலயம். தீபாலயம் என்று அதற்குப் பெயர். கார்த்திகை மாதத்திலே அங்கே யக்ஞம் பண்ணுவதுண்டு. 'தீபாலயத்தில் யக்ஞம் பண்ணு' என்று லக்ஷ்மி நரசிம்ஹன் ஆக்ஞாபித்தான். அது எங்கு இருக்கிறது என்று முதலில் தெரியவில்லை. அப்புறம் விசாரித்தால் இந்த இடம் என்று சொன்னார்கள். ஆச்சர்யமான க்ஷேத்திரம் அது. பகவானுடைய மூக்குக்கு நேரே ஒரு தீபம் இன்றைக்கும் எரிந்து கொண்டிருக்கிறது. அவன் திருவடிக்கு நேரே ஒரு தீபம் எரிந்து கொண்டிருக்கிறது - ஜ்வாலை.

கர்ப்பகிருஹத்தினுள்ளே காற்று புகக்கூட இடமில்லை. அவ்வளவு நெருக்கமான இடம். அந்த இடத்தில் மூக்குக்கு நேரே இருக்கிற ஜ்வாலை மாத்திரம் ஆடிக்கொண்டே இருக்கும். அங்கே போகிறவர்களுக்கு நன்றாகத் தெரியும். கீழே இருக்கிற தீபம் அப்படியே ஆடாமல் இருக்கும். மூக்குக்கு நேரே இருப்பது மட்டும் ஆடும்! இதிலிருந்து என்ன தெரிகிறது? எம்பெருமானுடைய மூச்சுக் காற்றானது அப்படியே அந்த மூச்சுக் காற்றுப்பட்டு அலைகிறது. அவ்வளவு ஜீவகளையோடு பரமாத்மா அங்கே எழுந்தருளியிருக்கிறான்.

நாம் அவனிடத்திலே சஞ்சலத்தோடு போகிறோம். மனத்திலே பல வியாகூலங்களோடு போகிறோம். அவனை ஸேவிக்க உள்ளே போனோமானால், நம் மனது மாதிரி அந்த தீபம் ஆடுகிறது. அவனை ஸேவித்த பிற்பாடு நமக்கு ஒரு சஞ்சலமும் இல்லை என்பதை, அவன் திருவடிக்கு நேரே இருக்கிற தீபம் காட்டிக் கொடுக்கிறது!

*(வளரும்)*

# வாரியார் அமுதம்!



**"நான், நான்"** என்ற எண்ணம் தான் அகப்பற்று என்பது. "நான் செய்தேன், நான் சம்பாதித்தேன், நான் எல்லோரையும் காப்பாற்றினேன், நான் மிகவும் சமர்த்தன்" என்ற எண்ணங்களை அடியோடு தொலைக்க வேண்டும்.

இந்த நான் என்கிற எண்ணம் என்று நீங்குகிறதோ, அன்றே மெய்ஞ்ஞானம் தலைப்படும். நான் என்ற எண்ணம் கெட்டழிந்தவுடனே, துன்பம் முழுவதும் நீங்கப்பெற்று, அருட்பெருஞ்சோதி தரிசனம் உண்டாகும். ஆனந்தம் உதிக்கும், என்றுமணியா இன்பம் தோன்றும்.

தெருக்கூத்து பத்தரை மணிக்கு ஆரம்பித்துவிடும்னு அவசர, அவசரமாக கமிட்டியில் மணிலா பயிர்விற்ற பணத்தை வீட்டில் வைத்துவிட்டு கூத்துக்கு வர நேரமாகிவிடும் என்ற காரணத்தினால், திண்டிவனத்திலேயே ஓட்டலில் சாப்பிட்டுவிட்டு நேராக கூத்துப் பார்க்க வந்த தனஞ்செழியனுக்கு ஏமாற்றமே மிஞ்சியது.

கூத்து நடக்குமிடத்தில் மரம் நட்டு டியூப் லைட்டும், கியாஸ் லைட்டும் எரிந்து கொண்டிருந்தன. ஜனங்கள் நின்று கொண்டும், அமர்ந்து கொண்டுமிருந்தார்கள். பெஞ்ச் மட்டும் போடாமலிருந்தது.

"வேஷக்காரன் இன்னும் வரலையா?" பக்கத்திலிருந்த அந்தக் கிராமத்து ஆள் ஒருவரைக் கேட்டார் தனஞ்செயன்.

"பொழுதோடவே பெட்டி, மிருதங்கத்துடன் வேஷக்காரர் வந்துட்டார்."

"அப்புறம் எதுக்குங்க கூத்து ஆரம்பிக்கலை?"

"மரக்காணத்தா மவன் சூரவேஷம் கட்டிக்கின்னு வந்து முன்னே நடந்த ரெண்டு கூத்திலேயும் ரெண்டு பெஞ்சை உடைச்சிட்டான். ராவிக்கி நடக்க இருப்பது மாடுபுடிச் சண்டை நாடகம். மரக்காணத்தா மவன் பலாயன் கட்றான். வீம வேஷமாச்சா பெஞ்ச் தூள் தூளா பூடும்னு ரைஸ்மில்காரர் பெஞ்சைக் குடுக்க மாட்டாங்கறார். வாத்தியார் எல்லாம் ரைஸ்மில் எதிரே தான் இருக்காங்க" என்று சொன்னார்.

என்ன ஊர் இது?

வளரும் கலைஞர்களை ஊக்கம் கொடுத்து, உற்சாகமூட்டி உதவி செய்வதை விட்டுவிட்டு இப்படி மூக்கை உடைக்கிறார்களே!

மரக்காணத்தான் மகன் ஆட்டத்தைப் பார்க்க ஆவலுடன் வந்த தனஞ்செயன் எப்படியாவது கூத்தை நடத்த உதவிட வேண்டும் என்ற எண்ணத்தில் ரைஸ்மில்லை நோக்கி நடந்தார்.

"பெஞ்ச் இல்லைன்னா போக வேண்டியதுதானே. அதைவிட்டுட்டு இப்படி இம்சை கொடுத்தா எப்படி? வேணும்னா ஒரு ஐநூறு ரூபா கொடுத்துட்டு பெஞ்சை எடுத்துப் போங்க.



# உணர்வு!

எஸ்.சீதாராமன்

ஆறு மாதத்துக்கு முன்பு நடந்த அசாகூரன் ஆஞ்சநேயர் சண்டை நாடகத்தில் அசாகூரன் வேடம் ஏற்று திரைவிலகி சபைக்கு வந்து, குதித்து மிரட்டி பாடி ஆடியபோது பயந்து ஒன்பது மாதம் முழுகாமலிருந்த மாட்டுக்கார மூட்டு முத்தம்மா சபையி லேயே மகனைப் பெற்றெடுத்தது ஆச்சர்யப்பட வைத்த செய்தி.

அழிந்து வரும் தெருக்கூத்துக் கலையை வளர்க்கும் பொருட்டு, அக் கிராமத்தைச் சேர்ந்த வயதான கூத்து வாத்தியார் சீனுவாசன் துடிப்பும், அக்

ராவிக்கி கூத்தை நடத்திட்டு காலையில் முழுசா பெஞ்சை ஒப்படைச்சுட்டு கொடுத்த பணத்தை வாங்கிக்குங்க" என்று ரைஸ்மில்காரர் சொன்னபோது அங்கு போய் நின்றார் தனஞ்செயன்.

வாத்தியாருக்குத் திக்கென்றது.

மரக்காணத்தா மகன் கெங்காதுரை சாதுதான். வேஷக்காரர் அரிதாரம் பூசி, காது கட்டை, புஜகட்டை, சூரைமுடி, டவல் கட்டி பத்மாசூரனாக மாற்றினால் அசல் பத்மாசூரனைப் பார்த்தறியாத கெங்காதுரை அவன் கேட்டு, படித்திருந்த பத்மாசூரனாகவே மாறிவிடுவான்.

அப்பொழுது கெங்காதுரை என்று அழைத்தால் யாரையோ அழைப்பதைப் போலத்தான் நிற்பான். அவன் கட்டி நிற்கும் வேஷத்தின் பெயரிட்டு அழைத்தால்தான் அசைவான். அவனை வேஷத் துடன் பார்க்கவே சிலர் அஞ்சுவார்கள்.





"மணல் அள்ளுன ஊழல்ல நீங்க மாட்டிக்கிட்டதை மக்கள் மறக்கல போலிருக்கு தலைவரே!"
"எதை வச்சுச் சொல்ற?"
"அதான் இப்ப உங்க வெற்றி ஆசையில 'மண் அள்ளி'ப் போட்டுட்டாங்களே!"
- கிரிஜா மணாளன்

கறையும் கொண்ட பதிமூன்று இளைஞர்களை ஒன்று கூட்டி முத்து மாரியம்மன் நாடக மன்றத்தை ஒரு வருடத்துக்கு முன்பு உருவாக்கினார். அதில் சூரவேஷத்துக்காகத் தேர்ந் தெடுக்கப்பட்டவன்தான் கெங்கா துரை. மற்ற அங்கத்தினர்களும் அவரவர்கள் பாத்திரத்தைச் செம்மையாகச் செய்வதில் கெட்டிக்காரர்கள்தான்.

இரவு நடக்க இருக்கும் நாடகம் - மாடுபிடிச் சண்டை. கெங்காதுரைக்கு பலாயனன் பாத்திரம். மடப்பள்ளியில் சமையல்காரன்போல் உருமாறி பணிபுரியும் வீமன் துடுப்பு, கரண்டி, உலக்கையுடன் சபைக்கு வந்தால் தாங்குமா மரபெஞ்ச் - ஏற்கெனவே மரக்கத்தியை வைத்துக் கொண்டு குத்தி, உதைத்து ஆடியபோதே உடைபட்ட பெஞ்சுகள், ராத்திரிக்குத் தாக்குப்பிடிப்பது கடினம்தான்.

வேஷக்காரர், பெட்டி, மிருதங்கம், தாளக்காரர்களுக்குக் கொடுக்க வசூல் செய்துவைத்திருக்கும் பணத்தை இவரிடம் கொடுத்து விட்டு பெஞ்சைத் தூக்கிச் சென்றால், பலாயனனும் பெஞ்சை உடைத்துவிட்டால் சமாளிப்பது இயலாத காரியம்.

"மாமா, ராவிக்கு கெங்காதுரையை அடக்கமா ஆடச் சொல்றேன். பெஞ்சைக் குடுங்க மாமா."

"சீனுவாசா! உன் பேச்சை கெங்காதுரை கேட்பான்னு உனக்கு நம்பிக்கை இருந்தா, வசூல் பணத்தில ஐநூறைக் கொடுத்துட்டு எடுத்துப்போக வேண்டியது தானே?"

"கொடுத்துடுவேன். கெங்காதுரை வேஷம் கட்டிக்கின்னு வந்துட்டான்னா நம்ம கட்டுக்கு அகப்படமாட்டான் - பெஞ்ச் உடைஞ்சு போயிடுச்சுன்னா உங்களுக்குப் பதில் சொல்லிக்கலாம். வேஷம், மேள, தாளக்காரர்களுக்குப் பதில் சொல்ல முடியுமா?"

"சீனுவாசா, மானூரு பசங்களைப் பத்தி எனக்குத் தெரியாதா? பெஞ்சை உடைச்சுப் போட்டுட்டு அவனவன் மூலைக்கு ஒருத்தனா போயிடுவீங்களே! பணத்தைக் கொடுப்பதா இருந்தா நில்லுங்க இல்லை போங்க" என்று கறாராய்ச் சொன்னார் ரைஸ்மில்காரர்.

கூத்துப் பார்க்க வந்திருந்த அசலூர்க் காரர் தனஞ்செயனுக்குச் சுருக்கென்றது. முன்னே சென்று ஐநூறு ரூபாயை நீட்டி, "நீங்க கேட்ட பணத்தை நான் கொடுக்கிறேன். பெஞ்சைக் கொடுங்க" என்று சொன்னார்.

யோசித்தார் ரைஸ்மில்காரர்.

"என்ன யோசனை? வாங்கிக்குங்க"

பணத்தை வாங்காமல் பெஞ்சைக் கொடுத்தார் ரைஸ்மில்காரர். கும்பல் கலைந்தது.

"பணத்தை வாங்கிக்கின்னே பலகையைக் குடுத்திருக்கலாம் - ராவிக்கி பலகை உசுரைப் போக்கிடுவான் மரக்காணத்தா மவன்" என்று கூறி வருந்தினாள் ரைஸ்மில்காரரின் மனைவி.

"ரேணுகா, தூள் தூளா உடைச்சுப் போடட்டும். சந்தோஷம். அசலூர்க் காரனிடம் பணத்தை வாங்கிக்கினு நம்மூர்ப் பசங்க கூத்தாட பெஞ்சைக் கொடுத்தா, நம்ம ஊர் மானமே போயிடும். ஊர் மானம் போறதைவிட நம்ம பெஞ்ச் உடைஞ்சு போனாலும் கவலை இல்லை" என்று சந்தோஷமாகச் சொன்னார் ரைஸ்மில் காரர்.

# கல்விக்குக் கைகொடுங்கள்; வாழ்க்கைக்கு உயிர் கொடுங்கள்!





• பா. சந்திரசேகரன்

சேஷசாயி தொழில் நுட்பக் கல்லூரியில் சிவில் இன்ஜினீரிங் படிக்கிறேன். என் தந்தை சமையல் வேலை செய்பவர். மாத வருவாய் ரூ 700 முதல் ரூ 800 வரைதான் கிடைக்கும். என் தாயார் தீப்பெட்டி தொழிலகத்தில் பணி புரிகிறார். பத்தாம் வகுப்பில் நான் 500க்கு 450 மதிப்பெண் பெற்றேன். எனக்கு உதவித்தொகை வழங்கி ஆதரிக்க வேண்டுகிறேன்.

- பா. சந்திரசேகரன், திருச்சி - 10.



• ஆ.பபி

இலங்கையிலிருந்து இந்தியா வந்து ஆளியார் அகதிகள் முகாமில் தங்கியுள்ளோம். உடுமலை அரசு கலைக் கல்லூரியில் எம்.ஏ (தமிழ்) படித்து வருகிறேன். தங்கள் உதவித் தொகை எனக்கு மிகவும் பயனுள்ளதாக அமையும்.

- ஆ.பபி, ஆளியார்நகர்

பெரம்பலூர் ரோவர் பொறியியல் கல்லூரியில் படித்து வருகிறேன். கல்லூரி கட்டணம் கட்ட வசதியின்றி என் தகப்பனார் வீட்டை வங்கியில் அடமானம் வைத்து கடன் வாங்கியுள்ளார். நீங்கள் வழங்கும் உதவித் தொகை புத்தகங்கள் வாங்க உபயோகமாயிருக்கும். தயவு செய்து ஆதரிக்கவும்.

- வி. சரவணன், தண்ணீர்குன்னம்



• வி. சரவணன்

**கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவு அறக்கட்டளை** இதுபோன்ற கடிதங்களை ஆண்டுதோறும் ஆயிரக்கணக்கில் பெறுகிறது. ஒவ்வொரு விண்ணப்பத்தையும் கவனமுடன் ஆராய்ந்து சான்றிதழ்களை சரி பார்த்து அறங்காவலர்கள், உதவித்தொகை பெறத் தகுதியுடையோரைத் தேர்வு செய்கிறார்கள். நடப்பு கல்வி ஆண்டுக்கு ரூ. 2,75,000 பல்வேறு நிலைகளில் படிக்கும் ஏழை மாணவர்களுக்கு விநியோகமாகிறது. அமரர் கல்கி கிருஷ்ணமூர்த்தி நினைவாக நடைபெறும் இந்தப் புனிதப் பணியில் பங்கேற்க விரும்புவோர், தங்களால் இயன்ற அளவுக்கு நன்கொடையை Kalki Krishnamurthy Memorial Trust என்ற பெயருக்கு MO/DD/A/c Payee Cheque மூலம் அனுப்பலாம்.

நன்கொடைகளுக்கு வருமான வரி விதி 80Gன்படி வருமான வரி விலக்கு உண்டு.

ரூ.1000 அல்லது அதற்கு அதிகமான அளவில் கிடைக்கப் பெறும் நன்கொடைகள், மூலதன நிதியில் சேர்க்கப்பட்டு அரசுப் பத்திரங்களில் முதலீடாகின்றன. இதிலிருந்து கிடைக்கும் வருவாய், ஆண்டுதோறும் கல்விக்கான உதவித்தொகைகளாக விநியோகமாகின்றது. ஆக, உங்கள் நன்கொடை, மாணவர் உலகுக்கு நிரந்தரப் பயன் தரும். நன்றி.

கல்கி ராஜேந்திரன்,
நிர்வாக அறங்காவலர்

நன்கொடைகள் அனுப்ப முகவரி:
Managing Trustee, Kalki Krishnamurthy Memorial Trust,
New # 14, Fourth Main Road, Kasthurba Nagar,
Adyar,Chennai - 600 020.

# குறி தவறியவை...

ஈரோடு தமிழன்பன்

பகலின்
சதுர நறுக்குகளை நாற்புறமும்
தட்டி அடித்து
நிறுத்தியதுபோல் பளிச்சென்று
காலை நேரத்தில்
மெரினாக் கரைமணலில் அங்கங்கு
பலூன் சுடும் படங்கள்

வண்ண வண்ணமாய்ப்
பூக்கும் காற்று மலர்கள்
இருப்பதில்லை காலையில்

துப்பாக்கிகள் துண்டு ரவைகள்
போட்டிகள்
காயம்பட்ட முந்தைய இரவுக்குள்
கரைந்து போயிருக்க வேண்டும்

பரிசுகள் தந்த பலூன்கள்
இறந்து விட்டன
சரியாகச் சுட்டவர்களின் வெற்றி
அவற்றின் வண்ணங்களில் மறைய
அதிக நேரம் ஆகவில்லை

சுடப்படாத பலூன்கள்
சொல்லிக் கொண்டன தமக்குள்
அவரவர்
தமக்குள் குறிபார்த்துச் சுட
எத்தனை இல்லை
ஏனிது தெரியவில்லை

வேட்டை வெறிக்குக்
கொஞ்சம் விலகிய விளையாட்டுக்
குதூகலத்திற்குள்
குறிதவறிய ரவைகள் விழுந்து
கடல் அலைகளுக்கு
மாற்று அலைகளை எழுப்பின

மெரினா திறந்தவெளி
வெண் பலகைகளில்
அரூப எழுத்துக்களில் எழுதுகிறது
வைகறை
மாலை பலூன்களிலிருந்து
சுடப்பட்டு இறந்துவிடுங்கள்
மற்றவர்க்கு மகிழ்ச்சியாய்ப்
பிறந்து விடுங்கள்

கிழக்கின்
அசல் பல்கலைக்கழக
ஆசிரியன் பாடம் ஆரம்பிக்கிறான்
நகல் பல்கலைக்கழகக்
கரும்பலகைகள் - கரையோர
வெண்பலகைகளை
எதிரொளிக்கின்றன.

2.7.2008

# ரிசல்ட்!

**நா**ளை காலையில் எஸ்.எஸ்.எல்.சி ரிசல்ட் வெளிவரப்போவதாக டீ.வியில் அறிவித்து விட்டார்கள். மணிக்கு படபடப்பு அதிகமாகிவிட்டது. கார்ப்பரேஷன் பள்ளியில் படிப்பவன் மணி. அப்பா வீடுகளுக்கு பெயிண்ட் அடிப்பவர். மணி தான் வீட்டுக்குப் பெரியவன். இரண்டு தம்பிகள் இருக்கின்றனர்.

கணக்கு பரீட்சையை அவன் சரியாக எழுதவில்லை, என்ன செய்வது...? பேப்பரில் நம்பர் வராமல் போய்விட்டால் அவமானம். அப்பா அடிப்பாரா...? பக்கத்து வீட்டுக்காரர்கள் கேலி செய்வார்களா? என குழம்பி இருந்தான்.

நாளை ரிசல்ட் வருவதற்குமுன்பே திருப்பதிக்கு ஓடிவிட வேண்டும். அங்கு ஏதாவது வேலை செய்து பிழைத்துக் கொள்ளலாம் என்ற முடிவுடன் இரவு உணவைச் சாப்பிட்டுவிட்டு படுத்தான் மணி.



கே. பூபதி

திடீரென்று விழிப்பு வந்தது. இன்னும் விடியவில்லை. யாரோ பேசிக் கொண்டிருந்தார்கள். குரலைக் கவனித்தான் அப்பாவும், அம்மாவும்தான் அது.

"ஏங்க தூங்காம எழுந்து உட்கார்ந்திட்டீங்க?"

"ஒண்ணுமில்லை. நாளைக்கு மணிக்கு ரிசல்ட் வருது, என்ன ஆகுமோன்னு தான்...!"

"இதுக்கு ஏங்க கவலைப்படறீங்க, அவன் கண்டிப்பா பாஸ் ஆகிவிடுவான்! அதுவரைக்கும் வேண்டுமானால் உங்களுடன் வேலைக்கு அழைச்சிட்டுப் போங்க..!"

"சே...சே... இந்த பெயிண்டிங் வேலை என்னோடு போகட்டும், தினமும் சுண்ணாம்பு நெடி, முதுகுவலி, கைகால் எல்லாம் எரிச்சல் இதெல்லாம் அவனுக்கு வேண்டாம்."

"அப்போ என்னங்க செய்வது...?"

"அவன் தொடர்ந்து படிக்கட்டும், ரிசல்ட் எப்படி வந்தாலும் பரவாயில்லை...?"

அம்மாவும், அப்பாவும் பேசிக் கொண்டதைக் கேட்டு மணியின் கண்களில் வடிந்த நீர் தலையணையை நனைத்தது.

**ம**றுநாள் காலை அப்பா வேலைக்குப் புறப்பட்டார். மணி குளித்து முடித்து கையில் நோட்டு புத்தகத்துடன் புறப்பட்டான். எங்கே என்பதுபோல் பார்த்தாள் அம்மா.

"அம்மா! நான் கணக்கு வாத்தியார் வீட்டுக்கு டியூசன் படிக்கப் போறேன்" என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டான் மணி. ●

கணிசமான நெசவாளர்களைக் கொண்ட காஞ்சிபுரம் மாவட்டத்தைச் சேர்ந்தவர்.

• என்.கே.கே.பி ராஜா



“கைத்தறித் துறையைப் பொறுத்தமட்டில் புரட்சித்தலைவி அவர்களது அரசு தனிக்கவனம் செலுத்தி வந்தது என்று சொல்வேன். தமிழ்நாட்டில் விவசாயிகளுக்கு அடுத்தபடியாகக் கரிசனத்துடன் கவனிக்கப்பட வேண்டியவர்கள் நெசவாளர்கள்தான். 1996 - 2001 தி.மு.க ஆட்சியில் நஷ்டத்தில் நடந்து கொண்டிருந்த கோ.ஆப்டெக்ஸ் நிறுவனம், புரட்சித்தலைவி ஆட்சியில் லாபம் ஈட்டத் துவங்கியது. தி.மு.க ஆட்சிக் காலத்தில் நெசவாளர்களுக்குக் கொடுக்க வேண்டிய வட்டி மான்யம் 28 கோடி கொடுக்காததால் நெசவாளர்கள் மிகவும் நொந்து நூலாய்ப் போயிருந்தனர். இதனால் அவர்கள் போராட்டங்களிலும் ஈடுபட்டனர். எங்கள் ஆட்சியில்தான் அந்த மான்யத்தைக் கொடுத்தோம். நெசவாளர்களுக்கு காப்பீடு திட்டம் செயல்படுத்தப்பட்டு அவர்கள் செலுத்த வேண்டிய பங்குத் தொகையை அரசே கட்டியது. சரக்குகள் விற்பனையாகாமல் தேங்கி விட்டதால் நெசவாளர் சங்கங்கள் கடும் நிதி நெருக்கடியில் இருந்தன.

# “அவர்கள் மூடியதை...

சென்ற ஆட்சியில் கைத்தறித் துறை அமைச்சராக இருந்த வி. சோமசுந்தரம்




நாங்கள் சிறப்புத் தள்ளுபடி கொடுத்து சரக்குகள் விற்பனையில் வசதி செய்தோம். எக்ஸ்போர்ட் சந்தையைப் பிடிப்பதற்காக, தரமான ஆடைகளை பல வகையான கலர்களில் உற்பத்தி செய்ய நெசவாளர்களுக்குப் பயிற்சி கொடுத்தோம். இவை தவிர, விசைத்தறி நெசவாளர்களுக்கு மின்கட்டணம் யூனிட்டுக்கு ஒரு ரூபாயாகக் குறைக்கப்பட்டது. நெசவாளர் பயிற்சி மையங்கள் ஆண்டிப்பட்டி, ஈரோடு, குமாரபாளையம், பல்லடம் ஆகிய இடங்களில் திறக்கப்பட்டன. நாங்கள் எடுத்த நடவடிக்கைகள் காரணமாக இப்போது 600க்கும் மேற்பட்ட கைத்தறி நெசவாளர் சங்கங்கள் லாபத்தில் இயங்கி வருகின்றன. இந்த தி.மு.க ஆட்சியில் நெசவாளர்களுக்குப்

நிதாகச் செய்ய ஏதுமில்லை. அவர்களுக்கு
லவச மின்சாரம் என்று தேர்தல்
றிக்கையில் சொல்லியிருக்கிறார்கள்.
சயலில் காட்டட்டும் பார்க்கலாம்''
ன்கிறார் சோமசுந்தரம்.

தமிழ்நாட்டில் கைத்தறித் துணிகளின்
க்கிய மையம் ஈரோடு. இங்கிருந்தும்,
தன் சுற்றுப்புறங்களிலிருந்தும்
காடிக்கணக்கில் கைத்தறி ரகங்கள்,
ட்டின் பல பகுதிகளுக்கும்
ற்றுமதிக்கு அனுப்பப்படுகின்றன.
ரோட்டைச் சேர்ந்தவர் புதிய
கத்தறித் துறை அமைச்சர்
ன்.கே.கே.பி ராஜா. இவரது தந்தை
ன்.கே.கே.பெரியசாமி 1989 - 91
.மு.க ஆட்சியில் கைத்தறித் துறை
மைச்சராக இருந்தார் என்பது
றிப்பிடத்தக்கது.

''நெசவாளர்களின் துயர் துடைப்பதற்கு
தலிடம் கொடுப்பது தி.மு.கதான். 1950களில்
தங்கிக் கிடந்த கைத்தறி ஆடைகளை,
தாள்களில் சுமந்து தெருத் தெருவாக
ற்றவர்கள் அண்ணாவும் கலைஞரும்.
னவே நெசவாளர்களின் பிரச்னை என்ன
ன்பது முதல்வருக்கு நன்றாகவே தெரியும்.
றிப்பாக நான் பதவியேற்றுக்
காண்டவுடன் இந்த ஒரு மாத காலத்தில்
ர்வாக ரீதியாகப் பல கூட்டங்களை நடத்தி,
ரச்னைகள் எங்கெங்கு இருக்கின்றன
ன்பதைப் புரிந்துகொண்டேன். இந்தத்
றையின் கீழ் பதினெட்டு நூற்பாலைகள்
ருந்தன. அவற்றில் பதிமூன்றை அ.தி.மு.க
ட்சியில் மூடி விட்டார்கள். இதனால்
ற்றுக்கணக்கானவர்கள் வேலை
ழந்தார்கள். மூடப்பட்ட நூற்பாலைகளைத்
றப்பதற்கான வழிகளை கலைஞர்
லோசனையின் பேரில், பரிசீலித்து
ருகிறோம். அதேபோல, தமிழகத்தில் 194
காடி ரூபாய்க்குத் துணிகள்
ிற்பனையாகாமல் தேங்கிக் கிடக்கின்றன.
ாஞ்சிபுரத்தில் மட்டும் 82 கோடி
திப்பான பட்டுச் சேலைகள்
ிற்பனையாகாமல் தேங்கிக் கிடக்கின்றன.



• வி. சோமசுந்தரம்

இதனால் பல கூட்டுறவு
சங்கங்கள் செயல்படாமல்
இருக்கின்றன. முதலில்
தேங்கியிருக்கும் சரக்குகளை
விற்க வேண்டும். உற்பத்தியும்
தொடர்ந்து நடைபெற
வேண்டும்; அதேசமயம்
சரக்குகள் தேங்கக்கூடாது
என்றால் விற்பனையைக்
கூட்ட வேண்டும். எனவே
கலைஞர் ஆலோசனையின்
பேரில் கைத்தறித் துறையில்
நெசவாளர் துயர் துடைக்க
எல்லா நடவடிக்கைகளும்
எடுக்கப்பட்டு வருகின்றன.
மற்றபடி தேர்தல் அறிக்கையில்
சொன்னதுபோல,
நெசவாளர்களுக்கு இலவச
மின்சாரம், நெசவுத் தொழில்
சார்ந்த பூங்காக்கள்
ஆகியவற்றைப் பற்றி தக்க
நேரத்தில் முதல்வர்
அறிவிப்பார்'' என்று
சொல்கிறார் ராஜா.

- கௌசி

படங்கள்: ராஜன்

# ...நாங்கள் திறப்போம்!''

முழுவதுமே பெண்களாலேயே நடத்தப்பட்ட நாடகக் குழுக்கள் சில அந்தக் காலத்தில் புகழோடு விளங்கிவந்தன. அதில் பெண்களே ஆண் வேடமிட்டு நடிப்பார்கள். 1959-ம் ஆண்டில் சென்னை ஒற்றைவாடைத் தியேட்டரில் நடத்தப்பட்ட 'காணிக்கை' எனும் நாடகத்தில் ஆண்வேடமிட்டு வாலிபனாக நடித்தவர் இன்றைய புகழ்மிக்க பாட்டி நடிகையான எல்.என்.லட்சுமிதான்.

- தமிழ் நாடக நடிகையர்

சினிமாமணியின் யோசனைப்படி ஒரே நாயைத் திரும்பத் திரும்பக் காட்டினால் கீழே இருந்து விசில் அடிப்பார்கள். 'அதே நாய்', 'அதே நாய்' என்று கத்துவார்கள் என்று நினைத்து, அந்த ஊரில் நாய் வைத்திருந்த பல பேரையும் பார்த்துப் பேசினோம்.

"எங்கள் நாடகத்தில் உங்கள் நாயோடு மேடைக்கு வந்து, 'இதுதான் உங்க நாயா?'

# என் செல்ல ஜிம்மி!

என்ற வசனத்தை மட்டும் பேச வேண்டும்" என்று வேண்டுகோள் வைத்தோம்!

பலரும் மிகுந்த மகிழ்வோடு ஒப்புக் கொண்டார்கள். நாடகத்தில் நடிக்க ஒரே நேரத்தில் தனக்கும் வாய்ப்பு, தன் நாய்க்கும் வாய்ப்பு என்று மகிழ்ந்து அன்றிலிருந்தே நாய்களுக்குச் சோப்பு போட்டுக் குளிப்பாட்ட ஆரம்பித்தார்கள்.

நாடக நாள் நெருங்க, நெருங்க எங்களைக் காட்டிலும் நாய் வைத்திருந்தவர்களே அதிகமான பரபரப்போடு காணப்பட்டார்கள்

'ஏன் சார் ஒரு வசனம்தானா? நாய்க்கு வசனம் கிடையாதா? என்ன காஸ்ட்யூம்?' என்ற ரேஞ்சுக்கு எங்களைப் போட்டுப் பாடாய்ப்படுத்தினார்கள். 'காத்திருந்தால் வருவேன்...' பயங்கர மிருகங்கள் நடிக்கும் நாடகம் இதுவரை நீங்கள் பார்த்தறியாத புதுமுகங்கள்' என்று சினிமா மணி ஒலி பெருக்கியில் அறிவிப்புக் கொடுக்க ஊரே மகிழ்ந்து காத்திருந்தது எங்கள் நாடகத்துக்காக.

"மணி புதுமுகங்கள் என்று யாரைச் சொன்னாய்?" என்று நான் குழப்பத்தோடு கேட்டேன். ஏனென்றால் நாங்கள் பல நாடகங்கள் கண்ட பழைய முகங்களாயிற்றே!

"எல்லாம் அந்தப் புதுசு புதுசா வரப் போற நாய்களைத்தாண்டா... பாரு நாடகம் பிச்சுக்கிட்டுப் போகப் போகுது" என்றான் மகிழ்ச்சியோடு.

நாடகத்தன்று மாலை 6 மணிக்கே மைதானம் நிறையத் தொடங்கியது. நாடகமும் கோலாகலமாகத் தொடங்கியது.

முதல் காட்சியில் நடிகை ரூபஸ்ரீ ஜிலுஜிலு புடைவையோடு கறுப்புக்கண்ணாடி போட்டுக்கொண்டு, வெள்ளைப் பாமரேனியன் நாயோடு மேடையில் தோன்றியபோது ஏழு வண்ணங்களில் கலர் லைட். ரூபஸ்ரீ மீது வெளிச்சத்தை வாரி இறைத்தது. கூலிங்கிளாஸைக் கழட்டி ரசிகர்களைப் பார்த்துக் கையசைத்தவுடன் கூட்டம் மயக்கம் போடாத குறைதான். ஒரே ஆரவாரம் விசில்.

நாடகம் சூடு பிடிக்கத் தொடங்கியது. நாய் காணாமல் போகும் காட்சி அடுத்த காட்சி. நாடகக் கொட்டகையின் பின் புறத்துக்குத் தற்செயலாகப் போன நான் மிரண்டே போய்விட்டேன்.

ஏறத்தாழ நாற்பதுபேர் தங்கள் நாய்கள் சகிதமாக அங்கே நடிப்பு வெறியில்

சினிமாவுக்குப் போகலாம் வாங்க!



லவிக்கொண்டிருந்தனர்.

நடிகை ரூபஸ்ரீ தேம்பித் தேம்பி அழுதபடி (கூலிங்கிளாஸைக் கழட்டாமல் ான்) மேடைக்கு வந்து 'என் செல்ல ம்மி, மை டாக், மேரா குத்தா' என்று ல மொழிகளில் சொல்லிச் சோக சனம் பேச, மேடைக்குப் ின்புறம் இருந்து மணி லேசாக விசில் அடிக்க, ாய்களைப் பிடித்தபடி வ்வொருவராக மேடைக்கு

**பொது**வாக இரண்டு நாய்கள் தெருவில் நேருக்கு நேர் சந்தித்தாலே அந்த இடம் போர்க்களமாய்ப் புழுதி பறக்கும். மேடையில் சந்தித்தால்...



படம் : புதூர் சரவணன்

ஆவேசமாக ஓடிவரத் தொடங்கினார்கள்.

நானும் சினிமாமணியும் மறந்துபோன ிஷயம் ஒன்று அப்போது அமர்க்களமாக மேடையில் அரங்கேற்றமானது.

ஆட்கள் அதிகமாக இருந்ததால் மேடையின் இரண்டு பக்கங்களில் இருந்தும் தங்கள் நாய்களைப் பிடித்துக் கொண்டு நாய்க்காரர்கள் ஏறிவர. அவர்கள் வசனம் பேசுவதற்கு முன்பா

கவே அவர்ளுடைய நாய்கள் ஆக்ரோஷ மாகக் குரைத்தபடி மேடையை ரெண்டு பண்ண, நாலா பக்கமும் மேடையில் நாய்களும், ஆட்களும், நடுவே கறுப்புக் கண்ணாடி நடிகை ரூபஸ்ரீயும் சுற்றிச் சுற்றி ஓடி வர நாடகம் பார்த்துக் கொண் டிருந்த மக்கள் ஆச்சரியத்தால் அரண்டு போனார்கள். 'எப்படித்தான் இம்புட்டு நாய்களையும் பழக்கினாங்களோ தெரி யலையே..'

'தேவர் பிலிம்ஸ் படத்திலே கூட நான் இப்படிப் பார்த்ததில்லை அடேயப்பா என்ன ஆச்சரியம்' என்று நாடகம் பார்த்த மக்கள் வியந்து வியந்து பேசிக்

'பாஞ்சாலி சபதம்' நாடகத்தை முத்தமி[ழ்]
விழாவில் போட முடிவு செய்தோம்.

நான் இரவு பகலாக பாஞ்சா[லி] சபதத்தை மனப்பாடம் செய்து உ[ரை] நடை வசனமாக மாற்றித் தயார் செய்[து] கொடுத்தேன்.

நான்தான் வஞ்சகச் சகுனி. நண்ப[ன்] ஆவுடையன் கௌரவர் தலைவ[ன்] துரியோதனன். புராணநாடகம் ஆதலா[ல்] அனைவருக்கும் தலையில் 'விக்[...] கனமான கிரீடங்கள், தண்ணீரே பார்[...] தறியாத பட்டாடைகள். எனக்குத் தா[டி] யும் மீசையும் ஒட்டிவிட்டார்கள். ஒட்[...] மீசை சதா மூக்குக்குள் போய் தும்மலை[...]





கொண்டு போனார்கள்.

'தம்பிகளா நாடகத்தைத் தூள் பண்ணிட்டீங்க' என்று மூத்துராக்கு பாராட்டியபடி மேக்கப்பைக் கலைக்க உதவினார்.

ரூபஸ்ரீயாக நடித்த ரமேஷை யார் கொண்டு போய் வீட்டில் விடுவது. இரவு பன்னிரண்டு மணி ஆகிவிட்டதே என்று நாங்கள் ஆளாளுக்குக் கவலைப்பட:

"டேய் நான் ஆம்பளை சிங்கமடா" என்று சொல்லிக் கொண்டே டோப்பா சடையை சைக்கிளில் மாட்டி, சேலையை மடித்து வேட்டி மாதிரிக் கட்டிக் கொண்டு சைக்கிளை எடுத்துக்கொண்டு அவன் கிளம்ப, அப்போதுதான் அந்த ரூபஸ்ரீ உண்மையிலேயே ஆண் என்ற எண்ணம் எங்களுக்கு வந்தது. காரணம் மேக்கப்பும், சேலைக்கட்டும், கறுப்புக் கண்ணாடியும் அத்தனை அபாரம்.

சில ஆண்டுகள் கழித்து கல்லூரியில் தமிழ் படிக்கும்போது பாரதியாரின்

ஏற்படுத்த நான் ஜலதோஷம் பிடித்[...] சகுனி மாதிரி தும்மிக் கொண்டும் இரும[ிக்] கொண்டும் மிகத் தத்ரூபமாகக் காண[ப்] பட்டேன்.

வசனம் முழுவதும் தூய தமிழ் புரா[ண] கால நடை. கௌரவர்களாக நடித்[த] நடிகர்கள் பலர் வசனத்தை மறந்து "மாம[ா] என்ன செய்யட்டும், மாமா நாங்க[ள்] இப்போது என்ன செய்யட்டும்" என்[று] சகுனி மாமாவாகிய என்னைப் பார்த்[து] கண்ணீர் விட்டுக் கதற, நான் யோசிப்[ப] தற்குள் நாடக வசனங்களைக் கையி[ல்] வைத்தபடி திரைக்குப் பின்னிருந்த 'பிர[ா] மிடர்' வசனங்களை அசரீரியாக எடுத்து[ச்] சொல்ல, கண் தெரியாத திருதாஷ்ட்டிர[ன்] தட்டுத்தடங்கலின்றி 'கர்ணன்' ப[ட] சிவாஜி போல 'ஸ்டைலாக' ஏறிச் சென்[று] அமர, பார்த்துக் கொண்டிருந்த பேராசி[ரி] யர்கள் வியப்பால் ஊமையானார்கள்.

அப்போதுதான் அந்த இடைஞ்ச[ல்] வந்தது. பாஞ்சாலியாக நடிக்க வேண்டி[ய] பையனைக் காணவில்லை..

(ரீல் சுற்று[ம்]

# இந்தியாவின் தரூர்!

ஐ.நா. சபையின் பொதுச் செயலாளராக இருக்கும் கோபி அன்னனின் பதவிக்காலம் இந்த வருடம் டிசம்பர் மாதத்துடன் முடிவடைகிறது. அடுத்து அந்தப் பதவியில் அமரப்போவது யார்? இந்தக் கேள்விக்கு விடை காண பலரும் காத்திருக்கிறார்கள்.

மரபுப்படி சுழற்சி முறையில் இந்த முறை ஒரு ஆசிய நாட்டைச் சேர்ந்தவர்தான் இப்பதவிக்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இருந்தபோதும் அமெரிக்கா, மரபை மீறி ஒரு வேட்பாளரை நிறுத்தக்கூடும் என்ற பேச்சும் இருக்கிறது.

ஆசிய நாட்டைச் சேர்ந்தவருக்குத்தான் இந்தப் பதவி என்றாலும், போட்டி கடுமையாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்திய அரசு தனது வேட்பாளராக சசி தரூர் என்பவரை அறிவித்துள்ளது. இவருக்குப் போட்டியாக ஸ்ரீலங்காவின் ஜனாதிபதியின் ஆலோசகரும், முன்னாள் ஐ.நா.சபையில் அண்டர் செகரட்டரியாகப் பணிபுரிந்தவருமான ஜயந்த தனபாலா என்பவர் போட்டியிடுகிறார். தென்கொரியா, தாய்லாந்து நாடுகளைத் தவிர போலந்து போன்ற நாடுகளைச் சேர்ந்த ஐ.நா. சபையில் பணிபுரிந்த அனுபவசாலிகளும் களத்தில் இருக்கிறார்கள்.

இந்தியாவின் சசி தரூர், மும்பையில் பிறந்தவர். வயது ஐம்பது. அதிபுத்திசாலி. இருபது வயதிலேயே அமெரிக்கப் பல்கலைக்கழகத்தில் படித்து பி.ஹெச்டி வாங்கியவர்.

தனது இருபத்து இரண்டாவது வயதில் வேலைக்குச் சேர்ந்து, கடந்த இருபத்தெட்டு ஆண்டுகளாக ஐ.நா. சபையின் பல்வேறு துறைகளிலும் முக்கிய பொறுப்புகளை வகித்தவர். தற்போது அண்டர் செகரட்டரி ஜெனரலாக இருக்கிறார்.

மற்ற வேட்பாளர்கள், ஏற்கெனவே தங்களுக்கு ஆதரவு தேடும் நடவடிக்கைகளில் இறங்கிவிட்டார்கள். "இது தகவல் புரட்சியுகம். பத்திரிகை, டெலிவிஷன் மூலமாக எனது கொள்கை


• சசி தரூர்


• கோபி அன்னன்

மற்றும் திட்டங்களை, சாதனைகளை உலகுக்கு எடுத்துச் சொல்ல முடியும். எனவே தேர்தலுக்காக மிகவும் அவசியமானால் ஒழிய, நான் பிரசாரம் செய்யப் போவதில்லை" என்கிறார் தரூர்.

ஐ.நா. சபை பொதுச் செயலாளருக்கான தேர்தல் எப்படி நடக்கும்?

ஐ.நா. சபையின் பாதுகாப்பு கவுன்சிலில் நிரந்தர உறுப்பினர்கள் (5), நிரந்தரமில்லாதவர்கள் (10) என்று மொத்தம் பதினைந்து உறுப்பு நாடுகள் உள்ளன. அந்தப் பதினைந்து நாடுகளைச் சேர்ந்த ஐ.நா.சபை தூதுவர்கள், வோட்டுப் போட்டு, ஐ.நா.சபையின் பொதுச் செயலாளரைத் தேர்ந்தெடுப்பார்கள். அதனை ஐ.நா. பொதுச் சபை அங்கீகரிக்கும்.

ஒரு நாள் டெஸ்ட் போல விறுவிறுப்பாக ஐ.நா. சபை தேர்தல் காட்சிகள் அரங்கேறிக் கொண்டிருக்கின்றன. ரிசல்ட் எப்படி இருக்கும் என்பதுதான் சஸ்பென்ஸ்!

- மௌலி



# இலங்கையில் மோதல்...

இலங்கையில் மீண்டும் விடுதலைப் புலிகளுக்கும், ராணுவத்துக்கும் இடையில் உக்கிரமான மோதல் துவங்கிவிட்டது. பிரதமரின் தேசிய பாதுகாப்பு ஆலோசகரும், தமிழகம் வந்து முதல்வரிடம் ஆலோசித்து விட்டுப் போயிருக்கிறார். இந்த நிலையில் இந்தியா இப்பிரச்னையில் தலையிடுவது என்றால் எந்த அடிப்படையில் சாத்தியம்? காங்கிரஸ் ராஜ்ய சபா உறுப்பினர் பி.எஸ். ஞானதேசிகனிடம் கேட்டோம்...

"சர்வதேச சட்டப்படி இந்தியா இன்னொரு நாட்டின் உள் விவகாரத்தில் நேரடியாகத் தலையிட முடியாது. ஆலோசனை மட்டுமே வழங்க முடியும். அண்டை நாடான ஸ்ரீலங்காவில் அமைதி நிலவ வேண்டுமென்பது, இந்தியாவின் விருப்பம் மட்டுமல்ல; அது அவசியத் தேவையுமாகும். காரணம், தமிழர்கள் நலன் தவிர நமது பாதுகாப்பு, மீனவர் நலன், அகதிகள் வருகை ஆகிய முக்கிய பிரச்னைகள் இலங்கைப் பிரச்னையின் பக்க விளைவுகளாக நம்மைப் பாதிக்கின்றன.

முன்பு அமைதிப்படை இலங்கையில் நேரடி நடவடிக்கையில் ஈடுபட்டது என்றால் அதற்கு அடிப்படையாக அமைந்தது ராஜீவ் - ஜெயவர்த்தனா ஒப்பந்தம். ஆனால் அதற்குப் பின்னே மிகக் கசப்பான அனுபவங்கள். ஆகவே, இந்தியாவின் நிலை இக்கட்டில் இருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்.





• ஞானதேசிகன்

உலக அரங்கிலேயே இந்தியாவின் பெருமையும், நடுநிலைமையும் நிலைநாட்டப்படும் நேரம் இது. நமது நாட்டைச் சேர்ந்த சசிதரூர் ஐ.நா சபை பொதுச்செயலாளர் பதவிக்குப் போட்டியிடப் போகிறார். சமீபத்தில் நேபாளத்தில் பிரச்னை ஏற்பட்டபோது, நமது அரசின் சார்பில் தூதர்கள் சென்றார்கள். ஆனால் ஸ்ரீலங்காவைப் பொறுத்த வரை 'ஒன்றுபட்ட இலங்கைக்கு ஒரு தீர்வு' என்ற அடிப்படையில்தான் இந்திய அரசு பார்க்கிறது. ஆனால் தனி ஈழம் என்பது புலிகளின் நோக்கம். இப்படி அடிப்படையிலேயே பெரிய மாறுபாடு இருப்பதால்தான் எந்த விதமான சமாதான பேச்சு வார்த்தைக்கும் இடமின்றிப் போய்விடுகிறது. ஐரோப்பிய யூனியனிலும், புலிகளைத் தடை செய்துவிட்ட இந்த நேரத்தில், புலிகள் இறங்கி வந்து ஒரு சமாதான ஒப்பந்தம் போடுவதற்கான வாய்ப்பு இருக்கிறது. இலங்கைத் தமிழர்களின் அமைதியான வாழ்க்கைக்கு இது அவசர, அவசியத் தேவையாகும்''

மோதலில் ஈடுபட்டிருக்கும் இரு தரப்பாரும் ஒருங்கே கேட்டுக் கொண்டால்தான் நடுவர் பணியில் இந்தியா இறங்க முடியும். இப்போது ஸ்ரீலங்கா வெளியுறவுத்துறை அமைச்சர் டில்லி வருகிறார் என்று சொல்கிறார்கள். ஆனால் புலிகள் தரப்பிலிருந்து நாம் நடுவர் பணி செய்ய சம்மதம் என்றாலும் புலிகளுடன் - அதுவும் இந்தியாவில் தடை செய்யப்பட்ட இயக்கத்துடன் - அரசு தொடர்பானவர்கள் யாரும் பேச்சுவார்த்தை நடத்த முடியாது. காங்கிரஸ் கட்சியும் இதற்கு ஒப்புக் கொள்ளாது. இது போன்ற விஷயங்களுக்கு அரசியல் தாக்கம் வேறு உண்டு.

ராஜீவ் கொலைக்குப் பிறகு புலிகள் தமிழக மக்களின் அனுதாபத்தையும் ஆதரவையும் இழந்து விட்டார்கள் என்பதுதான் உண்மை. இருந்தும் அங்கு அப்பாவித் தமிழர்கள் பாதிக்கப்படும்போது இந்தியா தலையிட்டு அமைதி காண வேண்டிய அவசியம் இருக்கிறது. புலிகள், ராணுவம் என்று இரு தரப்பாரும் வன்முறையில் இறங்கக் கூடாது என்றுதான் நாங்கள் கூட்டணிக் கட்சி தீர்மானத்தில் சொல்லியிருக்கிறோம்.

# ...இக்கட்டில் இந்தியா!

என்று கூறி முடித்துக் கொண்டார் ஞானதேசிகன்.

- ப்ரியன்





# நடிகர் சங்க டிஷ்யூம்

பார்லிமெண்ட் எலக்‌ஷனை விட செம ஹாட்டா இருக்குதுப்பு நடிகர் சங்கத் தேர்தல். நம்ம கேப்டன் கட்சி ஆரம்பிச்ச உடனேயே தலைவர் பதவியை ரிசைன் பண்ணணும்னு ஏகப்பட்ட தலைங்க குரல் குடுத்துக்கிட்டே இருந்தாங்க. இப்போ கேப்டன் எம்.எல்.ஏ. ஆயிட்டதால எலெக்‌ஷன் வச்சே ஆகணும்னு முடிவு பண்ணி தேதியும் அறிவிச்சுட்டாங்க. அப்பாடா பிரச்னை முடிஞ்சிடுச்சுன்னு பார்த்தா வெவகாரம் விஸ்வரூபமாயிடிச்சுப்பு.

விஜயகாந்த், சரத்குமார், நெப்ஸ், ராதாரவி மாதிரி கழக நடிகருங்க ஒரு பக்கம் குஸ்திக்கு ரெடியாயிட்டு இருக்க, பாலிடிக்ஸ் ஆளுங்களே வேண்டாம்பான்னு நாசர் மாதிரி நடிகருங்க சவுண்டு குடுக்க ஆரம்பிச்சிருக்காங்க. இதுக்கு நம்ம கார்த்திக் வேற சேம் சைடு கோல் போட்டிருக்காரு. சரி.. என்னதான் நடக்குதுன்னு பார்த்துட்டு வரலாம்னு நம்ம நடிகர் சங்க ஆபீஸ் பக்கம் ஒரு எட்டு போய்ட்டு வந்தேன்.

வாசல்ல அங்க ரெண்டு பேரு, இங்க நாலு பேரா நின்னு ஹெவி டெஸிபல்ல அரட்டை அடிச்சுக்கிட்டு இருந்தாங்க. ரைட்டு... மேட்டரு மாட்டுதுன்னு அவங்க பின்னால நைஸா ஒதுங்கினேன் காதைத் தீட்டிக்கிட்டே... அவங்க பேசுனதை வச்சு அவங்கல்லாம் துணை நடிகர்கள்னு தெரிஞ்சுக்கிட்டேன்.

"இன்னா மாமே. இந்த தபா நம்ம கேப்டன் ஜெயிக்கறது அம்புட்டு ஈஸி இல்லியாம்ல. செம டைட்டா இருக்குன்னு சொல்றாங்க. கேப்டனுக்கு ராங் காட்றது சரத்தா இல்ல நெப்போலியனா"ன்னு ஒருத்தர் வெடியைக் கொளுத்த, "ஆமாம்பா... ஏற்கெனவே ரெண்டு தபா கேப்டன் தலைவரா இருந்துட்டாரு. அதனால மத்த ஆளுங்களுக்கு வழியைவிட்டு ஒதுங்கிடறதுதானே நல்லது"ன்னு பதில் கொடுக்க, அங்க கொஞ்சம் கொஞ்சம் சூடு எகிற ஆரம்பிச்சது.

அடுத்ததா ஒரு வயசானவரு அந்த க்ரூப்ல சேர்ந்துக்கிட்டு பேச ஆரம்பிச்சாரு. அவரை நான் நிறைய படங்கள்ல பஞ்சாயத்து சீன்ல பாத்திருக்கேன். அவருகிட்ட போயி மெதுவா, "என்ன தலைவரே... இந்த தடவை பிரபுவைத் தலைவராக்கப் போறாங்களாமே... வொர்க் அவுட் ஆகுமா"ன்னு ஒரு பிட்டைப் போட,

"தம்பி... சங்கத்துக்கு ஏற்கெனவே தலைவரா இருந்து சிவாஜி பட்ட அவமானம் கொஞ்ச நஞ்சமில்ல. அத்தனை நடந்த பிறகு பிரபுதம்பி தலைவராக வாய்ப்பே இல்லை. அரசியலு, சங்கம்னு ரெட்டைக்குதிரை சவாரி பண்ண முடியாதுங்கறதால இப்போதைக்கு விஜயகாந்த் தலைவராக வாய்ப்பு ரொம்ப கம்மி... அதனால எனக்குத் தெரிஞ்சு சரத்குமாரோ இல்ல நெப்போலியனோ ரெண்டு பேருக்குத்தான் வாய்ப்பிருக்கு"ன்னு மூச்சுவாங்க, நானும் அவரை

விடாம,

"அரசியல்வாதிங்க சங்கப்பதவிக்கு வரக்கூடாதுன்னு சிலபேர் சொல்றாங்களே"ன்னு அடுத்த பிட்டைப் போட்டேன்.

"எப்போ பார்த்தாலும் கட்சியில இருக்கறவங்கதான் தலைவராவுறாங்க. நமக்கு வாய்ப்பே இல்லாம போகுதேன்னு ரொம்ப நாளா சில நடிகர்கள் புலம்பிக்கிட்டு இருக்காங்க. அவங்கதான் இப்போ இந்த மாதிரி பேசறாங்க. யாரு என்ன பேசினாலும் கடைசில இந்த எலக்ஷன்ல கலைஞரா, ஜெயலலிதாவான்னு பார்க்கற மாதிரிதான் இருக்கும். அரசியல் சார்பு இல்லாதவங்க சும்மா நின்னுட்டுப் போக வேண்டியதுதான்"ன்னு படபடத்துட்டு சிகரெட்டைப் பத்தவச்சுக்கிட்டே கிளம்பினாரு...

அப்படியே வெளில போயி ஒரு டீயைக் குடிக்க கடைக்குப் போனா, அங்க குஷ்பு பத்தி ஒரு டாக் ஓடிக்கிட்டு இருந்துச்சு. சரி போற போக்குல இதையும் நோட் பண்ணிக்கலாம்னு அவங்க பக்கத்துல போய் நின்னேன்.

"அப்பு... இந்தத் தடவை குஷ்பு,

# கலைஞர் Vs ஜெயலலிதா





ஆச்சி மாதிரி பழைய ஆளுங்களுக்கெல்லாம் பதவி தரக்கூடாதுன்னு பேச்சு வந்திருக்குப்பு. அதனால ஏகப்பட்ட புது ஆளுங்க சங்கத்துக்குள்ள நுழைஞ்சிடணும்னு ரொம்ப ஆவலா இருக்காங்க. அப்படியே சங்கத்துக்குள்ள புது ரத்தம் வந்தா சரி"ன்னு சொல்ல, நான் டீக்கு காசைக் கொடுத்துட்டு கிளம்பினேன்.

- ஒற்றன்







மூகவாய்க் கட்டை இரயில் பெட்டியின் ஜன்னல் அடியில் பதிந்திருந்தது. ஒரு கை ஜன்னலின் மேற்புறக் கம்பியை உறுதியாகப் பிடித்திருந்தது. மங்களத்தின் பார்வை மட்டும் ப்ளாட்ஃபார்மில் நின்று கொண்டிருந்த கணவர், மகன், மகள் என்று மூவரின் மீதும் மாற்றி மாற்றிப் படியலாயிற்று.

மனைவி வழி உறவினர் வீட்டுத் திருமண நிகழ்ச்சி வெளியூரில் நடக்க இருப்பதால் மனைவி மங்களத்தை மட்டும் அனுப்ப விஸ்வநாதன் முடிவு செய்தார்.

'பெண் பூர்வாவிற்கு பன்னிரண்டு வயது; பையன் விக்னேஷுக்குப் பத்து முடிந்துவிட்டது. அவ்வளவு சின்னக் குழந்தைகள் அல்ல! நான் கவனமாகப் பார்த்துக் கொள்கிறேன். நாலைந்து நாட்கள் பள்ளிக்கூடத்துக்குப் போகாம விருப்பது அவ்வளவு நல்லதல்ல!

சொந்தக்காரங்க மன வருத்தத்தைச் சம்பாதிப்பதைவிட, நீ மட்டும் தனியாகச் சென்று வந்தால் உத்தமம். நீண்ட நாட்கள் கழித்து தெரிந்த முகங்களைப் பார்ப்பதில் உனக்கும் மகிழ்ச்சி கிடைக்கலாம்' இதுதான் மனைவியிடம் விஸ்வநாதன் இவ்வளவு நேரம் பேசியதின் சாராம்சம்.

வழக்கமாக மழைபெய்து ஓய்வது மங்களம் வாய் ஓயாமல் கணவரிடம் சொல்லிக் கொண்டிருந்தாள்.

'நீ பிள்ளைத் தாச்சிப் பெண். களைப் படையக் கூடாது' என்று சொல்லி அவனது தாயார்தான் அவள் பேச்சை நிறுத்த வேண்டியிருந்தது.

இன்று எந்தவித அறிவுரையும் மங்களத்தின் வாயிலிருந்து வெளிக் கிளம்ப வில்லை.

தனது சிக்கனத் திட்டத்தைவிட பொறுப்புணர்ச்சியை மனைவி அதிகம் புரிந்து கொண்டதில் விஸ்வநாதனுக்கு ஒரு பெருமிதம்.

ஒரு கர்வத்துடன் தொண்டையைக் கனைத்துக் கொண்டார் "ஏதாவது வேணுமா?"

வேண்டாம் என்பதுபோல் மௌன மாக மங்களம் தலை அசைத்தாள்.

'எனக்காகவாவது ஒரு ஐஸ்க்ரீம் கேட் கக் கூடாதா' என்பது போல் விக்னேஷ் தான் தன் தாயார் முகத்தையே கவனித் துக் கொண்டிருந்தான்.

இப்போதுகூட தாயார் கண் அசைத் தால் மாற்றுத்துணி இல்லாமல் வண்டி யில் ஏறிவிடலாம் என்று அவனிடம் அப்படி ஒரு இருப்புக் கொள்ளாமை. அதே சமயத்தில் இந்த நாலைந்து நாட் களுக்குள் கிரிக்கெட் மட்டை முதல்

# அதுதான் காரணம்!

போல் பேசி நிறுத்தும் மங்களம் எந்தவித எதிர்விவாதமும் இல்லாமல் தனியே பயணித்து வர ஒப்புக்கொண்டதில் விஸ்வநாதனுக்கு ஒரு அதிக களிப்பு.

பத்தரை வருடங்களுக்கு முன் பையன் விக்னேஷ் பிரவசத்துக்காக மங்களத்தை இரயில் ஏற்றிவிட்டு இரயிலடியில் நின்று கொண்டிருந்த நினைவு மட்டும் விஸ்வநாதன் மனத்தில் பசுமரத்து ஆணி போல் பதிந்திருந்தது.

என்னென்ன செய்ய வேண்டும், எதை யெல்லாம் செய்யக் கூடாது என்று விரும்பி ஏங்கும் பெரிய கோகோ கோலா பாட்டில்வரை அனைத்தும் கிடைத்து விடும் என்ற நம்பிக்கைகளும் அவன் முகத்தில் பரவியிருந்தது.

பூர்வாதான் மௌனமாகத் தள்ளு வண்டியில் வைக்கப்பட்டிருந்த புத்தகங் களையே கவனித்துக் கொண்டிருந்தாள். அவள் விருப்பமே அலாதி?

மனைவியை வழியனுப்பிவிட்டு குழந் தைகளை விரைவில் உறங்க வைத்ததும் தான் விஸ்வநாதனுக்கு ஒரு பூரண நிம்மதி. அந்த நாலைந்து நாட்கள் அவர்களது



# சீதாராம்

நேர்த்தியான பராமரிப்பை ஒரு சவாலாக எடுத்துக் கொண்டதுதான் எவ்வளவு நல்லது என்று நினைத்துக் கொண்டார் அவர்களைப் பள்ளிக்கனுப்ப சீக்கிரம் எழுந்திருக்க வேண்டும் என்பது ஞாபகத்துக்கு வர கடிகாரத்தில் ஐந்து மணிக்கு அலாரத்தை வைத்துவிட்டுக் கண்ணயர்ந்தார்.

அதிகாலையில் அலாரம் அதிக நேரம் ஒலித்து குழந்தைகளும் முன் கூட்டியே எழுந்து விடாமலிருக்க, உடனே அணைத்துவிட்டு புத்துணர்ச்சியுடன் சமையல் அறைப்பக்கம் விரைந்தார் விஸ்வநாதன். விளக்கைப் போட்டுவிட்டு தீப்பெட்டியைத் தேடும்போது பின்புறம் அரவம்.

பெண் பூர்வாதான் நின்று கொண்டிருந்தாள்.

'இன்னும் கொஞ்சம் நேரம் தூங்கியிருக்கலாமே!' விஸ்வநாதன் கூறமுயன்றதை அவள் சட்டையே செய்யாமல் சாமி பிறையிலிருந்த தீப்பெட்டியை எடுத்துத் தந்தாள்.

ஏதோ சட்டென்று ஞாபகத்துக்கு வந்ததுபோல் புன்னகையுடன் விஸ்வநாதன் அதைப் பெற்றுக் கொண்டார். நொடியில் பல்லைத் தேய்த்து முகம் கழுவிவந்த பூர்வா அவர் அடுப்புப் பற்ற வைக்க தடுமாறிக் கொண்டிருப் பதைக் கவனித்தாள்.

சிலிண்டரின் வால்வைத் திறந்து விட்டவன் "பாதுகாப்புக்காக கீழ்ப்புறம் க்யாஸை மூடுவது அம்மாவோட வழக்கம். நீங்களும் ஆபீஸ் போகும்போது



"பஸ் டிரைவரைக் கல்யாணம் பண்ணிக்கிட்டது தப்பாப் போச்சு...!"

"ஏண்டி என்ன ஆச்சு?"

"ஸ்கூட்டர்ல போறப்பகூட ஒவ்வொரு ஸ்டாப்பிங்கா நின்னு நின்னு போறாரு..."

– எஸ்.ராமசாமி

மூடிட்டுப் போங்க!" என்று சொல்ல மறக்கவில்லை.

அடுப்பில் பாலை வைத்துவிட்டு நகர முயன்றவரை நோக்கிய பூர்வா "பல் தேய்க்கப் போறீங்களா? அப்படிண்ணா தீயை மிதமா வைங்க" என்றாள்.

நன்றியுடன் அவளைப் பார்த்துவிட்டு விஸ்வநாதன் மீண்டும் அடுப்புப் பக்கம் திரும்பினார்.

"தம்பியை எழுப்பித் தயார் செய்துட்டு நானும் பள்ளிக்குப் புறப்படத் தயாரா கிறேன்" என்று சொல்லியபடி பூர்வா விரைந்தாள். இடையில் விஸ்வநாதனும் குளித்து ஆபீஸுக்குத் தயாரானார்.

பள்ளிக்குச் செல்ல தயார் நிலையில் இருந்த குழந்தைகள் பாலைப் பருகிக் கொண்டிருந்ததை விஸ்வநாதன் மௌனமாக நோக்கிக் கொண்டிருந்தார். பூர்வா தான் அந்த மௌனத்தைக் கலைத்தாள்.

"அப்பா! இன்னும் கொஞ்ச நேரத்துல வீட்டைப் பெருக்கிக் கூட்ட, பாத்திரம் கழுவ வேலைக்காரி வருவா. வாசற்கதவைத் திறந்தே வைச்சிடுங்க. அவள் மீது ஒரு கண் வைத்துக் கொள்ளுங்கள்."

"சரி" என்றார் ஈனஸ்வரத்தில்.

"வீட்டுச் சாவி என் பையில ஒண்ணு இருக்கு. நாங்க மதியம் வந்துடுவோம். நீங்களும் அநாவசியமா ஆபீஸிலிருந்து வர வேண்டாம்."

"நல்லவேளை ஞாபகப்படுத்தின!" என்றார் விஸ்வநாதன் முகமலர்ச்சியுடன்.

தம்பியை அணைத்தபடி பூர்வா பள்ளிப் பேருந்து வரும் இடம் நோக்கிச் செல்வதைத் திருப்தியுடன் விஸ்வநாதன் கவனித்துக் கொண்டிருந்தார்.

பாதித் தூரம் சென்றவள் விக்னேஷை நிறுத்தி வைத்துவிட்டு வீடு நோக்கி ஓடி வருவது அவர் கண்ணில் பட்டது. என்ன... பேனா, பென்சில் எதையாவது மறந்துவிட்டாளா?

யோசித்துக் கொண்டிருந்த விஸ்வநாதன் முன் மூச்சிரைக்க நின்ற பூர்வா, "அப்பா! போறதுக்கு முன்னால அடுப்பு, ஃபேன் ஸ்விட்ச் வரை ஆப் செய்திருக்கிறதா பாருங்கள். பூட்டை ஒரு முறை இழுத்துப் பாத்துக்குங்க.. அப்புறம்... மறக்காம உங்கள் இரத்தக் கொதிப்பு மாத்திரையைப் போட்டுக்குங்க" என்று கூறிவிட்டு ஓடினாள்.

கல்லாய்ச் சமைந்து நின்ற விஸ்வநாதனுக்கு மனைவி மங்களத்தின் அமைதியான பயணத்துக்கு எந்த நம்பிக்கையும் தைரியமும் உதவியது என்பது சற்று புரிந்ததுபோல் தோன்றியது....

●

குழந்தைத் தொழிலாளர் ஒழிப்பு தினத்தை முன்னிட்டு கடும் வெயிலில் பள்ளிச் சிறார்களை ஊர்வலமாக அழைத்துச் செல்வதற்குப் பதில் பெரியவர்களே அப்பிரசாரத்தை மேற்கொண்டிருக்கக் கூடாதா? (பள்ளிச் சிறார்களும் குழந்தைகள்தானே?)

- ஆர்.எஸ்.லக்ஷ்மி, கோவை-41.



# கல்வியாளர்கள் கவனிப்பார்களா?

எனது குழந்தைகள் சந்திரமுகி படத்தை சி.டி.யில் பலமுறை பார்த்ததாலோ (திருட்டு சி.டி. அல்ல படம் வந்து பல மாதங்கள் ஆகிவிட்டது) அல்லது மழையுடன் காற்று குளுகுளுவென வீசியதாலோ பட்டம்விட ஆசைப்பட்டு ஆர்வமுடன் பட்டம் தயார் செய்தார்கள்! பின்னர் காற்று வீசும்போது, மொட்டை மாடியில் இருந்துகொண்டு அந்தப் பட்டத்தை விடுகையில் என்ன சந்தோஷம்? என்ன உற்சாகம். ஆனால் படிக்கச் சொல்லும்போது இத்தனை உற்சாகம் வரமாட்டேன் என்கிறதே?

பெரியவர் களுக்கு பட்டம் விடுவதைத் தவிர வேறு வேலை இல்லா விட்டாலும் அவர்களால் அதனைச் சந்தோஷமாகச் செய்ய முடியாது. ஆனால் படித்தாக வேண்டிய கட்டாயத்தில் உள்ள மாணவர்களுக்கு விளையாட்டு என்றால் எத்தனை ஆர்வம்!



எனவே படிப்பையும் விளையாட்டைப் போல் சிறுவர்கள் ஆர்வமுடன் பங்கேற்கும் வகையில், நமது கல்வித் திட்டத்தில் மாற்றங்கள் கொண்டு வர வேண்டும்? அரசும் கல்வியாளர் களும் கவனிப் பார்களா?

- சு.செண்பக வல்லி, நாகர்கோவில்



# “நினைத்து நினைத்து சிலிர்த்தேன்!”

திருமணத்துக்கு முன்பே தமது வுட்பி ஜீவலக்ஷ்மியைப் பற்றி கவிதை பாடித் தீர்த்துவிட்டார் கவிஞரும் திரைப்பட பாடலாசிரியருமான நா.முத்துக்குமார். சரி, புதுப்பொண்ணு என்ன சொல்கிறார்? வெட்கம் தவழ தம் கண்ணாளனை நொடிக்கொருமுறை பார்த்துக்கொண்டே பேசினார்.

''நான் சென்னை சாலிகிராமப் பொண்ணு. எச்.எஃப்.டி.சி.யில வேலை. வாழ்க்கை அதுபாட்டுக்குப் போயிட்டிருந்தது. எனக்கு வீட்டுல மாப்பிள்ளை பார்த்திட்டிருந்தாங்க. ஒரு திருமண மையத்தில் ரெண்டு பேர் ஜாதகமும் பதிஞ்சு வைச்சிருந்தோம். அதைப் பார்த்துட்டு இவரு பிப்ரவரி 13-ம் தேதி என்னைப் பொண்ணு பார்க்க வந்தார். அப்போதிருந்து எனக்கு நடுக்கம் எடுக்க ஆரம்பிச்சிடுச்சு'' என்று தயக்கத்துடன் பேச ஆரம்பித்தார் ஜீவலக்ஷ்மி.

''அதுக்கு முன்னாடி அவரை டி.வியில கூட பார்த்தது கிடையாது. பயமா இருந்துச்சு. இவ்வளவு பெரிய கவிஞர். என்னைப் பிடிக்கலைன்னு சொல்லிடுவாரோன்னு வேண்டாத தெய்வம் இல்லை. பொண்ணு பார்க்க வந்த அன்னைக்கு ரெண்டு பேரும் மனம் விட்டுப் பேசினோம். எல்லாம் சுமுகமா முடிஞ்சுது. நிச்சய தார்த்தத்துல கூட்டம் அதிகமா இருந்ததால ரெண்டு பேரும் பேசிக்கலை. மன்மதன்ல அவர் எழுதின மாதிரி அன்னைக்கு 'மழை விட்டும் நான் நனைஞ்சேன்...!' பொதுவா நான் பாடல் வரிகளை அவ்வளவு உன்னிப்பா கவனிக்க மாட்டேன். ஆனா இவர் '7 ஜி ரெயின்போ காலனி' படத்துல எழுதின 'நினைத்து நினைத்து' பாடல் வரிகளைக் கேட்டு சிலிர்த்துட்டேன். 'அடடா என்ன வரிகள். பாட்டெழுதின கவிஞரைக் கட்டிக்கிறவங்க கொடுத்து வைச்சவங்க'ன்னு என் தோழிகள் கிட்டே சொன்னேன். ஆனா அதே கவிஞர் என்னை பொண்ணு பார்க்க வந்து மூணு முடிச்சுப் போடுவார்னு கனவிலும் நினைக்கலை'' என்றவருக்கு நா. முத்துக்குமாரிடம் பிடித்தது அவருடைய சினிமாத்தனமில்லாத குணம்.

''நான் ஸ்கூல்ல ஹிந்தி படிச்சவ. பெருசா தமிழ்ப்பற்று கிடையாது. ஆனா இப்போ அவரோட கவிதைகளைப் படிச்சு என் தமிழ் ஆர்வத்தை வளர்த்துக்கறேன். அவர் ரொம்ப அமைதியா, எளிமையா இருக்காரு. என்ன சீண்டினாலும் கோபமே படமாட்டேங்குறாரு.

அவர் எப்படி கல்யாணத்துக்கு முன்னாடி சுதந்தரமா இருந்தாரோ அதே மாதிரி இப்பவும் இருக்கலாம். வீட்டுச் சுமையை அவர் முதுகுல ஏத்த மாட்டேன்'' என்று கவிஞருக்கு ஒரு பெரிய்ய்ய உத்திரவாதம் அளிக்கிறார் ஜீவலக்ஷ்மி.

- பப்பி

# மங்கையர் மலர்

## திருமண மலர்

## பயனடைந்தவர்கள் பாராட்டு!



லாவண்யா - மகாதேவன்



டி.வி.ராஜாமணி,
வடசேரி,
நாகர்கோயில்

எனது மூத்த மகளின் திருமணம், மங்கையர் மலரின் திருமண விளம்பரம் மூலமாகத்தான் நடைபெற்றது. நான் கொடுத்திருந்த விளம்பரத்திற்கு, நிறையவே வரன்கள் வந்தன. அவற்றுள் எங்களுக்கு ஏற்ற வரனை தேர்ந்தெடுத்து, திருமணத்தையும் விமரிசையாக நடத்தினோம். இல்லங்களில் 'திருமணம்' என்ற 'ஒளிவிளக்கை' ஏற்ற, ஒரு தூண்டுகோலாக **'மங்கையர் மலர்'** அமைவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம். தங்களின் நற்பணி தொடர்ந்து நடைபெற எல்லாம் வல்ல இறைவனை பிரார்த்திக்கிறோம். **திருமணங்கள் மங்கையர் மலரால் நிச்சயிக்கப்படுகின்றன** என்பது எங்கள் நேரடியான அனுபவம்.

இப்படிக்கு,
டி.வி. ராஜாமணி,
வடசேரி, நாகர்கோயில்

### மங்கையர் மலரின்

# திருமண மலர்

### இணைப்பிதழ்

**திருமண மலர் புதிய விளம்பரக் கட்டண விவரங்கள்**

| | |
|---|---|
| முதல் முப்பது வார்த்தைகளுக்கு | ரூ. 500/- |
| 30க்கு மேற்பட்ட வார்த்தைகள் ஒவ்வொன்றுக்கும் தலா | ரூ. 15/- |
| வண்ணத்தில் 'ஹைலைட்' செய்ய கூடுதல் கட்டணம் | ரூ. 100/- |

**1"X1" அளவில் வண்ணப் புகைப்படத்துடன் 30 வார்த்தைகள் அடங்கிய விளம்பரத்துக்கு ரூ. 800/-**

(அதிகப்படியான வார்த்தை ஒவ்வொன்றுக்கும் ரூ. 15/-)

**வண்ணப் புகைப்படத்துடன் விவரங்கள் அடங்கிய அரை பக்க Profile விளம்பரம் ரூ. 2500/-**

*வாசகர்களும், விளம்பரதாரர்களும், இந்தப் புதிய மாற்றங்களைப் பயன்படுத்திக் கொண்டு, பலனடையுமாறு கேட்டுக் கொள்கிறோம்.* - ***பதிப்பாசிரியர், மங்கையர் மலர்.***

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.

# சரித்திர சாதனை!

'மனி லெண்டிங்' என்கிற கடன் கொடுக்கும் தொழிலே ஷைலக் காலத்திலிருந்து மாறிவிட்டது. மனிதாபிமானம் இல்லாத அந்த நாளிலிருந்து மிகவும் மாறிப்போய் விட்டது. பாங்க்கிங் என்பது பாதுகாப்புத் தருகிறது என்ற மேற்கத்திய எண்ணம் மெதுவாக நமக்கும் வந்தது.

மருத்துவத் துறையில் எப்படி படிப் படியாக மாற்றமும் முன்னேற்றமும் உண்டாயிற்றோ, அப்படியே 'பாங்க்கிங்'கிலும் புதிய மாற்றங்கள் வரத் தொடங்கிவிட்டன.

ஒரு சாதாரண மனிதன் அல்லது ஒரு விவசாயி அல்லது என்னைப் போன்ற நடிகன் என்றே வைத்துக் கொள்ளுங்கள். கஷ்டங்கள், சிக்கல்கள் வந்து சந்திக்க நேர்கிற போது, கனிவோடு செயல்படுவது வங்கிகளால் இன்று சாத்தியமாகி இருக்கிறது.

இருக்கிறதைச் சுருட்டிக்கொண்டு போகிற இந்தக் காலத்தில், உதவவும் பாதுகாக்கவும் இன்றைக்கு வங்கிகள் தானே இருக்கின்றன?

அன்றைக்குக் கவிதைகள் எழுதிப் புத்தகமாக வெளியிட பாரதி கஷ்டப் பட்டார். அன்றைக்கு அவருக்கு யாரும் உதவவில்லை. பாரதி காலத்தில், தமிழ் நாட்டில் கனரா பாங்க் இருந்திருந்தால் கஷ்டப்பட்டிருக்க மாட்டார்! அவர் ஆசைப்பட்டபடி புத்தகங்களை வெளியிட்டிருப்பார். சொந்தப் பத்திரிகையை நடத்தியிருப்பார்! அதுதான் மாறுபாடு.

நூறு ஆண்டுகளுக்கு முன் ஒரு மனிதர் நல்ல நோக்கங்களோடு ஆரம்பித்த ஒரு பாங்க், இன்றைக்கு அத்தனை சவால்களையும் தாண்டி வந்திருப்பதே ஒரு சரித்திரம். நூறாண்டுகள் ஒரு நிறுவனம் வாழ்ந்து வருவது பெரிய சாதனை! மகிழ்ந்து பாராட்ட வேண்டிய வேளை இது.

- நடிகர்
**கமல்ஹாசன்**
(பாரிஸ் நகரிலிருந்து தொலைபேசியில்)



# நூறு வருடப் பயணம்!

**பரபரப்பு மிகுந்த பணிகளும், 'மீட்டிங்'குகளும் இருந்தபோதும், தொடர்ந்து பார்வையாளர்களின் வரவுக்கு இடையில் நாம் எழுப்பிய கேள்விகளுக்கு விடை அளித்தார் கனரா வங்கியின் சேர்மனும் மேனேஜிங் டைரக்டருமான எம்.பி.என்.ராவ். பேட்டியிலிருந்து....**

***இந்திய வங்கிகளுக்கு இடையே, கனரா வங்கியின் நிலை எத்தகையது?***

"நிதி தொடர்பான சேவைகளில், கனரா வங்கி வலுவான அடித்தளத்தோடு இயங்கி வருகிறது. வாடிக்கையாளரின் நலனை மையமாகக் கொண்டும், கடன் வழங்கும் வணிக நிறுவனத்தின் கடமை உணர்வோடு செயல்படும் முதன்மையான வங்கியாக, எங்கள் வங்கி இன்று திகழ்கிறது. கடந்த மார்ச் 2006 வரையிலான வணிகம் ரூ.1,96,000 கோடியாக வளர்ந்து, தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளிலேயே முதல் இடத்தைப் பிடித்திருக்கிறது. இதே ஆண்டு நிகர லாபமும் ரூ.1343 கோடியாக உயர்ந்திருக்கிறது. வங்கி நூற்றாண்டு விழா கொண்டாடும் இந்த ஆண்டில் இவ்வளவு நிகழ்ந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இந்தச் செயல்பாட்டை மேலும் முன்னெடுத்துச் சென்று, இன்னும் அதிக ஈடுபாட்டுடன் நிதி தொடர்பான சேவைகள் எல்லாவற்றையும் அளித்து, வங்கியின் வாடிக்கையாளர்கள் அத்தனை பேரையும் திருப்தி செய்வதுதான் எங்கள் இலட்சியம்."



• எம்.பி.என்.ராவ்

***நூற்றாண்டு கொண்டாடும் சமயத்தில், என்ன புதிய திட்டங்கள் வைத்திருக்கிறீர்கள்? வரும் பத்து ஆண்டுகளுக்கான திட்டங்கள் என்னென்ன?***

"நூறு வருடங்களைக் கடந்து வந்து, இந்திய வங்கிகளிலேயே முதல் இடத்தைப் பிடித்திருப்பது சாதாரணம் அல்ல! தொடர்ந்து உயர்வான சேவை, உறுதியான அடிப்படைகள், சமுதாய நலனுக்குத் தேவையான அர்ப்பணிப்பு உணர்வு, வாடிக்கையாளரின் முழு திருப்தி - இவற்றை எண்ணிப் பார்க்கிறபோது பெருமையாகவே இருக்கிறது. நூறு வருடங்களுக்கு முன், பெரியவர் சுப்பராவ் பய் அவர்கள் விவேகத்துடன் வித்திட்டது, இன்று பெரிய ஆலமரமாக வளர்ந்து 2530 கிளைகளுடன் விரிந்து பரவி, இந்தியா மட்டுமல்லாமல், அயல்நாடுகளிலும் நிலைத்து நின்று, சுமார் 27 மில்லியன் வாடிக்கையாளர்களைப் பெற்றிருப்பது ஒரு சாதனை.

இந்த நூற்றாண்டு விழா நிகழ்ச்சியை, மத்திய நிதி



அமைச்சர் மாண்புமிகு ப.சிதம்பரம் பெங்களூரில் துவக்கி வைத்தார். இதன் அலைகள் நாடு முழுவதும் பரவி, தேசம் பயன்பெற, வங்கி மேற்கொண்ட சில பணிகள் -

• ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு கிராமத்துக்குக் கட்டமைப்பு வசதியை அளிப்பது.

• 100 கிராமப்புறப் பள்ளிகளை




மேம்படுத்துவது.

• சமுதாய நோக்கோடு ஒவ்வொரு வங்கிக் கிளையும் செயல்படுவது.

• பெங்களூர் சேவக்க்ஷேத்ரா மருத்துவமனையில் சூப்பர் ஸ்பெஷாலிட்டி ப்ளாக் கட்டிக் கொடுப்பது.

• நாட்டின் மிகச் சிறந்த கிரிக்கெட் ஆட்டக்காரர்களைக் கொண்டு, கனரா பாங்க் இன்விடேஷன் சென்டினரி கிரிக்கெட் சாம்பியன்ஷிப் போட்டி நடத்தியது.

• கன்னட இசையில் மிகச் சிறந்த திறமைசாலிகளைக் கண்டுபிடிக்கும் நிகழ்ச்சிக்கு ஆதரவு தருவது.

**தொலைநோக்கு 2010 என்ற, இப்போது நடைமுறையில் இருக்கும் வங்கியின் கொள்கைகளின்படி, கனரா வங்கி உலக அளவில் உயர்நிலையை எட்டி, எல்லா வகை நிதி சேவைகளிலும் முதலிடத்தை அடைவது என்பதுதான் இந்தப் பத்தாண்டு கால செயல்பாட்டுத் திட்டம்."**

**உங்கள் அயல்நாட்டுக் கிளைகளின் சிறப்பு அம்சம் என்ன? உடனடி 'ரெமிட்**



**டன்ஸ்' வசதி உண்டா?**

"கனரா வங்கியின் அயல்நாட்டுக் கிளைகள், பிரதிநிதி அலுவலகங்கள் தவிர, 94 நாடுகளில் 537 வங்கிக் கிளைகளுடன் தொடர்பு வைத்திருக்கிறோம். மத்திய கிழக்கு நாடுகளில் வசிப்போரின் வசதிக்காக, இங்கே ரூபாய் கரன்சி பெறும் வகையில் 20 எக்ஸ்சேஞ்சுகளும், 18 வங்கிகளும் எங்கள் சார்பாகச் செயல்படுகின்றன. க்வட்டாரிலும், துபாயிலும் இப்போது எக்ஸ்சேஞ்ச் நிலையங்கள் இயங்குகின்றன. இந்த ஆண்டு எலக்ட்ரானிக் ஃபண்ட் டிரான்ஸ்ஃபர் முறையை, ஐந்து எக்ஸ்சேஞ்சுகள் / வங்கிகள் மூலமாக அளித்து, அதிவேகமாகப் பணம் அனுப்பும் வசதியை அளித்திருக்கிறோம். இதுதவிர, வெஸ்டர்ன் யூனியன் மணி



டிரான்ஸ்ஃபர் மூலமாகவும் பணம் பெறும் வசதியை அறிமுகப்படுத்தி இருக்கிறோம்."

**உங்கள் அந்நிய நாட்டுக் கிளைகள் மூலம், நம் நாட்டுக்கு என்ன பயன்கள் கிடைக்கும்?**

"நாடுகளுக்கு இடையே வணிகமும், அந்நியச் செலாவணியும் இந்த நிதிப் பரிமாற்றங்கள் வாயிலாக நடைபெறும் போது, தேசிய அளவில் பொருளாதார வளர்ச்சி நிகழ்கிறது. கனரா வங்கியின் அயல்நாட்டுக் கிளைகள் இந்த நோக்கில் செயல்படும்போது, தடைகள் ஏதுமின்றி, துரிதமாக நிதி பரிவர்த்தனை நடைபெறுகிறது. இது நாட்டுக்கு மிகவும் நல்லது."



**சிறிய மற்றும் நடுத்தரத் தொழில்களை எப்படி ஊக்குவிக்கிறீர்கள்?**

"நம் நாட்டில் இவ்வகைத் தொழில்கள் வெகு வேகமாக வளர்ந்து வருகின்றன. கனரா வங்கி, இந்த வளர்ச்சியில் முழு ஈடுபாட்டுடன் பங்கெடுத்து வந்திருக்கிறது. இதை இன்னும் விரிவுபடுத்த, ஒவ்வொரு நகர்ப்புற மற்றும் வளரும் - நகர்ப்புறக் கிளை மூலமாகவும் ஐந்து சிறு மற்றும் மத்தியதரத் தொழில்களுக்கு குறிப்பாக உதவுகிறோம். வட்டி விகிதத்தில் சலுகைகள் காண்பிக்கிறோம். விருதுகள் அளிப்பது, முகாம்கள் நடத்துவது, புதிய கண்டுபிடிப்புகள் அல்லது தயாரிப்புகளை அறிமுகப்படுத்துவது எல்லாம் இதில் அடங்கும். இவ்வகைத் தொழில்களுக்கு 2005-06ல் கடனளிப்பு 21 சதவிகிதம் உயர்ந்தது. இந்த ஆண்டு இது 30 சதவிகிதம் உயரும்."

**வறுமை ஒழிப்புத் திட்டங்களில் உங்கள் வங்கியின் பங்கு என்ன? குறிப்பாக, தொழில் முனைவோர் மேம்பாட்டுத் திட்ட மையம் வாயிலாக?**

"தேசிய நலனைக் கருத்தில் கொண்டு, கனரா வங்கி பல திட்டங்கள் வகுத்துச் செயல்பட்டு வருகிறது. இவை வறுமை ஒழிப்புத் திட்டம் குறித்தவையே. குறிப்பாக, சுய வேலைவாய்ப்பு வசதிகள். PMRY, SJSRY, SGSY, SLRS, DRI முதலிய அரசுத் திட்டங்கள் மூலமாக, வசதியற்ற மற்றும் ஏழை எளிய சமூகத்தினருக்கு உதவி வருகிறோம். சுய உதவிக் குழுக்களுக்கு நேரடி உதவி செய்வதில் கனரா வங்கி முன்னோடியாக இருக்கிறது. மகளிர் தொழில் முனைவோர் துறையிலும், வங்கி தன் மையங்கள் வாயிலாகப் பெரிதும் உதவுகிறது. இவை தவிர, மூன்று மகளிர் வங்கிக் கிளைகள் மகளிருக்காக மட்டுமே நடத்தப்படுகின்றன. சமூக நலனை நோக்கமாகக் கொண்டு சுய வேலை வாய்ப்புப் பயிற்சி நிலையங்களையும் நடத்தி வருகிறது. இவை கிராமப்புற இளைஞர்களுக்கும் மகளிருக்கும் வேலை வாய்ப்பு அளிக்கின்றன. இதற்காக விருதுகளும் கிடைத்துள்ளன."

**நூற்றாண்டு விழா கொண்டாடும் சமயத்தில், வாடிக்கையாளர்களுக்கும் வாசகர்களுக்கும் உங்கள் செய்தி என்ன?**

"இந்திய வங்கிகளிடையே ஓர் உன்னத இடத்தைத் தக்க வைத்துக்கொள்ள வேண்டும். உலகளாவிய வங்கி என்ற நோக்கோடு தொடர்ந்து செயல்பட வேண்டும். 'மேன்மேலும் சிறப்பாகச் செயலாற்றுவது' என்பது, கனரா வங்கி ஆரம்பித்த நாளில் இருந்தே நோக்கமாக இருந்து வந்திருக்கிறது. இதை இனி வருங்காலத்திலும் நிரந்தரமாக நிலை நிறுத்தவே ஒவ்வொரு முயற்சியையும் நாங்கள் மேற்கொள்வோம்!"



# மக்கள் வங்கி!



சிநேகமான சேவை இருக்கட்டும். தகுதியான தலைமை வேண்டுமல்லவா? அது கனரா வங்கிக்குத் தொடர்ந்து கிடைத்து வருகிறது. அதுதான் அந்த வங்கியின் வளர்ச்சிக்கு முக்கிய காரணம்.

'மைக்ரோ - லெண்டிங்' அவசியம். வெளிநாட்டு வங்கிகளும்கூட அதில் அக்கறை காட்டுவது, அதில் கிடைக்கிற லாபத்துக்காகத்தான். கிராமப் புறங்களில் கனரா வங்கி இருப்பதால், கிராமப்புற மக்களுக்குச் சிறு கடன்கள் கொடுப்பது சாத்தியமாகி இருக்கிறது.

எளிய மக்களுக்குக் கடனுதவி அளித்து, அவர்களை சொந்தக் காலில் நிற்கச் செய்கிறது. வீட்டுக் கடன் வசதி ஆகட்டும், தொழில் துறைக் கடன் வசதி ஆகட்டும், கனரா வங்கியின் செயல்பாடு சிறப்பாகவே இருக்கிறது. இதை 'பாலன்ஸ்டு லெண்டிங் போர்ட்ஃபோலியோ' என்று சொல்லலாம்.

கடனுதவிகளில் முதல் இடம் பெறும் 'ப்ரையாரிட்டி லெண்டிங்' விஷயத்திலும் இந்த வங்கி இலக்கை எட்டிவிட்டது எனலாம். மூத்த குடிமக்கள் பெருகி வருகிறார்கள். இவர்கள் ஆண்களாகட்டும், பெண்களாகட்டும் - வங்கிக்கு வந்து போக சிரமப்படுகிறார்கள். பணம் போடவும், எடுக்கவும் இவர்களுக்குத் தனி வசதி செய்தால், அது பயனுள்ளதாக இருக்கும்.

- முன்னாள் SEBI தலைவர்
ஜி.வி.ராமகிருஷ்ணா,
ஐ.ஏ.எஸ்

முதல்ல சொல்ல வேண்டியது, நல்ல கவனிப்பு. அதனாலயே பாவா தெருவிலிருந்து ராயப்பேட்டைக்கு வீடு மாத்தியும்கூட, நாங்க எங்க அக்கவுண்ட்டை மாத்தலே! இருபது வருஷத்துக்கு மேல, கணக்கு வச்சிருக்கோம். குடும்ப விசேஷம், ஒரு அவசரம்னா உடனே ஹெல்ப் பண்ற பாங்க். 2000-ல கார் லோன் வாங்கினோம். அப்ளை பண்ணின உடனே பிராசஸ் பண்ணி, இரண்டே நாளில் பணத்தைக் கொடுத்துட்டாங்க!

- நடிகை எம்.என்.ராஜம்,
பின்னணிப் பாடகர்
ஏ.எல்.ராகவன்







"நான் முதலில் ரானே லிமிடெட் நிறுவனத்தில்தான் வேலை செய்து கொண்டிருந்தேன். அப்போது கனரா வங்கி அபிராம புரம் கிளை மானேஜர் ராதா கிருஷ்ணன், "நீங்கள் சொந்தமாகத் தொழில் தொடங்கலாமே? வங்கி உங்களுக்கு நிச்சயம் உதவும்!" என்றார். மாதா மாதம் ஒழுங்காகச் சம்பளம் வந்து கொண்டிருக்கும் வேலையை விட்டுவிட, முதலில் பயமாகத்தான் இருந்தது. 'உங்களுக்கு வங்கி சப்போர்ட் பண்ணும்' என்ற மந்திர வார்த்தைதான் என்னை உசுப்பிவிட்டது. 1988-ல் சிறிய கம்பெனியாக ஒரே ஒரு லேத் மட்டும் போட்டு, ஆரம்பித்தேன்.

• நித்யானந்தம்...



• ...பெற்ற விருதுகள்!

# வெற்றிக்கு வித்திட்ட மந்திர வார்த்தைகள்!

பத்து லட்ச ரூபாய் முதல் கடன் உதவியாகக் கொடுத் தார்கள். ஒரு ஹெச்.எம்.டி மெஷின் வாங்கி, ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரி அளவில் தொடங்கினேன். அப்போது யாரிடமும் அந்த மெஷின் இருக்க



வில்லை'' என்கிறார் டி.என்.நித்யானந்தம்; பவானி இன்ஜினீயரிங் கம்பெனி அதிபர்.

"ஆரம்ப காலத்தில் ரானே, டாஃபே, சுந்தரம் ஃபாஸனர்ஸ் மூவருக்குமே ஷட்டில் உதிரி பாகங்களைத் தயாரித்துக் கொடுத்திருக்கிறேன். பிறகு ஸ்பேர் கபாசிட்டி இல்லாததால், மற்ற இரண்டு கம்பெனிகளை விட்டுவிட்டு, சுந்தரம் ஃபாஸனர்சை மட்டும் வைத்துக் கொண்டேன். அவர்கள் 91-ல் ஒரு ஹெச்.எம்.டி மெஷினை எனக்கு லீசுக்குக் கொடுத்தார்கள். மிகக் குறைந்தபட்ச சலுகையாக ரூ.100தான் பெற்றுக் கொண்டார்கள்! என்னுடைய வேலையில் அவர்கள் அடைந்த திருப்தி காரணமாக 93-ல் இன்னொரு மெஷின் வாங்கிக் கொடுத்தார்கள். இதனால் தொழிலை விரிவு படுத்த முடிந்தது. சுந்தரம் ஃபாஸனர்ஸ் சேர்மனுக்கும் நான் நன்றி சொல்ல வேண்டும். வங்கியில் தேவைக்கு மேல் நானும் கடன் வாங்கவில்லை. என் வியாபாரம் நன்றாக நடந்தது. ஒரு லட்ச ரூபாய் ஓ.டி. கொடுத்தார்கள்.

''வீடு கட்டிக்கொள்ள முதலில் எட்டு லட்ச ரூபாய் லோன் தந்தது கனரா வங்கி. பிறகு மேல் தளம் கட்டவும் கடன் உதவி செய்தார்கள். பாங்க்தான் என்னை வளர்த்தது. எந்த மேனேஜர் வந்தாலும் என் வளர்ச்சியில் அக்கறை கொண்டவராகவே இருந்தனர். இரண்டு வருடங்களுக்கு முன்பு சி.என்.சி. மெஷின் வாங்க 20 லட்ச ரூபாய் லோன் கொடுத்தார்கள்.

இப்போது சுந்தரம் ஃபாஸனர்ஸ் மட்டுமே என் வாடிக்கையாளர். 2004-ல் பெஸ்ட் க்வாலிட்டி சப்ளையர் அவார்டு கொடுத்தார்கள். அதற்கு முன்னால் 2003-ல் ISO-9000 சர்ட்டிபிகேட்டும் அவர்களே எனக்கு வாங்கிக் கொடுத்தார்கள். இதற்காக கனரா வங்கியே எனக்கு ரூ.25000/- வெகுமதி கொடுத்துப் பாராட்டினார்கள்! இது எனக்கு வங்கியால் கிடைத்த மிகப்பெரிய கௌரவம்.''

# தேவை அறிந்து...

"அப்பாவின் சகோதரரின் அறக்கட்டளை அக்கவுன்ட், அம்மாவின் அக்கவுன்ட், என் கணவரின் அக்கவுன்ட், என் சகோதரன் அருண் பத்மநாபன் நினைவு அறக்கட்டளை அக்கவுன்ட் என்று எல்லாமே நாங்கள் கனரா வங்கியில்தான் வைத்திருக்கிறோம். லாக்கரும் அங்கேதான்!

நாங்கள் மட்டும்தான் என்று இல்லை, எங்களிடம் வேலை பார்ப்பவர்களுக்கும் கனரா வங்கியில்தான் கணக்கு! சேமிப்பில் அக்கறை இருக்க வேண்டும் என அவர்களிடம் வலியுறுத்துவோம்.

தேவை அறிந்து உடனடியாக வங்கியில் செயல்படுவார்கள். அதிலும் வாடிக்கையாளர்களைக் கைவிடாத சேவை! எந்த சந்தர்ப்பத்திலாவது செக் விஷயமாக ஏதேனும் சந்தேகம் வந்துவிட்டால், உடனடியாக நம்மைத் தொடர்பு கொண்டு செயல்படும் தனிப்பட்ட 'பர்சனல் டச்' இவர்களிடம் எப்போதும் உண்டு. இப்படித் தனிப்பட்ட முறையில் கவனம் செலுத்த வங்கி இருக்கும்பொழுது, நமக்குப் பிரச்னை எதுவும் இல்லை, கவலையும் இல்லை!''

- சித்ரா விச்வேச்வரன்





# ஓர் ஆலமரம் வளர்ந்த கதை!

கர்நாடக மாநிலத்தில் அம்மேம்பல் ஒரு சிற்றூர். அங்கே பிறந்த சுப்பராவ் பய் என்ற தனி மனிதர், ஜூலை 1, 1906-ல் மங்களூரில் கனரா ஹிந்து பர்மனென்ட் ஃபண்ட் என்ற வங்கியை ஆரம்பித்தபோது, அவர் விருப்பம் என்னவென்று தெரியுமா?

* மூடநம்பிக்கையையும், அறியாமையையும் அகற்றுவது.
* இதைச் சாதிக்க, கல்வியறிவைப் பரவலாக்குவது.
* சேமிப்புப் பழக்கத்தை வளர்ப்பது.
* ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் நிதி நிறுவனமாக அல்லாமல், முழுச் சமுதாயத்தின் நிதி நிறுவனமாக இயங்குவது.
* தேவைப்பட்டவருக்கு உதவுவது.
* சேவை மனப்பான்மையுடனும், அர்ப்பணிப்பு உணர்வுடனும் பணி செய்வது.
* மனித சமுதாயத்தின் மேன்மைக்காக அக்கறையோடு உழைத்து, சூழலை உணர்ந்து, துன்பங்களையும் துயரங்களையும் களையப் பாடுபடுவது. சுப்பராவ் பய் அவர்களின் நோக்கமெல்லாம் சமுதாயத்துக்கு உதவுவது மட்டும்தான்!



சுப்பராவ் பிறந்த தேதி நவம்பர் 19, 1852. மூன்று மூத்த சகோதரர்கள். இவர்தான் கடைக்குட்டி. மங்களூரை அடுத்த மூல்கி என்ற கிராமத்தில், ஒற்றை ஆசிரியர் திண்ணைப் பள்ளிக்கூடத்தில்தான் படிப்பு. அவருக்குப் பன்னிரண்டு வயதாக இருக்கும்போது, தாயார் காலமானார். மூத்த அண்ணா நாராயண் பய்யின் மனைவி ருக்மிணியம்மாவின் அரவணைப்பிலும் ஆதரவிலும் வளர்ந்தார் சுப்பராவ். வீட்டில் ஒழுங்கும் கட்டுப்பாடும் கடுமையாகக் கடைப்பிடிக்கப்பட்டன. பிறகு குடும்பம் மங்களூருக்குக் குடிபெயர்ந்ததும், அங்கே இருக்கிற கதிரி மஞ்சுநாதர் கோயிலுக்குத் தினசரி போய், அங்குள்ள குளத்தில்தான் சுப்பராவ் குளித்துவிட்டு வருவார்! கட்டுக் குடுமியை அழகாகப் பின்னிவிட்டுக் கொள்வார். அவர் படித்த ப்ரொவின்ஷியல் பள்ளி, பிறகு அரசுக் கல்லூரியாயிற்று. பதின்மூன்று வயதில் கல்வியில் மிகுந்த ஆர்வம் கொண்ட சுப்பராவ், டபுள் புரமோஷன் பெற்று, பதினெட்டு வயதில் படிப்பை முடித்தார்.



பி.ஏ. தேறிய உடனேயே அவரைப் பல்கலைக்கழக கன்னட மொழி எக்ஸாமினராக, நியமித்துவிட்டார்கள். கன்னட மொழியில் அப்படி ஒரு கெட்டிக்காரர்! அப்படியே சென்னை சட்டக் கல்லூரியிலும் சேர்ந்தார் சுப்பராவ்.

அந்த வருட பி.எல். தேர்வில், முதல் வகுப்பில் முதலாவதாக வந்தார். சுப்பராவ் மேற்கொண்டு சட்டப் படிப்பைத் தொடர இங்கிலாந்து செல்ல வேண்டும் என்று விரும்பினாலும், சுப்பராவின் குடும்பத்தில் அதற்குச் சம்மதம் தெரிவிக்கவில்லையாம். அப்ரென்டிஸ் எனப்படும் பயிற்சியாளராக பிரபல வழக்கறிஞர் ஹெச்.ஹெச்.ஷெப்பர்டு என்பவரிடம் சுப்பராவ் சேர்ந்தார்.

ஆனால் அதற்குள் மங்களூரில் தந்தையார் மரணம் நேரவே, நேரே அங்கே விரைந்தார் சுப்பராவ். மங்களூரிலேயே வழக்கறிஞர் தொழிலைத் தொடங்கினார். நற்பெயர் பெற்றிருந்ததால், சுப்பராவ் விரைவிலேயே புகழ் வாய்ந்த வழக்கறிஞராக ஆனார். ஆனால் கிரிமினல் வழக்குகளை மட்டும் எடுத்துக் கொள்வதில்லை என்பதில் உறுதியாக இருந்தார். ஊரில் 30 வக்கீல்கள் இருந்தாலும், இவர் மட்டும்தான் பி.ஏ.பி.எல். எனவே அவருக்கு நிறைய வழக்குகள் வந்துகொண்டே இருந்தன. அவருடைய வாதத் திறமையும், சரளமான ஆங்கிலப் புலமையும் எல்லோரையும் அயர வைத்தன. கன்னட இலக்கியங்களையும், ஆங்கில நூல்களையும் ஒன்று விடாமல் படித்து விடுவார்.

சமஸ்கிருத மொழியில் அவருக்கு ஆர்வம் இருந்தது போலவே, இசையிலும் அவருக்கு ஆர்வம் இருந்தது. ஒருமுறை பவஞ்சே

**• சுப்பராவ் பய்**







• 1965-ல் கொச்சியில் நடந்த கனரா வங்கி கண்காட்சியில் இந்திரா காந்தி...

லட்சுமி நாராயணப் பையா என்ற கலைஞரின் ஹரிகதை நிகழ்ச்சியைக் கேட்டு அசந்து போய், அவரைத் தம் வீட்டுக்கு அழைத்து வந்து சன்மானம் கொடுத்து மரியாதை செய்தாராம்.

அதேபோல, புரந்தர தாசர் பாடல்களில் அவருக்கு ரசனையும் ஈடுபாடும் இருந்தன. தம் உறவினரான புருஷோத்தம் ஹெக்டேவை வீட்டுக்கு அழைத்து வந்து தாசர் பாடல்களைப் பாடச் சொல்லிக் கேட்பாராம். அதுபோல, ஆங்கிலக் கவிதைகளிலும், குறிப்பாக ஷேக்ஸ்பியரின் படைப்புகளிலும் அசாத்திய ஈடுபாடு அவருக்கு இருந்தது.

ஆங்கிலேய ஆட்சியை வெறுத்த சுப்பராவுக்கு, மகான் அரவிந்தரின் மீது மிகுந்த மரியாதை இருந்தது. யாரிடமிருந்து கடிதம் வந்தாலும், 24 மணி நேரத்துக்குள் அதற்குப் பதில் எழுதி அனுப்பி விடுவார். தம்முடைய ஒரு தமையனார் பணக் கஷ்டத்தில் சிக்கிக் கொண்டபோது, அவருக்கு உடனடியாக உதவினார். அதனால் இன்னொரு தமையன் தவறாக நினைத்துக் கொள்ளக் கூடாது என்பதற்காக, தம் அலுவலக அறையில் பணப் பெட்டியைப் பூட்டாமல் திறந்தே வைத்திருப்பதாகவும், அவர் எப்போது வேண்டுமானாலும் வந்து எத்தனை தொகை வேண்டுமானாலும் எடுத்துச் செல்லத் தயங்க வேண்டாம் என்று கூறினாராம்!

**'ஊரில் 30 வக்கீல்கள் இருந்தாலும் அவர் மட்டும்தான் பி.ஏ.பி.எல்!'**

சுப்பராவ் ஆரம்பித்து வைத்த அமைப்புகளும், கல்வி நிலையங்களும் கனரா மகளிர் பள்ளி, கனரா ஹாஸ்டல் என்று நிறைய வளர்ந்தன. கனரா உயர் நிலைப் பள்ளி பிரமாதமாகச் செயல்பட்டு வந்தது. மகாத்மா காந்தியின் ஆசிகளைக் கூடப் பெற்றது! அன்னிபெசன்ட் அம்மையார் மங்களூருக்கு வந்தபோது, அவரை வரவேற்று மக்களுக்கு அறிமுகப்படுத்தியவர் சுப்பராவ்.

1906-ஆம் ஆண்டு, கனரா ஹிந்து பர்மனென்ட் ஃபண்ட் என்ற பெயரில் வங்கியைத் துவக்கினார். அதுதான் பிறகு கனரா வங்கி என்று மாற்றம் பெற்றது. ஆனால் அவர் உடல் நிலை அடிக்கடி மோசமாயிற்று. நீதிமன்றத்தில் பேசிக் கொண்டிருக்கும்போதே அவர் இடுப்பிலும், முழங்கால் முழங்கைகளிலும் வலி அதிகமாகி, வீடு திரும்பினார். இது நடந்தது ஜூலை 17, 1909. மகன் பாலகிருஷ்ண பய்க்குத் தந்தி அனுப்பப்பட்டது. 25-ஆம் தேதி மஞ்சேஷ்வர் கோயிலில் இருந்து நண்பர்கள் பிரசாதம் கொண்டு வந்து கொடுத்தனர். முதியவர்



ஒருவர் கால்களைப் பிடித்து விட்டார்.

பகல் பன்னிரண்டு மணி அளவில் நிலைமை மோசமாயிற்று. ஒரு பெண் கீதை படிக்கத் தொடங்கினாள். தலைமையனார், "ஏதும் சொல்ல விரும்புகிறாயா?" என்று கேட்டார்.

"நாராயணா!" என்றார் சுப்பராவ். தொடர்ந்து திரும்பத் திரும்பச் சொன்னார். சுற்றியிருந்த உறவினர்களின் கண்களில் கண்ணீர். மெல்ல அவர் குரல் அடங்கியது. மூச்சும்தான். அப்போது அவருக்கு வயது 57.



**1906**-ல் கனரா வங்கி தோன்றினாலும் அதற்கான ஆரம்ப வேலைகள் 1904-லேயே தொடங்கப்பட்டுவிட்டன. இதற்கு முன்னால் 1894-ல் சில வழக்கறிஞர்கள் மதுரையில், மதுரை ஹிந்து பர்மனென்ட் ஃபண்ட் லிமிடெட் என்ற நிதி நிறுவனத்தை வெற்றிகரமாக நடத்தி வந்தார்கள்.

சுப்பராவ் மதுரை நிதி நிறுவனத்தின் சட்ட திட்டங்களை கவனமாகப் படித்துப் பார்த்தார். அவையே கனரா நிதி நிறுவனத்துக்கும் அடிப்படை ஆயின. நண்பர் ராமராவுடன் சேர்ந்து, தங்கள் ஊர் மக்களின் தேவையை உணர்ந்து, கனரா நிதி நிறுவனத்தைத் தொடங்கினார். அப்போது வங்கிகளில் 15 முதல் 20 சதவிகித வட்டி வசூலிக்கப்பட்ட போதும், 10 சதவிகித வட்டியே போதும் என்று சுப்பராவ் தீர்மானித்தார்.

ஐம்பது ரூபாய் ஷேர்கள் 2000, மங்களூரின் வழக்கறிஞர்கள், வணிகர்கள், நிலக் கிழார்கள், ஆசிரியர்கள் ஆகியோருக்கு வழங்கப்பட்டன.

ஜூலை 1, 1906 அன்று கூடிய முதல் டைரக்டர்கள் கூட்டத்தில், தலைவரையும், பொருளாளரையும் தேர்ந்து எடுத்தார்கள். செயலர் தன் கட்டுப்பாட்டின் கீழ் வங்கியின் செயல்களைக் கண்காணிக்க வேண்டும்.

**சி**றிய, வாடகைக் கட்டடம் ஒன்றில் தான் கனரா வங்கி செயல்படத் தொடங்கியது. முகவரி: 75-எ, டொங்கர் கேரி தெரு, மங்களூர். வாடகை ரூ.120. மாதத்துக்கு அல்ல, வருடத்துக்கு! மிக அவசியமான அளவுக்கே மேசை நாற்காலிகள். நாலே ஊழியர்கள்தாம். ஒருவர் செயலாளர், ஒருவர் குமாஸ்தா, இரண்டு பேர் பில் கலெக்டர்கள். மொத்த மாதாந்திரச் செலவு 45 ரூபாய். மழைக்காலம் தொடங்கி விட்டதால் பிஸினஸ் மோசமாகவே இருந்தது. நவம்பர் மாதத்துக்குப் பிறகுதான் சூடு பிடித்தது.






வைப்புநிதி வைக்கிறவர்கள் அதிகரித்தார்கள். கடன் கேட்பவர்கள் எண்ணிக்கை உயர்ந்தது!

1912-ல், செயலாளரின் சம்பளம் எவ்வளவு தெரியுமா? 75 ரூபாய்! மூன்று கிளார்க்குகளுக்கு முறையே ரூ. 35, 25, 20தான் மாதச் சம்பளம்! பில் கலெக்டருக்கு ரூ.10. பியூன்களுக்கு 8 ரூபாய்! வாட்ச்மேன் சம்பளம் உட்பட மாதப் பட்டுவாடா ரூ.208தான்!

வங்கிக்கு வர வேண்டிய பணம் குறிப்பிட்ட தினத்தில் வரவில்லை என்றால், டைரக்டரே நேரிடையாகப் போய் நபரை நேரில் சந்தித்து, தாமதிக்காமல் பணத்தைக் கட்டிவிடச் சொல்லுவாராம்! நீதிமன்றத்துக்குப் போகாமல், கொஞ்சம் விட்டுப் பிடித்து, கடனை வசூல் பண்ணியதும் உண்டு. அங்கே எல்லாம் மனிதாபிமானம் முக்கியப் பங்கு வகித்திருக்கிறது. வங்கி செயல்பட்டு வந்த விதம், எந்தக் குற்றம் குறைக்கும் இடம் கொடுக்காமல், இயங்கியதுதான் சிறப்பு.

**'நான்கே ஊழியர்கள்; வாடகை வருடத்துக்கு நூற்றியிருபது ரூபாய்!'**

1938-ல், 'வங்கிகள் தாமாக முன்வந்து, தங்கள் கணக்குகளை ரிசர்வ் வங்கி தணிக்கை செய்ய வேண்டும் என்று வேண்டுகோள் விடுப்பது நல்லது' என்று அன்றைய சென்னை ராஜதானி பிரதமர் ராஜாஜி கூறியதும், கனரா வங்கிதான் முதன் முதலாக, எந்தவிதத் தயக்கமும் இன்றி இந்த யோசனையை ஏற்றுக் கொண்டதாம்!

1961 முதல் 1968 வரை, கனரா வங்கி பத்து தனியார் வங்கிகளை இணைத்துக் கொண்டது. இதில் சில வங்கிகளுக்கு ஒரே ஒரு கிளைதான்! இவற்றில், மதுரை பாண்டியன் வங்கிக்குத்தான் அதிகபட்சமாக 83 கிளைகள் இருந்தன. ஆகஸ்ட் 24, 1985-ல், லக்ஷ்மி கமர்ஷியல் பாங்கை கனராவங்கி எடுத்துக் கொண்டது. லக்ஷ்மி பாங்குக்கு அப்போது 230 கிளைகள் இருந்தன. சுமார் 3500 ஊழியர்கள் பணிபுரிந்தனர். ஆனால் இந்த இணைப்பு வெகு இயல்பாக நடந்து முடிந்தது. வடக்கில்தான் இந்த வங்கிக்குக் கிளைகள் அதிகம் என்பதால், ஒரு புதிய சர்க்கிள் அலுவலகத்தை தில்லியில் துவங்க வேண்டியதாயிற்று.

1975-ல், பிரதமரின் 20 அம்சத் திட்டக் கொள்கை அறிவிப்புச் செய்தபோதும், கனரா வங்கி அந்தச் செயல்பாடுகளில் மிகுந்த அக்கறை காண்பித்தது. அன்றைய மத்திய அரசின் நிதித் துறையிடம் பாராட்டும் பெற்றது.



CANARA BANK CANARA BANK CANARA







# கனரா வங்கி தரும் கடன் வசதிகள்...

தனி வாடிக்கையாளர் எனப்படும் 'ரீடெய்ல்' துறையில் கனரா வங்கி அளிக்கும் கடன் வசதிகள் என்னென்ன தெரியுமா?

* ஹவுசிங் லோன் - சொந்த வீடு / குடியிருப்பு வாங்க.
* ஹோம் இம்ப்ரூவ்மென்ட் லோன் - வீட்டை அலங்கரிக்கவும் வசதிகளை அதிகரிக்கவும்.
* கேன் மொபைல் - புதிய அல்லது பழைய கார் வாங்க.
* கேன் ரென்ட் - வீட்டை வாடகைக்கு விட்டிருப்பவர்கள், வருங்கால வாடகை வருமான அடிப்படையில் கடன் பெற.
* கேன் சைட் - வீட்டு மனை வாங்க!
* கேன் வேல்யூ - நீண்டநாள் வாடிக்கையாளர்களுக்கு மட்டுமே.
* கேன் ட்ரேட் - பல துறைகளிலும் இருக்கும் வாடிக்கையாளருக்கு உதவ.
* கேன் ஜுவல் – திருமணச் செலவுகளுக்கும், தங்க நகைகள் வாங்கவும்.
* கேன் மஹிளா - மகளிர் மட்டுமே தங்கள் தேவைக்கு வாங்க.
* கேன் டிராவல் - இந்தியாவில் அல்லது வெளிநாடுகளில் பயணம் செய்யும் உதவிக்கு.
* கேன் டெக் - ஐ.டி. மற்றும் பயோ டெக்னாலஜி துறைகளில் பணி புரிவோருக்குக் கடன் நிதியுதவி!



# யோசனைகளை வரவேற்கிறோம்!

**கனரா வங்கியின் எக்ஸிக்யூடிவ் டைரக்டர் திரு. அலோக் மிஸ்ரா அளித்த பேட்டியிலிருந்து...**

**சென்னை மக்களைக் காக்க, அவர்களின் குடிநீர்ப் பிரச்னையில் தீர்வு காண, டீசலைனேஷன் திட்டத்தில் கனரா வங்கி பங்கு கொண்டிருப்பது குறித்து உங்கள் உணர்வுகள் என்ன?**

" 'மக்களைக் காக்க' என்பது மிக உயர்வான சொல்! சமுதாய நலன் சார்ந்த திட்டங்களில் கனரா வங்கி ஈடுபடுவது ஒரு நூற்றாண்டு காலமாகவே நடைபெற்று வருகிற பணி. ஒரு கார்ப்பரேட் அல்லது வணிக அமைப்பு செய்ய வேண்டிய சமுதாயக் கடமையாகவே இதைக் கருதுகிறோம்."

**பொதுவாகவே வங்கிகளிலும் குறிப்பாக ,கனரா வங்கியிலும் வேலை வாய்ப்பு நிலைமை எப்படி இருக்கிறது?**

"தற்போதைய இன்ஃபர்மேஷன் டெக்னாலஜியின் அபரிமித வளர்ச்சி காரணமாக, வங்கித் துறையிலும் பெரும் மாற்றங்கள் நிகழ்ந்து வருகின்றன. அதிவேக சேவை, மிக உன்னத வாடிக்கையாளர் சேவை - முக்கியமானதாகிவிட்டன. வணிக உலக மாற்றங்களால், தொழில்நுட்பம் நிறைந்த சேவைகள் அதிகரித்து வருகின்றன. குறிப்பாக, இன்ஃபர்மேஷன் டெக்னாலஜி, மார்க்கெட்டிங், ட்ரஷரி, ரிஸ்க் மேனேஜ்மென்ட், ஃபாரின் எக்ஸ்சேஞ்ச் துறைகளில் பொருத்தமான ஊழியர்களுக்கு வாய்ப்பு உண்டு. எங்கள் வங்கியில் இத்துறைகள் தவிர, வாடிக்கையாளர் தொடர்பு மற்றும் நிர்வாக இயலிலும் சிறப்பான நபர்கள் தேவைப்படுகின்றனர்."



• அலோக் மிஸ்ரா

**கனரா வங்கியில் வாராக் கடன்கள் நிலை என்ன?**

"கடந்த மார்ச் 2005-ஐ ஒப்பிடும்போது, மார்ச் 2006வரை ரூ.1125 கோடியிலிருந்து ரூ.879 கோடியாக நிகர வாராக் கடன் குறைந்திருக்கிறது. 25 லட்ச ரூபாய் வரையிலான கடன்களுக்கு 'ஸ்பெஷல் வாச்' அடிப்படையில் கண்காணித்து வருகிறோம். 'கிரெடிட் மானிடரிங்' எனப்படும் கடன் தொகை கண்காணிப்புப் பணிக்குச் சிறப்பான இடம்



கொடுத்திருக்கிறோம்."

**வாடிக்கையாளரிடமிருந்து யோசனைகளை வரவேற்பீர்களா? அவற்றைச் செயல்படுத்துவீர்களா?**

"எங்கள் பலமே வாடிக்கையாளர்தாம். அதனால் அவர்களின் நியாயமான யோசனைகளுக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்து வருகிறோம்."

**வாசகர்களுடன் வேறு என்ன பகிர்ந்து கொள்ள விரும்புகிறீர்கள்?**

"இரண்டாவது நூற்றாண்டுச் சேவையில் அடியெடுத்து வைக்கும் இச் சமயத்தில், எல்லாத் துறை வாடிக்கையாளர்களுக்கும் உயர்வான சேவை அளித்து, ஒரு வங்கி என்ற முறையில் தன் சமுதாயக் கடமைகளை நிறைவேற்றி, வளரும் இந்தியாவில் பல தேசிய இலக்குகளை எட்டி, ஒரு பெருமைமிக்க இடத்தை அடைய வேண்டும் என்பதே எங்கள் எண்ணம். இந்திய வங்கிகளிலே தலைமை இடத்தை எட்டி, உலகளவில் உன்னத நிலையை நாங்கள் அடைய வேண்டும். இந்தியாவிலுள்ள வங்கிகளில் தலைசிறந்த வங்கி இது என்பது எல்லோரும் அறிந்த உண்மை. வாடிக்கை யாளரை மையமாகக் கொண்டு, முழுத் திறமையோடு செயல் படும் வங்கி, கனரா வங்கி!

# "இரண்டாம் கருத்துக்கு இடமில்லை!"

"**நா**ங்கள் 91-ல் ஆழ்வார்பேட்டை வீட்டுக்கு வந்தோம். எனக்கு, எனது மனைவி, மகனுக்கு மூன்று பேருக்குமே அபிராமபுரம் கிளையில் அக்கவுண்ட் இருக்கிறது. அரசுப் பணியிலிருந்து ரிடையரானதும், என் பென்ஷன் அக்கவுண்ட்டும் இங்கேதான் வைத்திருக்கிறேன்.

முதலில் சொல்ல வேண்டியது, சேவை திருப்திகரமாக இருக்கிறது. பெரிதாகக் குறை என்று எதுவும் சொல்ல முடியாது. வங்கிக்குப் போனால் ஊழியர்கள் அல்லது ஆபீசர்கள் அளவிலேயே என் பணிகள் முடிந்து விடும். அது உண்மையிலேயே ஊழியர்களின் திறமையைக் காட்டுகிறது.

சில வேளைகளில் வாடிக்கையாளர்களில் சிலர், உள்ளே சென்று ஊழியர்களை நேரிடையாகச் சந்தித்துப் பேசுவதைப் பார்த்திருக்கிறேன். இது தவிர்க்கப்படலாம் என்பது என் கருத்து.

ஒரு சில யோசனைகளையும் இந்தச் சந்தர்ப்பத்தில் கூற விரும்புகிறேன்:

* Payable At par வசதியை, காசோலைகளைப் பொறுத்தவரை, சென்னையில் அறிமுகப்படுத்த வேண்டும். இதனால் வாடிக்கையாளர் பெருகும் வாய்ப்பு இருக்கிறது. Multi City Cheques வசதியை அறிமுகப்படுத்த வேண்டும்.
* அயல்நாட்டு நிதி பரிவர்த்தனை (ஃபாரீன் எக்ஸ்சேஞ்ச்) வசதி, கிளைகளில் இல்லை. இதற்காக வேறு கிளைகளுக்குப் போக வேண்டியிருக்கிறது. இதனால் தாமதம் ஆகிறது. எனவே பிரச்னையும் எழுகிறது.

கனரா வங்கியில் மேனேஜர் முதல் கடைசி ஊழியர் வரை சிநேகமான சேவையைத் தருகிறார்கள் என்பதில் இரண்டாம் கருத்துக்கே இடமில்லை!"

- டி.எஸ்.கிருஷ்ணமூர்த்தி, முன்னாள் தலைமை தேர்தல் ஆணையர்





# CANARA BANK CANARA BANK CANARA B

பாருங்களேன், அவர்களுடைய 'லோகோ'வை:
'சேவையில் வளர்ச்சி;
வளர்ச்சியில் சேவை.'

யோசிக்க வைக்கிற வாசகங்கள் இவை!

என்னுடைய சிறு வயதில், பெங்களூரிலிருந்தே கனரா வங்கியுடன் என் தொடர்பு ஆரம்பமாகிவிட்டது. அப்போதிலிருந்தே அவர்கள் சேவைத் தரம் இப்படித்தான் இருந்தது. அப்புறம் சென்னை வந்ததும் வீட்டுக்கு அடுத்த கட்டடமே கனரா பாங்க்தான்!

எந்தத் துறை ஆகட்டும், அதில் சிறப்பான இடத்தை அடைய வேண்டும். அதற்கு 'சின்சியரிடி' அவசியம். கனரா வங்கி சிறப்பான இடத்தைப் பிடித்திருக்கிறது என்றால், அதுதான் காரணம்!

ஒரு சின்னக் குறைகூடச் சொல்ல முடியாதபடி அவ்வளவு அருமையான சர்வீஸ். அதனாலேயே எனக்கு அத்தனை மகிழ்ச்சி. நானே 'நம்ம பாங்க்' என்றுதான் சொல்லுவேன்! எல்லா விஷயத்திலும் மிகவும் உதவிகரமான, நட்பான நிர்வாகம். ஆபீசர்களாகட்டும், மற்ற ஊழியர்களாகட்டும் புரிந்துகொண்டு செயல்படும் விதமே அலாதி! அதனாலேயே ஒரு 'ஹோம்லி பாங்க்'ஆக எனக்கு ஆகிவிட்டது!

Core Banking வரப் போகிறதாமே? நல்லது. எல்லாக் கிளைகளிலும் வரட்டும். எல்லோருக்கும் வசதியாக இருக்கும்.



- வைஜயந்திமாலா பாலி

எந்தக் காரியத்துக்காக அபிராமபுரம் கிளைக்கு வந்தாலும் மளமளவென்று வேலை முடிந்து விடும். எந்தக் குறையும் வைக்க மாட்டார்கள். வெரி ஃப்ரண்ட்லி ஸ்டாஃப்.



சென்டிமென்டலாகவும் எனக்கு இந்த பிராஞ்ச் மீது நம்பிக்கை அதிகம். ஏனென்றால் சில நல்ல விஷயங்களுக்கு எல்லாம் பணம் இங்கேதான் டிரா பண்ணுவேன்.

கோட்டூர்புரம் கிளையிலேயும் எனக்கு அக்கவுன்ட் இருக்கிறது. அங்கேயும் போவதுண்டு.

எப்போது போனாலும், அவர்களுக்கு என்று ஒரு ஸ்டாண்டர்டு வைத்திருக்கிறார்களே, அதில் ஒரு குறையும் வராமல் நம்மிடம் நடந்துகொள்வார்கள்.

- நித்யஸ்ரீ மகாதேவன்

## எங்கள் பாங்க்...

CANARA BANK

'நானாவது ஓர் ஆர்ட்டிஸ்ட் என்ற வகையில் எல்லோருக்கும் தெரிந்தவள். என்னிடம் வங்கி ஊழியர்கள் சிநேக பாவத் துடன் நடந்துகொள்வது வியப்பான விஷயம் அல்ல. ஆனால் வாடிக்கையாளர் எல்லோரி டமுமே அப்படி நடந்துகொள்ள கனரா பாங்க் ஸ்டாஃப் - ஆல் மட்டுமே முடியும்!

அங்கே ராதை என்ற ஊழியரை எனக்கு நன்றாகத் தெரியும். அப்படிக் குடும்ப சிநேகிதி போலப் பழகிவிட்டேன்! நான் பாங்க் வேலையாக அங்கே போனால் கவனிப்பது உண்டு. எந்தத் தராதரமும் பார்க்காமல் ஒரே மாதிரி சேவை அளிப்பது மகிழ்ச்சியாக இருக்கும்.

அதேபோல குறிப்பிட்ட அதிகாரி வந்துதான் நம்மைக் கவனிக்க வேண்டும் என்று இல்லாமல், ஒருவர் அங்கே இல்லை என்றால், இன்னோர் ஊழியர் வந்து கவனிக்கிற பாங்கு இருக்கிறதே, அதை வேறு எந்த வங்கியிலாவது பார்த்திருக்கிறீர்களா?

பிஸியாக இல்லாத சமயத்தில் வேண்டுமானால் நம்மை நன்றாகக் கவனிக்கக் கூடும். ஆனால் வேலைப் பளு அதிகமாக இருக்கும்போதும் நம்மைக் கவனித்து ஆவன செய் கிறார்களே, அதைப் பாராட்ட வேண் டாமா? மேனேஜிங் டைரக்டர் எங்கோ ஒரு தலைநகரில் உட்கார்ந்திருக்க, இப்படி ஆயிரக்கணக்கான கிளைகளில் நல்ல ஊழியர்களை நம்பித்தானே அவர் இருக்கிறார்? 'ஹ்யூமன் டச்' எவ்வளவு முக்கியம் என்பதை அவர்கள் நன் றாகவே உணர்ந் திருக்கிறார்கள்.

- **குயிலி,**
**நடிகை**



நான் பெருமைப்படக் கூடிய விஷயம், நான் அபிராமபுரம் கனரா பாங்க் கிளையின் ஓல்டஸ்ட் கஸ்டமர். என்னோட அக்கவுண்ட் எண் மூணு டிஜிட்தான் (இப்போ அஞ்சு டிஜிட் டெல்லாம் அக்கவுண்ட் வைத்திருப்பவர்கள் எண் தாண்டிவிட்டது!).



ஆனா ஒண்ணு; கர்ட் டஸியும், நம்மிடம் நடந்து கொள்கிற பண்பும் ஏ-1. வாடிக்கையாளர்கள்கிட்டே இவர்கள் காண்பிக்கிற ஃப்ரெண்ட்லி அப்ரோச் இருக்கிறதே... அது பிரமாதம். முதலில் புன்சிரிப்பு, அப்புறம் அன்பான உபசரிப்பு. இவை என் மனத்தைத் தொட்ட விஷயங்கள். அதனால்தான் வேறு எந்த வங்கியிலும் நான் கணக்கே வைத் துக்கொள்ளவில்லை. 'ஹிந்து' பத்திரிகை தினசரி வாழ்க்கையில் எப்படி ஓர் அங்கம்போல ஆகிவிட்டதோ, அதேபோல கனரா பாங்க்கும் ஓர் இன்றி யமையாத அங்கம் ஆகிவிட்டது!

- 'காத்தாடி' ராமமூர்த்தி

# கனரா பாங்க்!

# தொடரும் உறவு...

"சுமார் 40 ஆண்டுகளுக்கு மேலாகவே, நெய்வேலி லிக்னைட் நிறுவனத்துக்கும் கனரா வங்கிக்கும் உறவு தொடர்ந்து இருந்து வந்திருக்கிறது. 80-களில் 'பாண்ட்' வெளியிட்டபோது, கனரா வங்கிதான் முதன்மைப் பொறுப்பை ஏற்றுக் கொண்டது!'' என்கிறார் நெய்வேலி லிக்னைட் கார்ப்பரேஷனின் தலைவரும் நிர்வாக இயக்குனருமான எஸ்.ஜெயராமன். "அப்போது பாண்ட் டிரஸ்ட்டீஸ் ஆகவும் கனரா பாங்க்தான் செயல்பட்டது!"



சமீபத்தில் வங்கிகளின் கூட்டணியோடு செய்துகொண்ட ரூ.2500 கோடிக்கான நிதியுதவி ஒப்பந்தத்தில் கூட, நிபந்தனைகளை இலகுவாக்கி உதவியதைப் பாராட்டினார் ஜெயராமன்.

"நெய்வேலியின் இரண்டாவது சுரங்கத்தில், ஆண்டுக்கு 4.5 மில்லியன் டன் நிலக்கரியும், 500 மெகாவாட் மின் உற்பத்தி நிலையமும் தற்சமயம் தொடங்கி இருக்கிறோம். ராஜஸ்தானில் இரண்டு மில்லியன் டன் நிலக்கரி உற்பத்தியும், 250 மெகாவாட் மின் நிலையமும் தொடங்கப் போகிறோம். இதற்காகத்தான் ரூ.2500 கோடி ஒப்பந்தம்!

கனரா வங்கி சேர்மன் எம்.பி.என்.ராவ் அவர்களை இந்தியன் வங்கியின் சேர்மனாக இருந்தபோதே நன்கு அறிவேன். மிக விரைந்து செயல்பட்டு முடிவு எடுக்க அவர் ஒரு முக்கிய காரணம். கனரா வங்கியில் வாடிக்கையாளர் உறவு என்பது பாரம் பரியமாக இருந்து வருகிறது. இத்தனை வருடங்களாக அவர்கள் அதை இழந்து விடாமல் தொடர்ந்து காப்பாற்றி வருவதைக் குறிப்பிட்டாக வேண்டும். பாரத ஸ்டேட் வங்கிக்கு அடுத்ததாக இன்று முதலில் நிற்கும் வங்கி. கனரா வங்கிதான். இப்படிப்பட்ட வங்கியுடன் வணிகத் தொடர்பு வைத்துக்கொள்வது எங்களுக்குப் பெருமை தருகிறது.

> "கனராவுடன்
> வணிகம் செய்வது
> பெருமையானது!"

என்.எல்.சி. தமிழகத்துக்கு வெளியே பல்வேறு மாநிலங்களில் பல புதிய திட்டங்களைத் தொடங்கியிருக்கிறது. இவற்றுக்கு நிதியுதவி தேவைப்படுகிறது. கனரா வங்கி தொடர்ந்து தன்னுடைய பங்களிப்பைத் தரும் என்று நம்புகிறேன்'' என்கிறார் ஜெயராமன்.



CANARA BANK

* தமிழ்நாட்டில் கனரா வங்கியின் கிளைகள் 472 உள்ளன. இவை எல்லாமே கம்ப்யூட்டர் மயமாக்கப்பட்டவை. இவற்றில் 185 கிளைகளில் 'எனிவேர் பாங்க்கிங்' வசதி இருக்கிறது. 134 கிளைகளுக்கு ISO 9001:2000 சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கின்றன. 172 கிளைகளில் ATM வசதி இருக்கிறது.

# தமிழ்நாட்டில் கனரா வங்கி...

* தமிழ்நாட்டில் கனரா வங்கியின் மொத்த வணிகள் 22,636 கோடி ரூபாய். இது சென்ற ஆண்டைவிட 22.14% அதிகம். மொத்த வாடிக்கையாளரில் 47.45 லட்சம் பேர் டெபாசிட்தாரர்கள்; 10.27 லட்சம் பேர் நிதியுதவி பெற்றவர்கள்.

* மொத்த டெபாசிட் தொகை ரூ.12609 கோடி. சென்ற ஆண்டைவிட இது 18.32% அதிகம். மொத்த கிரெடிட் தொகை ரூ.10027 கோடி. சென்ற வருடத்தைவிட இது 17.28 சதவிகிதம் கூடுதல்! இதில், முன்னுரிமைக் கடன் தொகை எனப்படும் 'ப்ரையாரிட்டி செக்டார் அட்வான்ஸ்' ரூ.5676 கோடி.

* வேளாண்மைக்காக மட்டுமே கொடுக்கப்பட்ட கடனுதவி ரூ.2686 கோடி. இது சென்ற ஆண்டைவிட 38.17% அதிகம். சிறு தொழில்களுக்காக வழங்கப்பட்டிருக்கும் தொகை ரூ.1495 கோடி. இது 19.89% அதி கம்.

* மகளிர் தொழில் முனைவோர் மையம் சென்னையிலும் மதுரையிலும் செயல்பட்டு, மகளிருக்குப் பயிற்சிகள் அளிக்கப்பட்டு வருகின்றன. மகளிர் சுய உதவிக் குழுக்களும் கடனுதவி பெறுகின்றன.

* சுனாமியால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு 106 படகுகள் வாங்க கடனுதவி அளித்திருக்கிறது; தொகை ரூ.126.46 லட்சம்.

* PMRY எனப்படும் பிரதமர் வேலைவாய்ப்புத் திட்டத்தின் கீழ், தொடர்ந்து கடந்த மூன்றாண்டுகளாக இலக்கை எட்டி வருகிறது கனரா வங்கி.



வேறு எந்த வங்கியும் சிந்தித்துப் பார்க்காத திட்டம் ஒன்றை, கனரா வங்கி வெற்றிகரமாக நிறைவேற்றிக் கொண்டிருக்கிறது. 80களின் தொடக்கத்தில், வங்கி வெறும் கடன் மட்டுமே கொடுத்து உதவும் அமைப்பாக அல்லாமல், கிராமங்களின் ஒட்டுமொத்த வளர்ச்சியையும் அது மேற்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று. காரணம், அப்போது கிராமப்புறங்களில் அதிகக் கிளைகள் திறக்கப்பட்டு வந்தன. எண்ணம் என்னவோ மிக உயர்வானதுதான். ஆனால், அதை கிராமங்களில் இருந்து கொண்டு செயல்படுத்த ஊழியர்கள் முன் வர வேண்டுமே?

வந்தார்கள். 1982-ல் முதலில் பரீட்சார்த்தமாக நான்கு பேரை 'ரூரல் சர்வீஸ் வாலண்டியர்' என்று நியமித்து சேவையைத் தொடங்கினார்கள். இன்று 120 பேராக இந்த வாலண்டியர்கள் பட்டியல் வளர்ந்துவிட்டது! சுமார் 460 கிராமப்புறங்களில், 1,38,000 குடும்பங்களுக்கு இவர்கள் சேவை செய்கிறார்கள். இவர்களின் மொத்த சேமிப்பு 733 லட்ச ரூபாய் என்றால், கடன் உதவி 717 லட்ச ரூபாய்! ஒவ்வொரு ஊழியரும், தான் பங்கு கொள்ளும் கிராமப்புற முன்னேற்றத்தில், அரசின் நலத்திட்டங்கள் சில செயல்படுத்தவும் உதவுகிறார். சமுதாய முன்னேற்றத்தில் வங்கியின் விலை மதிப்பற்ற சேவை இந்த ஊழியர்களால் வழங்கப்படுவதை மீடியா கவனித்துப் பாராட்டியிருக்கிறது.

கேரளத்தில் வயநாடு பகுதியில் வாழும் ஆதிவாசிகளின் முன்னேற்றத்தில் அக்கறை காண்பித்தார் கண்டேல் வங்கிக் கிளையில் பணிபுரியும் ரூரல் சர்வீஸ் வாலண்டியர் கே.பி. அருண்.

சுமார் 325 ஆதிவாசிக் குடும்பங்களின் வாழ்க்கையையுமே மாற்றி அமைத்து விட்டார் அருண்! அப்படி என்ன செய்தார்?

கிராம மேம்பாட்டுக் குழுக்களை உருவாக்கினார். அவற்றின் துணையுடன் மருத்துவ முகாம்கள் நடத்தி, சிறப்பு கல்விப் பயிற்சி நடத்தி, விவசாயிகளுக்கு ஆலோசனைகள் அளிக்கும் குழு ஏற்படுத்தி ஆதிவாசிகளின் நலம் பேணி, ஒரு சமுதாயக்கூடம் கட்டி, சூரிய வெப்ப சக்தியால் இயங்கும் டி.வியையும் அங்கே வைத்துவிட்டார்.

இத்தனையும் போதாது என்று, ஆதிவாசிகளின் கலாசாரம் தனிப்பட வெளிப்படும் நிகழ்ச்சிகளை அவ்வப்போது ஏற்பாடு செய்தும் வருகிறார்!

மெக்கானிக்கல் இன்ஜினீயரிங் படித்த பி.செல்வகுமார் 95ல் கிளார்க் ஆகச் சேர்ந்து, பிறகு ரூரல் சர்வீஸ் வாலண்டியராக மாறினார். கேரளாவில் குடிசேரியிலும், அத்திப்பட்டியிலும் இவர் செய்து வரும் சமூகப் பணிகள் ஏராளம். ஒரு லட்ச ரூபாயில் சமுதாயக்கூடம் கட்டியிருக்கிறார். மேல்நிலை தண்ணீர்த் தொட்டியைச் சீராக்கிக் கொடுத்திருக்கிறார். கிராம மக்களுக்கு ஆரோக்கியம் குறித்த விழிப்புணர்வை அளித்து வருகிறார்!







பின்தங்கிய கிராமங்களில், பாதுகாக்கப்பட்ட குடிநீர் கிடைப்பது என்பது நினைத்துப் பார்க்கக்கூட முடியாது. இதைச் சாத்தியமாக்கி இருக்கிறது கனரா பாங்க் பிளாட்டினம் ஜூபிலி ரூரல்

CANARA BANK

டெவலப்மென்ட் டிரஸ்ட். கர்நாடகா, தமிழ்நாடு, கேரளா, உத்தரப் பிரதேசம் உட்பட நான்கு மாநிலங்களில் உள்ள 18 பின்தங்கிய கிராமங்களில் இப்போது பாதுகாக்கப்பட்ட குடிநீர் கிடைக்க வசதி

சனை மையம், முதியோர் நல உதவி மையம். பிரெய்ல் முறை டிரான்ஸ் கிருப்ஷன் மையம்... மகளிர் சிகிச்சைத் திட்டத்தின் கீழ், பெங்களூரையடுத்த ஹரோஹல்லி கிராமத்தில் வசதிகள்

# முதாய நோக்கு!

செய்து கொடுத்திருக்கிறது!

இத்தோடு நின்றுவிடவில்லை வங்கி. 52 டாக்டர்கள் கிராமப்புறங்களில் பணி புரிய உதவியிருக்கிறது! சேவக்ஷேத்ரா என்ற மருத்துவமனையை உருவாக்கிக் கொடுத்திருக்கிறது. இது தவிர, 120 படுக் கைகள் கொண்ட நவீன மருத்துவ மனையை உருவாக்கியிருக்கிறது. ஆதரவற்ற அனாதைச் சிறுவர் களுக்கு 'மாத்ரு சாயா' நிலையம், முதியோர் இல்லம், குழந்தை களுக்கும் மகளிருக்கும் ஆலோ

நிறைந்த பிரம்மாண்டமான மருத்துவ நிலையம்... எனப் பணிகள் தொடர்ந்து கொண்டிருக்கின்றன.

கிராமங்களில் கைவினைக் கலைஞர் களைக் காப்பாற்றும் வகையில், ஜோகரா டொட்டி என்ற ஊரில் ஒரு மையத்தை வங்கி உருவாக்கியிருக்கிறது. கே.பி.ஜே. பிரபு ஆர்ட்டிசன்ஸ் டிரெயினிங், புரொடக்ஷன் அண்ட் மார்க் கெட்டிங் என்று இதற்குப் பெயர். சோமசேகர், பயிற்சி



CANARA BANK CANARA BANK CANARA

பெற இங்கு சேர்ந்த கலைஞர். அவர் உருவாக்கிய கலைப் பொருட்கள் அவருடைய கலைத் திறனையும், கற்பனையையும் வெளிச்சத்துக்குக் கொண்டு வந்தன. பயிற்சி பெற வந்தவர், இப்போது பயிற்சியாளராக ஆகிவிட்டார்!



கிராமப்புறங்களில் உள்ள இளைஞர்களுக்கு பால்வளம், விதைகள், கால்நடைப் பராமரிப்பு, தேனீ வளர்ப்பு, தச்சு வேலை, ஸ்க்ரீன் பிரிண்டிங், பிளம்பிங், டி.டி.பி போன்றவற்றில் பயிற்சி அளிக்க கிராமப் புறத் தொழில் முன்னேற்ற சுய வேலை வாய்ப்புப் பயிற்சி மையம் ஹொன்னன ஹள்ளியில் தொடங்கப் பட்டுள்ளது. இதில் பயிற்சி பெற்றவர்களும், பலன் அடைந்தவர்களும் ஏராளம்.

மகளிருக்கு சுய வேலை வாய்ப்பும், பயிற்சியும், அவர்கள் சொந்தமாகத் தொழில் தொடங்கத் தேவையான வசதிகளும் அளிக்க உருவானதுதான் சென்டர் ஃபார் ஆன்ட்டர்ப்ருனர்ஷிப் டெவலப்மென்ட் ஃபார் விமன் (மகளிர் தொழில் மேம்பாட்டு மையம்). பெங்களூர், மங்களூர், சென்னை, மதுரை, சண்டிகர், பாட்னா, ஹைதராபாத், திருவனந்தபுரம் மற்றும் லக்னோவில் இந்த மையங்கள் வெகு சிறப்பாக இயங்கி வருகின்றன.

சமீபத்தில் சென்னையில், சென்னைப் பல்கலைக் கழகத்துடன் இணைந்து மகளிர்க்கான தொழில் மேம்பாட்டுப் பயிற்சிகள் நடத்தப்பட்டன. கனரா பாங்க் பிளாட்டினம் ஜூபிலி ரூரல் டெவலப்மென்ட் டிரஸ்ட் வாயிலாக, ஐந்து ஊர்களில் மகளிர் மேம்பாட்டுத் திட்டப் பயிற்சிகளை வங்கி அளித்து வருகிறது. சேமிப்புப் பழக்கம், சுகாதார விழிப்புணர்வு, குழந்தைகளின் கல்வி ஆகியவற்றை இந்த மையங்கள் வலியுறுத்தி, ஆலோசனைகள் வழங்குகின்றன.

**"ஐ.நா. சபையின் பொன் விழா விருது கிடைத்தது மிகப் பெருமையானது!"**

கேரளா மலப்புரத்தில் சிறுபான்மைச் சமூகத்தினருக்காகவே, சுப்பராவ் பய் செல்ஃப் எம்ப்ளாய்மென்ட் டிரெயினிங் இன்ஸ்டிடியூட் ஒன்றை வாண்டூரில் தொடங்கிச் சிறப்பாக நடத்தி வருகிறது வங்கி. சிறுபான்மையினரிடையே சமூக - பொருளாதார முன்னேற்றத்தை ஏற்படுத்துவதே இந்த அமைப்பின் பணி. இதில் பயிற்சி பெற்ற இளைஞரும் மகளிரும் ஆயிரக் கணக்கில் உள்ளனர்!

மகளிர் சுய உதவிக் குழுக்களுக்கு எப்படி வங்கி உதவுகிறதோ, அதேபோல சமுதாய முன்னேற்றச் சங்கம் எனப்



படும் கம்யூனிட்டி டெவலப்மென்ட் சொசைடியை ஆலப்புழையிலும், மலப்புரத்திலும் ஏழை மகளிரின் முன்னேற்றத்துக்காக வங்கி தொடங்கியது. இந்தச் சங்கங்களுக்கு ஐ.நா சபையின் பொன்விழா விருதுகள் கிடைத்தன என்பது வங்கி பெருமைப்படும் விஷயம்.

தமிழ்நாட்டின், கோவை, புதுப்புதூரில் டாக்டர் அம்பேத்கர் சுய வேலைவாய்ப்புப் பயிற்சி மையம் மூலமாக எஸ்.ஸி/எஸ்.டி இளைஞர்களுக்கு, வருவாய் தரும் தொழில்களில் ஈடுபடவும், தலைமை ஏற்றுப் பணிபுரியவும், வங்கி வகை செய்திருக்கிறது.

வயநாடு மலைப்பகுதிகளில் மரங்கள் வெட்டப்பட்டு, வனங்கள் அழிக்கப்படும் நிலையில், அங்குள்ள ஆதிவாசிகளின் நிலைமை சீரழிந்துவிடும் அபாயத்தை மனத்தில் கொண்டு, துவங்கப்பட்டதுதான் ஆதிவாசிகள் கவுன்சலிங் கோ-ஆர்டினேஷன் மையம். இதன் முழு வெற்றிக்குக் காரணம், வங்கியின் ஊழியர்கள் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு உழைத்ததுதான்!

கம்ப்யூட்டர் டிரெயினிங் சென்டர் ஃபார் அர்பன் புவர் என்ற அமைப்பை பெங்களூரில் 1999-ல் தொடங்கியது வங்கி. இதைத் தொடர்ந்து, கனரா பாங்க் இன்ஸ்டிடியூட் ஆஃப் இன்ஃபர்மேஷன் டெக்னாலஜியை கேரளாவின் ஆலப்புழையில் ஜனவரி 2001லும், திருவனந்தபுரத்தில் மார்ச் 2001லும் ஆரம்பித்தது. இந்த மையங்களில் நகர்ப்புற ஏழை இளைஞர்கள் கம்ப்யூட்டர் பயிற்சியில் எத்தனை வகை உண்டோ அத்தனையையும் பெற முடியும்.

வங்கியின் பொன்விழா ஆண்டை ஒட்டி, கனரா பாங்க் ஜூபிலி எஜுகேஷன் ஃபண்ட் மூலம்




**"1956ல் கல்விக்கு நிதி ஒதுக்கிய முதல் வங்கி கனராதான்!"**

தகுதியான மாணவர்களும், மாணவிகளும் மேற்படிப்பும் படிக்க வங்கி உதவியது. 1956ல் கல்விப் பணிக்கு நிதி ஒதுக்கிய முதல் வங்கி கனரா வங்கிதான் எனலாம்.

ஊழியர்கள் பெருமளவில் பங்கு கொள்ளும் திட்டம் ஒன்று செயல்பட்டு வருகிறது. மாதம் 3 ரூபாய் வீதம் ஊழியர்கள் முன் வந்து இந்த நல நிதியிலிருந்து அளிக்க, பள்ளிக்கூட ஃபீஸ், யூனிஃபார்ம், பை, அவ்வப்போது ஏற்படும் மருத்துவ செலவு எல்லாமே இந்த நிதியிலிருந்து, எளிய மாணவ மாணவிகளுக்கு அளித்து வருகிறார்கள்! ●



வீட்டிற்கு ஒன்பதாவது பையன். தூத்துக்குடி மாவட்டத்தில் குளத்தூர் கிராமம். அப்பா ராமலிங்கம் நாட்டுச் செக்கு (அந்தக் கால எண்ணெய்ச் செக்கு) வைத்திருந்தார். அப்பொழுது கடும் வறட்சி. வறுமை தாண்டவமாடியது வீட்டில். அந்தப் பையனின் ஒரு வயதில், பஞ்சம் பிழைக்க வேண்டி மதுரைக்கு இடம் பெயர்கிறது அந்தக் குடும்பம். வந்த இடத்திலும் எண்ணெய்ச் செக்கு வேலையில் ஈடுபட்டனர் அப்பாவும் அம்மாவும். பையனின் ஏழாவது வயதில் அப்பா இறந்து போனார். பின்னர் அம்மா மட்டுமே, அவ்வேலையில் ஈடுபட்டு பிள்ளைகளையும் குடும்பத்தையும் காப்பாற்றுகிறார். பால்யத்தில் தன் கண்ணெதிரே, தன் அம்மா படும் கடுந்துயர்களைக் கண்டு கண் கலங்குகிறான் அந்தச் சிறுவன். அவன் மனத்தில் அப்பொழுதே, பிற்காலத்தில் எப்படியும் நாம் ஒரு பெரிய எண்ணெய் மில் அதிபராக ஆகவேண்டும் என்கிற வெறி பிறந்து விடுகிறது.


• நடராஜன்

"அதனை வெறி என்று சொல்வதுதான் மிகவும் சரியானது" எனக் குறிப்பிடுகிறார் கே.எஸ்.ஆர்.நடராஜன்.

"வெறும் எண்ணம் மட்டுமே தோன்றியிருந்தால்கூட இந்தளவுக்கு உயர்ந்திருக்க முடியாது. அது உருவாகும் போதே ஒரு வெறியாக கிளர்ச்சி பெற்றதனால்தான் இந்த வெற்றியை எட்ட முடிந்தது" எனக் கூறும் அவர், "தற்போதும் இந்த நிலை போதும் என்று இருந்திட முடியவில்லை" என்கிறார்!

பதினெட்டு வயதில் வெறும் ஐநூறு ரூபாய் முதலீடும், ஒரு பழைய ஹெர்குலிஸ் சைக்கிளுடனும் சுயமாக எண்ணெய் வியாபாரத்தில் இறங்கியவர், இன்று 58ஆவது வயதில் நடராஜா ஆயில் மில்ஸ் பிரைவேட் லிமிடெட்டின் மேனேஜிங் டைரக்டர், அஞ்சலி நல்லெண்ணெய் நிறுவன அதிபர்.

"நல்லெண்ணெய் வணிகம் என்பது இரும்பு டின்னுக்குள் மட்டுமே அடைத்து வைத்து விற்பனைக்கு அனுப்பியபோது, மிகவும் குறுகிய வட்டத்திற்குள்ளேயே சுழன்று வந்தது. அதுவே பாலிதீன் பைகளில் கன்ஸ்யூமர் பேக்கிங்கில் வெளி வந்து பரவலாக வெற்றி கண்டது. அவ்வாறு வெற்றி கண்ட நான்கு நிறுவனங்களுள் அஞ்சலியும் ஒன்று. இதற்காக அஞ்சலி கடந்து வந்த பாதை கரடுமுரடானது. அந்தக் கடும் பயணத்தில் மதுரை கிராண்ட் சென்ட்ரல் கனரா வங்கி கிளை எங்களுடன் கைகோத்து வந்தது!" எனக் குறிப்பிடுகிறார் அஞ்சலி நல்லெண்ணெய் நிறுவன நிர்வாக இயக்குனராக உள்ள நடராஜன்.

# சுழல் முறை கடனில் செழித்திடும் வியாபாரம்!




மதுரையில் எண்ணெய் மில் ஒன்று 1978-ல் குத்த கைக்கு வந்தது. முப்பது வயதில் துணிந்து அதனை ஏற்கிறார் நடராஜன். ஒன்ட தாண்டு கால கடுமையான உழைப்பின் பயனாக அந்த மில்லையே கிரயம் பெற்று விடுகிறார். தொழிலை விருத்

செய்ய வேண்டுமென்கிற எண்ணம் மேலும் வலுப்பெறுகிறது. கோரிப்பாளையத்தில் விஜயா ஆயில் மில் ஒன்று உருவாகிறது. மதுரை - மேலூர் சாலையில் உத்தங்குடி கிராமத்தில் ஐந்து ஏக்கர் பரப்பளவில் நடராஜா ஆயில் மில் 1994-ல் இயங்கத் துவங்குகிறது. அடுத்த ஐந்து வருடங்களில் மேலும் பல உச்சங்களை அடையவும், நூற்றுக் கணக்கான லட்சங்களில் வரவு செலவுப் புள்ளிகளைத் தொடவும் சொந்த முதலீடு மட்டுமே போதாது என உணர்ந்து கொண்ட அந்த நிறுவனம், கனரா வங்கியின் கதவுகளைத் தட்டுகிறது...

**க**தவுகள் திறந்து கொண்டன. 1999-ல் ஒரு கோடி ரூபாய் கடனுதவி அளித்தது கனரா வங்கி. கடன் வாங்க, திருப்பிச் செலுத்த... கடன் வாங்க, திருப்பிச் செலுத்த... என்கிற படிப்படியான வளர்ச்சியில் இன்று, பல நிலைகளில் சுழல் முறை வங்கிக் கடனாக ஐந்து கோடி ரூபாய் அளவுக்குப் பெற்று, வளர்ச்சி விகிதத்தில் முன்னிலை பெற்றுள்ளது அஞ்சலி. இன்று அதற்கு நூற்றைம்பது பணியாளர்கள். தமிழகம் முழுவதுமாக நூற்றியெழுபத்தைந்து முகவர்கள். மும்பை, கொல்கத்தா, கொச்சின் மற்றும் பெங்களூர் போன்ற பெரு நகரங்களில் விற்பனையாளர்கள் என தனது வணிக எல்லையை விரிவுபடுத்தியுள்ளது அஞ்சலி நல்லெண்ணெய்.

"கடவுள் நமக்களித்திருக்கும் நல்ல வற்றுள் ஒன்று நல்லெண்ணெய். ஆனால் அதன் மகத்துவம் இன்றைய நாகரிக உலகில் மக்களுக்குச் சரியாகப் புரியவில்லை. இறைவன் நமக்களித்திருக்கும் நல்ல விஷயத்தை, மக்களுக்கு அர்ப்பணிக்கும் நோக்கிலே 'அஞ்சலி' எனப் பெயரிட்டேன். 2005 - 06ல் ISO-2000 தரச் சான்று பெற்றுள்ளது எங்கள் நிறுவனம். அதற்காக இந்த வருடம் இருபத்தைந் தாயிரம் ரூபாய் ரொக்கப் பரிசு வழங்கி எங்களைக் கௌரவித்துள்ளது கனரா வங்கி!" என்று பெருமிதப்படுகிறார் கே.எஸ்.ஆர். நடராஜன்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



# தூக்கிவிடும் தொலைநோக்கு!

ஸ்ரீ பெரும்புதூரில் உள்ளது செயின்ட் கோபெய்ன்ஸ் கண்ணாடித் தொழிற்சாலை. துடைத்து வைத்த கண்ணாடி மாதிரிதான் இருக்கிறது தொழிற்சாலை வளாகம். கார் வின்ட்ஷீல்ட் கண்ணாடிகள் அறைத் தடுப்புக் கண்ணாடிகள் தவிர, கலைநய மிக்க தயாரிப்புகள் இங்கேதான் உருவாகின்றன.

"இது பிரெஞ்சு நிறுவனம்... 1999-ல் கனரா வங்கியின் பெங்களூர் தலைமை அலுவலகத்தில், அப்போதைய சி.எம்.டி. டி.ஆர். ஸ்ரீதரனிடம் இந்தத் தொழிற்சாலை பற்றி ஒரு



சந்தானம்



பிரசன்டேஷன் நடத்தினோம். நுட்பமாகக் கவனித்தார்கள். அவர்களின் அணுகுமுறை எனக்குப் பிடித்தது. எங்களுக்குத் தேவையான நிதி கோரிக்கையை ஏற்று, சுறுசுறுப்பாக பிராசஸ் செய்தார்கள். சென்னை அலுவலகத்தில் இருந்தும் வங்கி ஆபீசர்கள் வந்து பார்த்தார்கள். இந்தக் கண்ணாடித் தொழிற்சாலையோ புதிது. ஆனாலும் கனரா வங்கி எங்களுக்குக் கைகொடுக்க முன் வந்தது!" என்கிறார் செயின்ட் கோபெய்ன்ஸ் நிர்வாக இயக்குனரான பி. சந்தானம்.

"நாங்கள் நூற்றுக்கு நூறு பன்னாட்டு நிறுவனம். உலகெங்கும் உள்ள எங்கள் நிறுவனம், வெளிநாட்டு வங்கிகளுடன்தான் கணக்கு வைத்துக்கொள்ளும். இந்தப் பின்னணியில், தேசியமயமாக்கபட்ட ஓர் இந்திய வங்கியை நாங்கள் தேர்ந்தெடுக்கக் காரணம் - அவர்கள் சேவை அற்புதமாக இருந்ததுதான்.

"கனரா வங்கியின் செயல்முறை தனிப்பட்டது. பனிச்சென்று முடிவு எடுக்கிறார்கள். நல்ல டீம் வொர்க் இருக்கிறது. அவ்வப்போது சென்னைக் கிளை அலுவலகத்திலிருந்து விசாரிக்கிறார்கள். அவர்கள் தலைமை அலுவலகத்துக்குச் சொல்லிப் புரிய வைக்கிறார்கள். கனரா வங்கியில் தொடர்ந்து வந்த எல்லா சி.எம்.டி.களுமே எங்களுக்கு ஆதரவாக இருந்திருக்கிறார்கள். தொடர்பு விட்டுப் போகாமல் வாடிக்கையாளரைத் தக்க வைத்துக் கொள்ளும் அவர்களின் அணுகு முறையைப் பாராட்ட வேண்டும்.

ஒரு தொழிற்சாலை உருவாகும்போது நிதி வசதி செய்து கொடுப்பது என்பது (பிராஜக்ட் லெண்டிங்) சாதாரணமாக வங்கிகளில் காண முடியாது. அதை கனரா வங்கி எங்கள் விஷயத்தில் காண்பித்தது. அவர்கள் தொலை நோக்கை வெளிப்படுத்தியது.

• செயின்ட் கோபெய்ன்ஸ் கண்ணாடி தொழிற்சா



# இரண்டாயிரத்து ஐந்நூறு முதல் ஒன்றரைக் கோடி வரை!

அந்தத் தனி மனிதர் வங்கிக்குள் நுழைகிறார். சிறு தொழில் ஒன்று தொடங்கி நடத்திட கடன் கேட்கிறார். முதன்முறையாக வங்கி அவருக்கு இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் கடனாகத் தருகிறது. பிரதி மாதம் வட்டி மற்றும் ஐந்நூறு ரூபாய் அசலையும் தவறாமல் செலுத்துகிறார்.

• தனுஷ்கோடி பாண்டியன்

வாங்கிய கடனை ஐந்து மாதத்தில் அடைத்து விடுகிறார். அந்த சாதாரண மனிதர் மதுரையில் இன்று ஒரு தொழிலதிபர். அவர், தனுஷ்கோடி பாண்டியன். ஆட்டோமொபைல் டீலர் கம்பெனி ஒன்றில், ஒரு ஸ்டெனோகிராபராகத் தம் வாழ்க்கையைத் துவக்கியவருக்கு, இன்று மதுரையில் ஆறு இடங்களில் தொழிலகங்கள். மேலூர் அருகே தெற்குத் தெரு எனும் கிராமத்தில் நூற்பாலை ஒன்று. தற்போது அவை அனைத்துமே சொந்த இடத்தில் இயங்கி வருகின்றன.

ஒரு நாள் மாலைப் பொழுது. தன்னுடைய ஐ.டி.ஐ. தோழன் சந்திரசேகரனைச் சந்திக்கிறார் இளைஞர் தனுஷ்கோடி. சந்திரசேகரன் தமிழ்நாடு மின்வாரியத்தில் அலுவலர். அதுவும் பர்சேஸ் செக்ஷனில். வாழ்க்கையில் முன்னேற அடுத்து என்ன செய்யலாம் என்று நண்பனிடம் விவாதிக்கிறார். மின் வாரியத்தில் குறிப்பிட்ட பணியிடத்தில் தாம் வேலை பார்ப்பதால், கான்கிரீட் மின் கம்பங்கள் தயாரிக்கப் பயன்படும் இரும்புக் கம்பி வேலைகளைச் செய்யத் துவங்குங்கள் என யோசனை சொல்கிறார் சந்திரசேகரன். அத்துடன் தமிழ்நாடு மின்வாரியத்துக்குத் தேவையான Electrical Line Construction Materialகளும் தயாரிக்கலாம் என்கிற எண்ணம் வருகிறது தனுஷ்கோடி பாண்டியனுக்கு.

எண்ணம் வந்து விட்டால் போதுமா? அது ஈடேற வேண்டாமா? ஸ்டெனோவாக வேலை. கையில் இருப்பதோ வெறும் ஐந்தாயிரம் ரூபாய் மட்டுமே. அப்போதுதான் கனரா வங்கியின் வாசலைத் திறந்து உள்ளே நுழைகிறார். 1969-ல் இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் மட்டுமே கடனாகத் தந்து அவரை உற்சாகப்படுத்தியது வங்கி. ஸ்ரீவிவேகானந்தா இண்டஸ்ட்ரீஸ் உருவானது.

படிப்படியாக மெல்ல மெல்ல வளர்ச்சிபெற்ற அந்தத் தொழிலகம், மதுரை நகரின் உள்ளே மேலும் ஐந்து இடங்களில் அதன் கிளைத் தொழிலகங்களைத் துவங்கியது. அங்கு உற்பத்தியான 24 அடி மற்றும் 30 அடி நீளம்கொண்ட



இரும்புக் கட்டமைப்புகளை லாரியில் ஏற்றி வெளியூர்களுக்கு அனுப்புவதில் சிரமம் நேர்ந்தது. சாதாரணமாக லாரியின் நீளம் பதினெட்டு அடி. கம்பிகள் வெளியே துருத்திக் கொண்டிருக்கும். இரும்புக் கம்பி கட்டமைப்புகளினால் பயணங்களின் போது மிகவும் இடையூறு நேர்ந்தது. ஒரு தொழிலகம் மேலும் ஐந்து தொழிலகங்களாக வளர்ச்சி அடைய உதவிய கனரா வங்கியே, இதற்கும் உதவ முன் வந்தது.

ஆம். இரண்டு பேருந்துகளின் சாஸியை வாங்கி அவற்றுக்கு அப்படியே லாரி வடிவத்தில் பாடி கட்டப்பட்டது. இதற்கும் கனரா வங்கியே உதவி செய்தது.

தமது மூன்றாவது மகன் ஜனார்த்தனன் இருபத்து மூன்று வயதில் வாகன விபத்தொன்றில் இறந்த பின், அதற்கு விபத்துக் காப்பீடு இழப்பீட்டுத் தொகையாக இருபது லட்ச ரூபாய் பெற்றார் தனுஷ்கோடி பாண்டியன். அதனையே முதலீடாக வைத்து மேலூர் அருகே தெற்குத் தெரு எனும் கிராமத்தில் ஜனா ஜான்சன் ஸ்பின்னிங் மில்ஸ் என்கிற நூற்பாலையைத் துவங்கினார்.

"நான் கேட்டபோதெல்லாம் மறுக்காமல் கடனுதவி செய்தது கனரா வங்கி. அதனால் என் தொழில் வளர்ந்தது. வங்கியின் மீது மாறாத விசுவாசம் வைத்திருக்கும் வாடிக்கையாளன் நான். அடிப்படையில் மிகவும் சாதாரண நிலையில் வாழ்க்கையைத் துவக்கியவன். இன்று ஆறு தொழிலகங்களும், ஸ்பின்னிங் மில் ஒன்றும் சொந்தக் கட்டடங்களில் இயங்கி வருகின்றன. என்னுடைய கடின உழைப்பும், என் நிழல் போலவே என்னுடன் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிற வங்கியின் வழிகாட்டுதலுமே இத்தனை வளர்ச்சிக்கும் காரணம். இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் வங்கிக் கடனை முதன்முதலாக அனுமதித்த கனரா வங்கி, இன்றைக்கு என் தொழிலகங்களுக்காக சுழல் கடனுதவியாக சுமார் ஒன்றரைக் கோடி ரூபாய் அளித்திருக்கிறது. கடன் தந்து தொழில் வளர்ந்த வங்கி, எங்கள் கனரா வங்கி!" என உரிமையுடன் பேசுகிறார் ஆர்.தனுஷ்கோடி பாண்டியன்.

- திருநாவு

## பிரத்யேக அணுகுமுறை!

கனரா பாங்க் என்றாலே சுமுகமான, நட்பான, உதவும் மனப்பான்மையுடன் சேவை தரும் வங்கி என்று தயங்காமல் சொல்லிவிடலாம்.

எங்கள் ஆட்வேல் நிறுவனத்தின் கணக்கு 1972 முதலே கனரா வங்கியில்தான் தொடங்கப்பட்டது. அதற்குப் பிறகு என் சொந்த அக்கவுண்ட்டும் செயின்ட் மேரி சாலைக் கிளையில் வைத்துக் கொண்டேன்.



கிளையில் என்னை எல்லோருக்குமே தெரியும் என்பதால் தாமதம் ஏதும் இல்லாமல் என் பணிகளைச் செய்து கொடுத்து விடுவார்கள். நிறைய மேனேஜர்கள் மாறி மாறி வந்தபோதும், சிலர் மரியாதை நிமித்தம் வீட்டுக்கே வந்து சந்தித்து விட்டுச் சென்றதும் உண்டு. அதே போல உயரதிகாரிகளும் என்னிடம் நலம் விசாரிக்காமல் இருந்ததே இல்லை.

கனரா வங்கியின் அதிர்ஷ்டம் எது என்றால், அவர்களின் ஊழியர்கள். தங்களை வங்கியுடன் வெகு இயல்பாக இணைத்துக்கொண்டு பணி செய்வார்கள்! பர்சனல் டச் இவர்களிடம் வெளிப்படையாகத் தெரியும். எத்தனையோ வாடிக்கையாளர்கள் இருக்கையில் இப்படி ஒரு பிரத்யேக அணுகுமுறையை அவர்கள் விடாமல் கடைப்பிடிப்பது, பாராட்டப்பட வேண்டிய அம்சம்.

- கோபுலு



# கைதூக்கிவிட்ட 'கீ லோன்'!

எங்கே இந்த கம்பெனி இழுத்து மூடப்பட்டுவிடுமோ என்கிற அபாயத்தின் உச்சகட்டம். நிறுவனத் தலைமையும், தொழிலாளிகளும் ஒருசேர துவண்டு நின்றிருந்த நேரம். ஆதரவுக் கரம் நீட்டியது கனரா வங்கி. தகுந்த சமயத்தில் ஆபத்பாந்தவனாக வந்து நின்ற வங்கியின் எல்லா வகையான கடனுதவிகளையும் பெற்று



• சங்கரநாராயணன்




எதிர்நீச்சல் போட்டது அந்த நிறுவனம். கனரா வங்கியின் வயது தற்போது நூறு எனில், வெற்றிக் கரையைத் தொட்டு விட்ட அந்த நிறுவனத்தின் வயது எழுபது.

மதுரையில் 1937-ல் துவங்கப்பட்டது தி சௌத் இந்தியன் மேனுபாக்சரிங் கம்பெனி. பதினெட்டு வயதில் எஸ்.சுப்பிரமணியன் என்பவர் தமது சகலை எம்.ராமலிங்கம் என்பவரைக் கூட்டாகச் சேர்த்துக் கொண்டு துவங்கிய நிறுவனம். சைபால் மற்றும் சில அலோபதி மருந்துகளையும் தயாரித்து வருகிறது. அவற்றுள் சைபால் மட்டுமே இங்கு அதிக அளவில் உற்பத்தி செய்யப்படுகிறது.

சார்ட்டர்டு அக்கவுண்ட்டன்ட்டான சங்கரநாராயணன், சைபால் நிறுவனத்தின் இன்றைய நிர்வாகப் பங்குதாரர். தமது நிறுவனம் ஒரு காலத்தில் நிலைகுலைந்து தடுமாறியதையும், அதிலிருந்து மீள கனரா வங்கி பெருமளவில் உதவியதையும் தம்மால் என்றைக்கும் மறக்க முடியாது எனக் குறிப்பிடுகிறார்.

கம்பெனி துவங்கியதிலிருந்து பாண்டியன் வங்கியில் கணக்கு இருந்து வந்தது. அதுவே பின்னர் அரசுடைமைச் சட்டத்தின் கீழ் கனரா வங்கியாக உரு மாற்றம் பெற்றது. அதன் தொடர் வாடிக்கையாளரே சைபால் நிறுவனம். 1972-ல் சைபாலின் நிதி நிலைமை மிகவும் மோசமாகிப் போனது. அதிலிருந்து மீள்வது எப்படி என்கிற கவலையிலேயே அதன் ஸ்தாபகர்களில் ஒருவரும், சங்கரநாராயணனின் அப்பாவுமான சுப்பிரமணியன் இறந்து விடுகிறார்.

சைபால் மற்றும் சில அலோபதி மருந்துகள் தயாரிப்புக்கு என சுமார் நூறு வகையான மூலப் பொருட்கள் தேவை. அதில் இவர்களின் அதிக பட்ச தயாரிப்பான சைபாலுக்கு ஐந்து வகையான மூலப்பொருட்கள் தேவை. வெளி மார்க்





# வீடு மாறினாலும்...

எங்கள் குடும்பம் மொத்தமும் கனரா பாங்க்கில்தான் அக்கவுண்ட் வைத்திருக்கிறார்கள்! அக்கா, தம்பி, அக்காவின் மகள் என்று மொத்தம் பதினைந்து கணக்குகளாவது தேறும்!

அது மட்டுமா, என் உறவினர்களே நிறைய அந்த வங்கியில்தான் வேலை பார்க்கிறார்கள்!

கனரா பாங்குக்காக நிறைய நாடகங்களில் நடித்திருக்கிறேன். அவர்கள் ஸ்டாஃப் கிளப்பில் நிறைய கலந்து கொண்டிருக்கிறேன். அவர்கள் மகளிர் அமைப்பில் கொலு வைத்தால், அதற்கும் போய் வந்திருக்கிறேன். ஒருமுறை வானொலியில் கனரா பாங்க் சம்பந்தமாக மகளிர் சேவை குறித்து ஒரு பேட்டிகூட எடுத்தார்கள்.

பாங்குக்கு நானே போகிற சமயங்களில் எல்லாம் பார்த்திருக்கிறேன்: மேனேஜர் மிஸ்டர் பிரபு, அவரே எழுந்து போய் வாடிக்கையாளர்கள் கேட்கிற என்ட்ரி எல்லாம் பார்த்துக்கொண்டு வந்து சொல்லுவார். யாரையும் காக்க வைக்க மாட்டார். கஸ்டமருக்குப் பொறுமையா பதில் சொல்லணும். இது முக்கியம். அதை இந்த வங்கியிலே நேரிடையா பார்க்கலாம்.

லோன் கேட்டு வருகிற சாதாரண மனிதர்களிடம் நிதானமாக விஷயத்தை எடுத்துச் சொல்லுவார்கள். அவர்களுக்கு புரொசீஜர், ஜி.ஓ. எல்லாம் பற்றி விளக்கிச் சொல்ல வேண்டும். கள்ளென்று விழக்கூடாது. பொறுமையாகப் பதில் சொல்லணும். அதனால்தான் பலர் வீடு மாறினாலும், வங்கியை மாற்றுவதே இல்லை! என் சக நடிகர் சிவகுமார், "நான் பெசன்ட் நகரில் அக்கவுண்ட் வச்சிருக்கேன். மாற்றவே மாட்டேன்!" என்பார்.

- சச்சு,

டீவி-மேடை நாடக நடிகை

கெட்டில் ஆர்டர் நிறைய இருக்கிறது. ஆனால் இங்கு உற்பத்தி செய்து அனுப்பி வைக்கும் நிலையில் மூலப்பொருட்கள் எதுவும் இருப்பு இல்லை. வாங்க நிதியும் இல்லை. விழி பிதுங்கி நின்றது சைபால் நிறுவனம்.

முழுவதுமாக பலமிழந்த சூழ்நிலையில், எல்லா வகையான ஊட்டச் சத்துகளும் தந்து உயிர் காத்திட வேண்டிய கட்டத்தில் கருணைக் கரம் நீட்டியது கனரா வங்கி.

"கீ லோன் சிஸ்டம் எனப்படும் கிட்டங்கி முதலீட்டுக் கடன் திட்டத்தின் வாயிலாக எங்களுக்கு உதவ முன் வந்தது கனரா வங்கி. ஒரு லட்ச ரூபாய் மதிப்புள்ள மூலப் பொருளுக்கு 25,000 ரூபாய் வங்கியில் நாம் செலுத்த வேண்டும். அந்த மொத்த மூலப்பொருளை வங்கியே வரவழைத்து, நம்முடைய கிட்டங்கியில் அதனை இறக்கி வைத்து, கிட்டங்கி சாவியை வங்கியே வைத்துக் கொள்ளும். நம்முடைய ஆர்டர்களுக்கேற்ப அவ்வப்போது தேவைப்படும் மூலப்பொருட்களின் மதிப்பினை மட்டும் நாம் வங்கியில் செலுத்தி, மூலப் பொருட்களைப் பெற்றுக் கொள்ளலாம். இந்தத் துருப்புச் சீட்டினை கெட்டியாகப் பிடித்துக் கொண்டோம். உற்பத்தியை துரிதப்படுத்தினோம். கீழே போய்க் கொண்டிருக்கும் ஒரு தொழிலகம் மேலேறிவர வேண்டுமெனில், கீ லோன் சிஸ்டம்தான் சிறந்தது என்பது என் அனுபவம்!" என்று சிலிர்ப்புடன் விவரிக்கிறார் சங்கரநாராயணன்.

"ஒரு வாடிக்கையாளருக்கு வங்கி என்னென்ன இனங்களில் கடன் தருமோ, அதன் எல்லா வழிகளிலும் கனரா வங்கி எங்களுக்குக் கடனுதவி அளித்தது. கடந்த பத்தாண்டுகளாக கனரா வங்கியில் எங்கள் நிறுவனக் கணக்கில் எங்களின் இருப்புத் தொகைதான் தொடர்ந்து இருந்து வருகிறது. இது எங்களுக்கு கனரா வங்கி பெற்றுத் தந்த வெற்றி!" என்கிறார்.

- இருள்நீக்கியான்



# சகோதரர் போல ஆலோசனை...

"இளம் வயதிலேயே கணவரை இழந்துவிட்ட எனக்கு, பணத்தை எப்படி முதலீடு செய்வது என்பதே தெரியாது. ஏன், ஒரு செக்கில் எப்படி எழுதிக் கையெழுத்துப் போடுவது என்றுகூடத் தெரியாது! எல்லாவற்றையும் பொறுமையாக விளக்கிச் சொல்லிப் புரியவைத்தவர் செயின்ட் மேரி சாலைக் கிளை மேனேஜர் எஸ்.என்.ஷ்யாம்சுந்தர்தான்!" என்கிறார் பாடகி கல்யாணிமேனன்.

"என் கணவரின் பென்ஷன் பணத்தை எப்படிப் பெறுவது என்றும் கனரா வங்கி மேனேஜர்தான் விளக்கி உதவினார். நான் அப்போது ஒரு வாடகை வீட்டில்தான் குடியிருந்தேன். ராஜீவ்மேனனும், கருணாமேனனும் சிறியவர்கள். வங்கி மேனேஜர் ஒரு நாள், 'நீங்கள் ஏன் வாடகை வீட்டில் குடியிருக்க வேண்டும்? ஒரு சொந்த ஃப்ளாட் வாங்கிக் கொள்ளலாமே?' என்று ஒரு சகோதரர்போல ஆலோசனை சொன்னார். நான் தயங்கினேன். 'நீங்கள் தைரியம் உள்ள பெண்மணி. நிச்சயம் சொந்த வீடு வாங்கிக் கொள்ளலாம்... எனக்குத் தெரிந்த ப்ரமோட்டர்ஸ் தான் சுமந்த் அண்ட் கம்பெனி. உரிமையாளர் சுப்பிரமணியத்தை உங்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன்' என்று என்னை அழைத்துக் கொண்டு போனார். அவர்கள் அப்போது கட்டிக் கொண்டிருந்த தின் மூர்த்தி அபார்ட்மென்ட்டில் எனக்கு ஒரு ஃப்ளாட் கிடைக்க ஏற்பாடு செய்தார். 'இந்தப் பெண்மணி கமாண்டர் மேனனின் மனைவி' என்று அறிமுகம் செய்வித்து, அட்வான்ஸ் தொகையைக் கட்டவும் ஏற்பாடு செய்தார்.



> கனரா வங்கி அல்ல... என் குடும்பம்!

எந்த வங்கி மேனேஜர் இவ்வளவு அக்கறை எடுத்துக்கொண்டு ஒரு வாடிக்கையாளருக்கு உதவுவார்? என்னுடைய வாழ்க்கையில் எனக்கு அதிர்ஷ்டம் போலக் கிடைத்தது அந்த வீடு. ராஜீவ் மேனன் சினிமா துறையில் புகழ் பெறவும், அவன் தம்பி கருணாமேனன் யூனிவர்சிட்டியில் முதலில் வந்து ஐ.ஏ.எஸ் படிக்கவும் அந்த ராசியான வீடுதான் உதவியது என்று நான் இப்போதும் நம்புகிறேன்!

ராஜீவ் மேனனின் தொழிலுக்காகக் கருவிகள் வாங்கவும் உடனே உதவிக் கரம் நீட்டியது வங்கிதான். எனக்கு என்னவோ கனரா வங்கி ஒரு வங்கி அல்ல, என் வீடு, என் குடும்பம் என்றே தோன்றும் அளவுக்கு அவர்களின் அன்பான சேவை இருந்து வந்திருக்கிறது. ஆனால் எனக்கு மட்டுமா அவர்கள் இத்தகைய சேவை தருகிறார்கள்? எல்லோருக்கும் அதே மாதிரி சேவையைத்தானே தந்து கொண்டிருக்கிறார்கள்? என் கணக்கில் குறைந்த பேலன்ஸ் இருக்கும் போதும் எனக்குக் காண்பிக்கும் சலுகையில் எந்தக் குறையும் இருக்காது! சரி, அவர்களிடம் ஏதாவது குற்றம் குறை கண்டுபிடித்துச் சொன்னால் கூட, அதை யோசனைபோல எடுத்துக்கொண்டு நடந்து கொள்ளும் குணம் இருக்கிறதே, அதைப் பாராட்டியே ஆக வேண்டும்."



NARA BANK CANARA BANK CANARA B

* இந்த 2006 - 07 ஆண்டுக்கான மொத்த வணிகம் ரூ. 2,33,000 கோடி அளவுக்கு இருக்கும். இதில் ரூ.1,38,000 கோடி டெபாஸிட்; ரூ.95,000 கோடி அட்வான்ஸ்.

* அட்வான்ஸ் அல்லது கடனுதவி கொடுப்பதில் சிறிய மற்றும் நடுத்தர தொழிலமைப்புகள், விவசாயம் மற்றும் ரீடெய்ல் எனப்படும் தனி வாடிக்கையாளர் துறைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படும்.

* முழுமையான வங்கிச் சேவைக்கான 'கோர் பாங்க்கிங்' நடைமுறையை 1000 கிளைகளில் நடைமுறைக்குக் கொண்டு வரத் திட்டம் வைத்திருக்கிறோம்.

* வங்கியின் பெயரை முதன்மையாக நிலை நிறுத்தும் வகையில், அதன் பணிகள், சேவைகள், ஊழியர்கள், ஒட்டுமொத்த வங்கி நிர்வாகம் ஆகிய எல்லாத் துறைகளையும் மதிப்பீடு செய்து அவசியமான மாற்றங்கள் செய்ய இருக்கிறோம்.

* வங்கியின் துணை நிறுவனங்கள் அல்லது சேவை அமைப்புகள் வளர்ந்துவிட்டதால், கனரா வங்கி இப் போது ஒரு மிகப்பெரிய ஃபைனான்ஷியல் சூப்பர் மார்க்கெட் நிலைக்கு உயர்ந்து விட்டது. இதை இன்னும் விரிவுபடுத்தி வளர்ச்சி காண முனைவோம்.

* தொலைநோக்குப் பார்வை - 2010 என்ற திட்டத்தின் கீழ் கனரா வங்கி உலகளாவிய வங்கியாகச் செயல்படும் நிலைக்கு உயரத் தேவையான சிறந்த பணி முயற்சிகளை மேற்கொள்வோம்.

பேட்டி, கட்டுரைகள் : **சாருகேசி** படங்கள்: **யோகா**

# இந்த ஆண்டு என்ன இலக்கு?



இந்தச் சிறப்பு வெளியீடு தயாரிக்கத் துணையாக இருந்த -

திரு ஜே.எஸ்.வாசன் (ஜி.எம். பெங்களூர்)
திரு பிரபா (ஜி.எம்., பெங்களூர்)
ஸ்ரீமதி மைதிலி கிருஷ்ணமூர்த்தி (டி.ஜி.எம், பெங்களூர்)
திரு ஜி. சந்திரகாந்தன் (ஏ.ஜி.எம், பெங்களூர்)
திரு என். ரமணி (டி.ஜி.எம், சென்னை)
திரு பிரபாகர் (சென்னை)
திரு பகவான்தாஸ் (டிஜிஎம், சென்னை)
திரு ஆர்.பாஸ்கரன் (ரிலேஷன்ஷிப் மேனேஜர், மதுரை)
திரு வி.ராஜகோபாலன், சீனியர் மேனேஜர் (சி.எஸ்.பி)
ஸ்ரீமதி வி.கீதா (சீனியர் மேனேஜர், சென்னை)
திரு எம்.எஸ். ராமபிரபு (சீனியர் மேனேஜர், சென்னை)
திரு எஸ்.ராகவன் (சீஃப் மேனேஜர், சென்னை)

ஆகியோருக்கு எங்கள் மனமார்ந்த நன்றி!



